உ

ஓம் தத்ஸத்

பரப்பிரஹ்மணேநம:

ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதீபூஜ்ய பாதசிஷ்ய

ஸ்ரீ ஸதாசிவேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளால்

திரட்டப்பட்ட

# ஸ்ரீ ஸூதஸம்ஹிதா ஸாரமும்,

இதற்கு

பிரஹ்மஸ்ரீ,

கல்லிடைக்குறிச்சி - சுப்பைய சாஸ்திரிகள்

அவர்களால் இயற்றப்பட்ட

பதவுரை - பொழிப்புரை - விருத்தியுரையும்.

இவை,

பிரஹ்மஸ்ரீ, அருட்கவி, ந. சுப்பிரமணிய அய்யாவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

திருவல்லிக்கேணி,

"நோபில்" அச்சியந்திர சாலையில்,

பதிப்பிக்கப்பட்டன.



முதற் பாகம்

1925

விலை ரூபா 1. காபிரைட் ரிஜிஸ்டர்ட் தபாற்செலவு வேறு

சிவம்

# முகவுரை.

ஸ்ரீ ஸூதஸம்ஹிதாஸாரமென்னும் இந்நூல், ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் சிஷ்யரும், நெரூரில் பரிபூர்ணப் பிரஹ்ம பாவத்தைப்பெற்று விளங்கும் சிவயோகி ஸ்ரீ ஸதாசிவேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளால் திரட்டப்பட்டது. இது, திரட்டப்பட்டு சுமார் 150 வருடங்களுக்கு மேலாகியும், இதுகாறும் அச்சிடப்படவில்லை. ஏட்டுப்பிரதிகளும் கிடைத்தற்கரிதாய் விட்டன. ஆதலின் இதை அச்சிடுதல் அத்தியாவசியமென அறிந்து, அங்ஙனம் செய்வது தமிழ் மக்கட்கும் பயன்படுமாறு, கல்லிடைக்குறிச்சி, பிரஹ்மஸ்ரீ சுப்பைய சாஸ்திரிகளவர்கள் பதவுரையோடு, தாற்பரியமும், பிரஹ்மவித்யாப் பிரகாசிகையென்னும் விருத்தியுரையும் இயற்றி அச்சிட முயன்றனர். பல அன்பர்களின் திரவிய சகாயத்தால் இம்முதற்பாகம் அச்சிட்டு முடிந்தது. மற்றொரு பாகமும் ஸ்ரீபரமேச்வரன் கருணையால் சீக்கிரம் அச்சிடப்பட்டு வெளிவரும். அன்பர்கள் இந்த முதற்பாகத்தை ஆதரித்தது போலவே இரண்டாவது பாகத்தின் பூர்த்தி விஷயத்திலும் ஊக்கங் கொண்டு ஆதரித்து உதவி புரிவார்களாக.

அடியேனது அற்ப அறிவிற்கெட்டிய வரையில் ஸ்ரீசிவகுரு, குகப் பெருமான் அருளினால் இந்நூல் பரிசோதிக்கப் பெற்றுள்ளது. பிரமாதாதி தோஷங்களால், அடியேனுக்கு விளங்காத பிழைகள் பல இருக்கலாம். அறிந்த பண்டிதர்கள் தெரிவிப்பின், மிக்க வந்தனத்துடன் ஏற்றுக்கொண்டு மறுபதிப்பில் திருத்தப்படும்.

இதை எமது இஷ்டம்போல் அச்சிட்டுத்தந்த நோபில் அச்சியந்திரசாலைத்தலைவரது நன்றி என்றும் மறக்கற்பாலதன்றாம். சிவம்.

ஸ்ரீ பிரஹ்ம வித்யா ஸபை,<br>திருவேட்டீச்சுரம்,<br>குரோதன, வைகாசி, கஉ

ந. சுப்பிரமணிய அய்யர்.

# ஸூதஸம்ஹிதாஸார
# விஷய ஸூசிகை.

---

# பிழைத் திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6. | 23. | ஆஹஙுரஹ | ஙஹுரஹ |
| 10. | 5. | கவூி | கவூி |
| 16. | 15. | வாஸ்வத்தை | வாஸ்தவத்தை |
| 20. | 6. | கெவலம் | கெவலஃ |
| 21. | 18. | ஷிஂஹஃ | ஷிஂஹாஃ |
| 29. | 18. | ஶாதாநாஂ | ஶாதாநஂ |
| 30. | 3. | வைஶ்ருஷவி | வைஶ்ருஷவி |
| ,, | 18. | வைடிஂ | ஹடிஂ |
| 32. | 7. | வூிபெz | வூிபெ |
| ,, | 16. | நாபருப | நாமருப |
| ,, | 23. | வைஷாக | வைஷாக் |
| 33. | 2. | வை ஷணொ | வைஹணொ |
| ,, | 10. | ஶாஆர | ஶாஆ |
| ,, | 25. | ஸஶ்ரூஷிஃ | ஸதஶ்ரூஷிஃ |
| ,, | ,, | நாஸவெதாத | நாஸவெதா |
| 38 | 2. | தருயொ | ஆயெ |
| ,, | 22. | ஆயொ | ஆயெ |
| ,, | 26. | நூஷூாஶ | நூஷூாஃ |
| 39 | 5. | ஷெஷிகி | வெஷிகி |
| ,, | 27. | திர | திரய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 41. | 10. | [illegible] | [illegible] |
| ,, | 11. | [illegible] | [illegible] |
| ,, | 23. | ஸாரர | ஸார |
| 42 | 16. | [illegible] | [illegible] |
| 46. | 7. | [illegible] | [illegible] |
| ,, | 14. | [illegible] | [illegible] |
| 54. | 25. | வியாக | வியாபக |
| 56. | 6. | [illegible] | [illegible] |
| 64. | 7. | பிரகஆசா | பிரகாசஆ |
| 68. | 15. | யடையந்த | யடைந்த |
| 69. | 5. | கனில் | களில் |
| 73. | 2. | [illegible] | [illegible] |
| 79. | 16. | கருனை | கருணை |
| ,, | 25. | வானை | வாஸனை |
| 82. | 15. | பிரகாசம் | பிரகாரம் |
| 83. | 10. | [illegible] | [illegible] |
| 89. | 22. | மின்ப - கண் | மின்பங் - கண் |
| 95. | 8. | [illegible] | [illegible] |
| 100. | 8. | [illegible] | [illegible] |
| 101. | 3. | [illegible] | [illegible] |
| 107. | 27. | [illegible] | [illegible] |
| 125. | 8. | எப்பொதும் | எப்பொழுதும் |
| 127. | 17. | [illegible] | [illegible] |
| ,, | 26. | [illegible] | [illegible] |

உ

ஓம் தத்ஸத்

# ஸ்ரீ ஸதா சிவப்பிரஹ்மேந்திர சரித்திரச் சுருக்கம்.

ஸ்ரீஸதாசிவப் பிரஹ்மமென்று பிரக்கியாதி யடைந்த ஸதாசிவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஒரு அவதூதர். இவர் சுமார் 200வருஷங்களுக்கு முன்னர் தென்னிந்தியாவில் காவிரியாற்றங்கரையில் சஞ்சாரம் செய்தவர்.

## வித்தியாப்பியாசம்.

இம்மகான், தன் இளமையில், திருவிசை நல்லூர் என்னும் கிராமத்தில் கல்வி பயின்றவர். அப்போது இவருடன் சகபாடிகளாயிருந்தவர் இராமபத்திர தீட்சிதரும், அய்யா அவாளென்று பிரசித்தி பெற்ற வெங்கடேசரும், மஹா பாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திரியாருமே யாம். சதாசிவேந்திரர் இயற்கையிலேயே அறிவாற்ற லமைந்துள்ளவராயிருந்தமையின், தாம் தமது சகபாடிகளைக் காட்டிலும் மிக்க நுண்ணறிவுடையவராய் விளங்கி யிருந்தனர். சிற்சில சமயங்களில் இவர் தமது குருவோடும் வாதஞ் செய்வது வழக்கமாம். இங்ஙனம் இவரது வித்தியாப்பியாசம் பூர்த்தியாயிற்று.

## வைராக்கிய உற்பத்தி.

வித்தியாப்பியாஸ முடியுங் காலத்தில் ஒருநாள், இவரது பத்தினி பருவமடைந்ததாகக் கேள்விப்பட்ட இவரது தாயார், அன்று விசேஷ போஜனம் சமைத்தனர். இதனால் சமையல் முடிய நேரமாயிற்று. அன்று வழக்கம்போல் சதாசிவபிரஹ்மம் வீட்டிற்கு வந்து பார்க்கச் சமையல் முடியாமல் இருப்பதையும் அதற்குக் காரணத்தையும் தெரிந்து

கொண்டு பின் வருமாறு யோசிக்கலானார். "சமுசாரமுளை கிளம்புவ தற்கு முன்னரே போஜனகாலந் தாழ்ந்தது. முளைத்தால் அதனால் உண்டாந் துன்பத்திற்களவுண்டோ! ஆஹா பெருந்துன்ப மிச்ச சமுசாரம்." என்று நன்காராய்ந்து உடனே வீட்டை விட்டு வெளிக் கிளம்பி ஞானசாரியனையடையப் புறப்பட்டனர். அன்று முதல் உலகத் திற் சிறிதும் இன்பம் இல்லையென்றுநிச்சய முடையவராய் விஷ யங்களை வெறுத்து, மைத்திரி, கருணை, முதலிய நற்குணங்களுடன், ஜாதிமத வித்தியாசமின்றி ஸமதரிசியாய்ப் பசிக்கு எது கிடைப்பினும் அதை வாங்கி உண்பவராய் விளங்கினர். ஒருவரும் அன்னம் கொடாதகாலத்தில் உச்சிஷ்டத்தை (எச்சிலை)யும், உண்பர். இங்ஙனம் ஒழுகும் இம்மகாத்மாவை அறியாதார் பைத்தியம் பிடித்தவரென்று நிர் மானித்திருந்தனர்.

## குரு ஸந்தரிசனம்.

இங்ஙனமிருக்க ஒருநாள் இவர் பரமசிவ அனுக்கிரகத்தினால் ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைக் குருவாக அடைந்தனர். இவர் சற்குருவினிடம் அதிவிரைவில் யோகத்திலும் ஆத்ம அபரோ க்ஷத்திலும் சித்தியடைந்தவராயினர்.

## மௌனவிரதம்.

இங்ஙனம் விளங்கிய ஸ்ரீ சதாசிவேந்திரர் தமக்குள்ள சாஸ் திர பாண்டித்தியத்தினால் தமது குருவினிடம் வருபவரை யெல்லாம் பற்பல கேள்விகளைக் கேட்டு அவமானப்படுத்திக் கொண்டிருந்தனர். இதைப் பரமசிவேந்திரர் அறிந்து "சதாசிவ! எப்பொழுது உன் வாய் மூடுமோ!" என்று கோபக் குறிப்புடன் கூறியருளினர். உடனே பிரஹ்மம் தமது விவேக மின்மையை உற்று நோக்கி, அன்று முதல் மௌன விரதத்தை மேற்கொண்டு தமது குருவை வணங்கித் தமது குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டு சற்குருவின் உத்தரவு பெற்றுப் பரதேசியாய்க் கோயம்புத்தூர் ஜில்லாவில் அமராவதி நதி தீரத்தில் சஞ்சரிப்பவராயினர்.

## பிரஹ்மேந்திரரின் அமாநுஷச் செய்கைகள்.

(1) இங்ஙனம் அமராவதியின் காவிரி நதிதீரத்தில் ஆத்மாநுபவம் மீக்குறச் சமாதிபயின்று வருநாளில், ஒருநாள் திடீரென்று காவிரியில் வெள்ளம் வர, அங்குச் சமாதி புரிந்திருந்த பிரஹ்மேந்திரரை வெள்ளம் அடித்துக்கொண்டுபோய் மணலில் செருகிவிட்டது. கரையின் மீதிருந்த ஜனங்கள் ஸ்வாமிகளை வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டதேயென்று மிகவும் மனம் வருந்தி வீட்டிற்குச் சென்றனர். சுமார் மூன்றுமீ காலங்கழித்து நதிக்கால்வாயை வெட்டுகையில் ஸ்வாமிகள் சமாதி கலைந்து ஒன்றுமறியாதவர்போல் போவாராயினர்.

(2) மற்றொரு நாள் கரூரை அடுத்துள்ள ஓர் கிராமத்தில், குடியானவன் ஒருவன், களத்தில் நெல் அம்பாரம் போட்டு விட்டுக் காவல் வைத்து வீட்டிற்குப்போனன். அன்று அமாவாசையானதால் வானம் கறுக்கலாயிருந்தமையால், அவ்வழியே போக நேர்ந்த பிரஹ்மேந்திரர், அம்பாரம் தடுத்துக் கால் இடறிக் கீழே விழுந்தனர். இவரைத் திருடனென்று சந்தேகித்துக் காவலாளர் இவரை அடிக்கக் கைகளில் தடிகொண்டு நோக்கினர். உடனே மேல் நோக்கிய கைகள் கீழே இறங்காமலும் வைத்த கால்கள் பெயராமலும் பொழுது விடியும் வரையிலிருந்தன. பொழுது விடிந்ததும் ஸ்வாமிகள் போயினர். காவல்காரர்களுக்கும் கைகால்கள் சுவாதீனமாயின.

(3) பின்னுமொருநாள் தலையாரிகள் சிலர் ஒரு தாசில்தாருக்காக விறகுச்சுமை யொன்றை பிரஹ்மேந்திரர் தலையில் சுமத்திக்கொண்டு வந்தனர். ஸ்வாமிகள் அச்சுமையைத்தன் தலையினின்றும் கீழேபோட்ட உடனே அது தீப்பற்றி எறிந்து விட்டது.

(4) இவர் எப்பொழுதும் சிறுபிள்ளைகளுடன் கொஞ்சிக் குலாவி விளையாடுவது வழக்கம். ஒருநாள் சில பிள்ளைகள் மதுரையில் நடக்கும் ரிஷபவாகன உற்சவத்திற்குப் போகவேண்டுமென்று சுவாமிகளை வேண்டச் சுவாமிகள் அவர்களின் விருப்பத்திற்கிணங்கி அவர்களைத் தமது தோள்களிலும் முதுகிலும் ஏறிக்கொள்ளும்படி பணித்து

அவர்களை ஒரு கணநேரம் கண்களை மூடிக்கொள்ளும்படிச் சொல்லினர். மறுக்ஷணத்தில் அச்சிறுவர்கள் மதுரையில் ரிஷபவாகன உற்சவத்தைத் தரிசித்துக்கொண்டிருப்பதாகக் கண்டனர். என்னே ஆத்மசித்தரின் பெருமை!

(5) இந்தஞான சித்தர் மஹாசிவராத்திரி, கோகுலாஷ்டமி முதலிய புண்ணியகாலங்களில் ஒரு காலத்திலேயே பல க்ஷேத்திரங்களில் இருந்ததாகவும் காணப்பட்டிருக்தனர்.

(6) படிப்பின் வாஸனை சிறிதுமின்றிய ஒரு பிரஹ்மசாரிக்கு இம்மகான் கருணை கூர்ந்து ஸ்ரீ ரங்கநாதருடைய தரிசனம் செய்வித்து ஸ்ரீ மேதாதக்ஷிணாமூர்த்தி மந்திரத்தை உபதேசித்து அவனை அரசரும் போற்றத்தக்க சிறந்த பண்டிதனாக்கினர்.

(7) வேறொருநாள் பிரஹ்மேந்திரர் திகம்பர கோலத்துடன் ஒரு மகம்மதியன் வீட்டு வழியே போவாராயினர். அம்மகம்மதியன் தன் பத்தினியோடு அறையில் இருக்கும்போது நிர்வாணமாய்ச் செல்லும் இவரைக் கண்டு வெகுண்டு தனது வாளினால் ஸ்வாமிகளின் ஒரு கையை வெட்டி விட்டனன். தன் கை வெட்டுண்டு கீழே விழுந்ததையும் உணராது மேது பிரஹ்மேந்திரர் போய்க் கொண்டேயிருந்தனர். இதனைக் கண்டு அம்மகம்மதியத் தலைவன் ஆச்சரியங்கொண்டு அவர் மகானெனத்தீர்மானித்துத் தான்செய்த குற்றத்திற்கு அஞ்சி அவரைத் தொடர்ந்து சென்று சுவாமிகளுக்கு அறிவிக்கச் சுவாமிகள் மற்றோர்கையால் முடமாகிய கையைத்தடவ அது முன்போல்வளர்ந்து விட்டது. இதனைக்கண்ணுற்று அளவிலாப்பேரானந்தங்கொண்டு அம்மகமதியத்தலைவன் ஸ்வாமிகளை வணங்கி அநுக்கிரகம் பெற்றுச் சென்றனன்.

(8) ஸ்ரீ சதாசிவப்பிரஹ்மம் சிலகாலங்களில் ஆலயங்களிற் சென்று அர்ச்சனா மந்திரங்களை யுச்சரிப்பதுமுண்டு. அப்பொழுது ஒவ்வொரு மந்திரத்துக்கும் ஒவ்வொரு புஷ்பம் அந்தரத்தினின்று அம்மூர்த்தியின் சிரஸின்மீது விழுவது வழக்கமாம்.

(9) இவர் கண்டன யோகத்திற் சித்தி பெற்றவர். இராக்காலங்களில் இவரது எல்லா அவயவங்களும் தனித்தனியாயிருக்கப் பலர் கண்டிருக்கின்றனரென்று தெரிகின்றது.

இம்மஹான் இயற்றியுள்ள அற்புதச் செயல்கள் பலவுள. விரிவஞ்சி இங்குக் கூறாது விடப்பட்டன.

## தோண்டமானுக் கருள்புரிதல்.

1730 முதல் 1769ஆு வரையில் புதுக்கோட்டையை ஆண்டிருந்த சிவஞானபுரம் துரையென்று வழங்கும் விஜய ரகுநாத தொண்டமானென்பவர், 1738ஆுத்தில் புதுக்கோட்டைக்கு அருகேயுள்ள திருவரங்குளத்திற்கடுத்த காட்டில் திரிந்து கொண்டிருந்த சதாசிவப் பிரஹ்மத்தைத் தரிசித்தனர். இத்தொண்டமான் மிகவும் விரக்தபுருஷர். ஸத்துவகுணமுள்ளவர். இவர் ஷை சுவாமிகளை 8-ஆு பின்தொடர்ந்து சென்று கடைசியில் சுவாமிகளின் அநுக்கிரகமடைந்தனர்.

பிரஹ்மேந்திரர் மௌனியாதலினால் தொண்டமானுக்கு மணலில் எழுதி உபதேசித்தனர். அன்றியும் மற்றும் தெரிந்துகொள்ளவேண்டியவற்றிற்குத் திரிசிரபுரத்திற்கடுத்த பிக்ஷாண்டார் கோயிலிலுள்ள தமது சகபாடி மகாபாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திரிகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுமாறும் ஆஞ்ஞாபித்தனர். அங்ஙனமே சக்ரவர்த்தியும் மேற்படி சாஸ்திரிகளிடத்தில் விஷயங்களைத் தெரிந்துகொண்டு நவராத்திரி பூஜை, தக்ஷிணாமூர்த்தி உற்சவம் முதலியன சுவாமிகளின் உத்தரவுபோல் நடத்திவந்து பெரும்புகழ்பெற்றான். பிரஹ்மேந்திரர் எழுதி உபதேசித்தவிடத்திலுள்ள மணல் இன்றும் புதுக்கோட்டையில் பூஜையில் இருக்கின்றது.

உலர்ந்த சருகு காற்றில் சலிப்பதுபோலப் பிரஹ்மேந்திரர் யதேச்சையாய் தேசமெங்கும் திரிவாராயினர். சுவாமிகள் ஐரோப்பாவிலுள்ள துருக்கி தேசம்வரையிலும் சஞ்சரித்ததாகவும் ஏற்படுகின்றது.

## பரிபூர்ண நிலை.

இங்ஙனம் சதாசிவப் பிரஹ்மேந்திரர் நெடுநாள் சஞ்சரித்துக் கொண்டுவந்து நெரூரை யடைந்தனர். ஒருநாள் அங்குள்ளவர்களுடன் சுவாமிகள் "யான் மிதுனரவி ஜ்யேஷ்டசுத்தபஞ்சமியன்று பரிபூர்ண

நிலையையடைவேன். அன்று காசியிலிருந்து ஒரு பிராமணன் பாண லிங்கமொன்று கொண்டு வருவான் அதை எமது ஸமாதிக்கருகே பிரதிஷ்டை செய்யுங்க" ளென்று திருவாய் மலர்ந்தருளினர். அங் ஙனமே நெரூரிலுள்ள பிராஹ்மணோத்தமர்கள் செய்து முடித்தனர். இன்றும் இச்சமாதிக்கும்-ஷை கோயிலுக்கும் பூஜை முதலிய விபவங் கள் புதுக்கோட்டை தொண்டமான் செலவில் நடை பெறுகின் றன.

## ஸ்ரீ சிருங்ககிரி ஆசாரிய ஸ்வாமிகளின் பக்தி

ஸ்ரீ சிருங்ககிரி சாரதா பீடம் ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபி நவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் அவர்கள் தம்முடைய சஞ்சாரமார்க் கத்தில் நெரூரையடைந்து அதிஷ்டானத்திற்குட்சென்று பூசித்து நெடு நேரம் ஸமாதியிலிருந்து ஸ்ரீ பிரஹ்மேந்திரரை மனமுருகித் துதித்து ஸ்ரீ சதாசிவேந்திர ஸ்துதி யென்னும் ஒரு நூலையும் இயற்றியருளி னர்.

பிரஹ்மேந்திரரின் பெருமையை ஜகத்குருவே தன்னால் சொல்ல முடியாதெனத் துதித்தாரெனின் என்போலியரால் எடுத்துக் கூறத் தக்க அளவுடைத்தோ அவரது பெருமை?

## பிரஹ்மேந்திரர் இயற்றிய நூல்கள்.

1. பிரஹ்மஸூத்ர விருத்தி.
2. யோகஸூத்ர விருத்தி.
3. பன்னிரண்டு உபநிஷத்துக்களுக்குத் தீபிகை.
4. அத்வைதாநந்த கீர்த்தனைகள்.
5. ஆத்ம வித்யா விலாஸம்.
6. அத்வைதரஸ மஞ்சரி.
7. சித்தாந்த கல்பவல்லி.
8. ஸூதஸம்ஹிதாஸாரம் முதலியன.

ந. சுப்பரமணிய அய்யர்.

---

ஶிவம்



ஓம்

॥ ஶ்ரீகுரு சரணாரவிந்தாப்யாம் நம: ॥

॥ ஶ்ரீஸாம்பஶிவ சரணாரவிந்தாப்யாம் நம: ॥

# ஸ்ரீ ப்ரஹ்ம வித்யா ப்ரகாஶிகை

என்கிற

# ஸூதஸம்ஹிதாஸாரம்.

---

வந்தே கஜேந்த்ரவதநம் வாமாங்காரூடவல்லபாஶ்லிஷ்டம் ।
குங்குமபராகஶோணம் குவலயிநீஜாரகோரகாபீடம் ॥

த்ரிநேத்ரம் த்விபுஜம் ஶாந்தம் கௌரம் பத்மாஸநஸ்திதம் ।
யோகபீடே ஸமாஸீநம் நமாமி ஶிரஸி ஸ்திதம் ॥

ஓதம் யேந ஜகச்சராசரமிதம் ப்ரோதஞ்ச ஸர்வம் ஸதா ப்ரோதந்தே பஶவோபி பாஶநிகராத் யஸ்ய ப்ரஸாதேந தத் । ஓமித்யாத்மநிரூபணைகநிரதம் ஜ்யோதிஷாந்த்யோதகம் ப்ரோமப்ரோபரி பரம் ஶிவாத்மகமஹம் ஜ்யோதி: ப்ரபத்யேயயா ॥

## உபோத்காதம்

ௐ ஶிவ[illegible]ம் ப்ராப்ய மாநுஷ்யம் கஶ்சி
[illegible] ஸது । நாவகாஹதி ஸம்ஸாராத்
ஸ ஏவ ப்ரஹ்மஹா பவேத் ॥

என்கிற பிரமாணப்படி, "உலகத்தில் எண்ணிறந்த பிறவிகளுள் மிகவும் அரிதான இம்மானிடப் பிறவியை யடைந்தும், கண், காது முதலிய இந்திரியங்கள் நன்ருய் ஏற்பட்டும், நன்மை தீமைகளைப் பகுத்தறியக்கூடிய புத்தி யிருந்தும், எந்த மனிதன் இச்சமுஸாரமாகிய பிறவிக்கடலைக் கடக்கவில்லையோ அவன் பிரம்மஹத்தி செய்தவனுவன்" என்று சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன. ஆகையால் அடைதற்கரிய இம்மனிதப்பிறவியை யடைந்த ஒவ்வொரு ஜீவனும் இகழத்தக்க சிற்றின்பங்களை அறவே விடுத்து கிடைத்தற்கரிய பேரின்பத்தை யடைதல் வேண்டும். அங்ஙனம் அடைதற்குரிய பல சாதனங்களுள் தத்துவ ஞானமே நேர்சாதனமாகும். தத்துவ ஞானம் விசாரமின்றி உண்டாகாது. அதுவும், அதாவது விசாரமும் சாஸ்திரார்த்த ஞானமின்றி யமையாது. சாஸ்திரங்களோ அநந்தம். ஆதலின் கேவலம் மனுஷ்ய ஸாமான்யர்கள் அவைகளை அத்தியயனஞ் செய்து அர்த்தானுஸந்தான வடிவ மனனஞ்செய்து மித்தியா விஷயங்களான நாமரூபங்களை யொழித்து ஸ்வதஸ்ஸித்தமான ஸ்வாத்மரூப சிவப்ராப்தியையடைவது துர்லபமாம். ஆதலின் இதை உத்தேசித்து ஸ்ரீ வியாஸபகவான் வேதங்களிலுள்ள அர்த்தங்களை அதிகாரி பேதமில்லாமல் யாவரும் படித்துணரும்படி புராணரூபமாகச் செய்திருக்கிறுர். அவை பதினெட்டாம். அவைகளில் ஸ்ரீ ஸ்காந்தம் ஒன்ரும். இது ஆறு ஸம்ஹிதைக

ளோடு கூடியது. இச்சம்மிதைகளில் இரண்டாவதாகவுள்ளது ஸ்ரீ ஸூத ஸம்ஹிதையாகும். இச்சூத சங்கிதையில் வேதத்தின் பரம தாத்பர்யமான ஆத்ம நிஷ்டைக்கு அத்தியாவசியமாய் வேண்டியஸாதனங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இது ஆறு யிரம் சுலோகங்களால் ஆக்கப்பட்டு நான்கு கண்டங்களோடு கூடியது. இவற்றில், அந்திய கண்டமான எக்கியவைபவமானது தன் பிற்பகுதியில் ஆத்மநிஷ்டை யித்தகையதென்று உள்ளங்கை நெல்லிக்கனிபோல் குறிப்பிடும் மகிமை வாய்ந்த ஸ்ரீ பிரஹ்ம கீதை, ஸூத கீதைகளை யடக்கிக்கொண் டிருக்கின்றது. இது வேத வடிவமேயாகும். இதை ஸ்ரீ பரமசிவாவதாரமாகிய ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் பதினெட்டு முறை வாசித்துப் பிரஹ்ம ஸூத்திரம், பகவத்கீதை உபநிஷத்துக்களாகிற பிரஸ்தான த்ரயங்களுக்கும் பாஷ்யம் செய்ததாக எற்படுகிறது. இது “ தாஷ்டாதஶயா ஊஷ்டாஶங்கரஸூதஸம்ஹிதாம் । வகெ ஶாரீரகம் ஶாஷ்யம் ஸவஶ்ரூதி ஶெநாஜ்ஞாய ॥ ” என்னும் பிரமாண வசனத்தால் நன்கு புலப்படுகின்றது.

இத்தகைய மகிமாதிசயம் பெற்ற ஸ்ரீ ஸூத ஸம்ஹிதையை ஆதியோடந்தமாய் மனனம் செய்வதென்றால் யாவருக்கும் ஸாதாரணமாய் அசாத்தியமேயாகும். இதை யுத்தேசித்துச் சுமார் நூற்றெண்பது வருஷங்களுக்கு முன், பரிபூர்ணப் பிரம்மானந்த சிவயோகி ஸ்ரீ ஸதா சிவேந்திர ஸரஸ்வதியென்னும் திருநாம முடையவரும், அகண்ட காவிரிநதிக் கரையிலுள்ள நெரூர் என்னுந் திருப்பதியில் பரிபூர்ண ஸமாதி அடைந்துள்ளவருமாகிய மகான் ஜீவர்களிடத்துள்ள பரமகருணையால், ஸ்ரீ ஸூத ஸம்ஹிதையின் நான்கு கண்டங்களி லிருந்தும், அதி தீவிர பக்குவிகளாகிய

முமுக்ஷுக்கள் மனனஞ் செய்து பூர்ண சிவபாவத்தை யடையட்டுமென்று ஸாரரூபமான "ஸ்ரீ ஸூத ஸம்ஹிதாஸாரம்" என்னும் ஓர் கிரந்தம் இயற்றியருளினர். இதன் மகிமை மனவாக்குக்களுக்கு எட்டாததாம். கேவலம் அனுபவத்தினாலேயே அறியத்தக்கது. இத்தகைய பெருமை வாய்ந்த நூல் ஒன்று என் குரு சரணங்களின் கிருபையால் எனக்குக் கிடைத்தது. இந்நூல் இதுகாறும் அச்சிடப்படவில்லை யாகையால், இதைத் தமிழ்மக்களும் அறிந்துணரும் வண்ணம் மொழி பெயர்த்து அச்சிடலாமென்று ஸ்ரீ பரமசிவானுக்கிரகத்தை முன்னிட்டு யான் முன்வந்துள்ளேன். இங்ஙனம் முன்வந்தது நூல் செய்ய வேண்டுமென்கிற எண்ணத்துடனல்ல; மற்றோ என்னுடைய மனனத்தின் பொருட்டும், கேவலம் சாஸ்திரவாதத்திலேயே காலங்கழிக்காமல் திருஷ்டாநுசிராவிகமான ஸகல துக்கங்களிலிருந்தும் சீக்கிரம் விடுபட்டு நித்திய நிரதிசயாநந்த அகண்ட ஏகரஸ ஸ்வரூபமான ஆத்மாநந்தத்தை எப்பொழுது அடைவோமென்கிற அதிதீவிரதர இச்சையோடு கூடியவர்களுக்குப் பரமப் பிரயோஜனமாயிருக்குமென்பதை யுத்தேசித்துமேயாகும். இதில் அநேக குற்றங்களிருக்கும். ஸாதுக்கள், எங்ஙனம் ஹம்ஸபக்ஷியானது நீரும் பாலுங்கலந்திருந்த போதிலும் நீரைத் தள்ளிப் பாலை மாத்திரங் கிரகிக்கின்றதோ அங்ஙனமே குற்றங்களை நீக்கி ஆத்மாநு ஸந்தானத்திற்குரிய குணமான விஷயங்களையே கொள்வார்களெனப் பிரார்த்திக்கப்படுகின்றது.

ஓ௦ தத்ஸத்

கல்லிடைக் குறிச்சி. சுப்பையா சாஸ்திரிகள்.

---

ஓம் தத்ஸத்

॥ ஸ்ரீ ஸாம்பசிவாய நம: ॥

॥ ஸ்ரீ குருசரணாரவிந்தாப்யாம் நம: ॥

# சிவ மகாத்மிய கண்டம்.

## நூல்.

(க) மெய்யுணர்ந்தார்க்கு விதிவிலக்கில்லை யெனல்.

(அவதாரிகை) அநேக ஜன்மங்களில் தானல்லாததாயும் தனதல்லாததாயும் கானலில் தோன்றுகிற நீரைப்போல் எவ்விதத்திலும் ஸத்தையற்றதாயுமுள்ள சரீராதிகளில் தான் தனது எனச் செய்துவந்த அபிமானத்தை முன்னிட்டு ஏற்பட்ட புண்ணிய பாபரூப கர்மங்களின் பயனாக அவ்வக்கர்மாக்களுக்குத் தக்கபடி மேல் கீழான ஜன்மங்களைக் கணக்கில்லாமல் அடைந்து ஏதோ மகத்தாகிய ஒருபுண்ணிய விசேஷத்தின் பயனாய் ஏற்பட்ட ஸ்ரீ பரமேச்வரனுடைய கிருபா நோக்கத்தாலும், கர்ம ஸாம்யத்தினாலும், எந்த ஜீவனுக்கு ஸாக்ஷாத் சிவ ஸ்வரூபமான பரிபூர்ண ஆநந்த அனுபவியான ஸற்குரு கிடைத்து அவருடைய பரிபூர்ண கிருபாநோக்கால் சரீரம் முதலிய திருசியப் பிரபஞ்சத்தில் தான் தனதென்னும் பாவனையற்றுப் பரிபூர்ண ஸ்வப்பிரகாச சிதேகரஸ சிவானுபவம் ஏற்பட்டிருக்கிறதோ அம்மகாத்மாவுக்கு விதி நிஷேத ரூபமான கர்மகாண்டத்தின் ஏவுதல் உண்டா? இல்லையா? என்கிற சங்கைக்குச்சமாதானம் ஸ்ரீ நைமிசாரண்ய வாசிகளுக்கு ஸ்ரீ ஸூதாசாரியர் கூறுகின்றார்.

யஸ்யாபரோக்ஷவிஜ்ஞாநம் ஸ்தி²தம் வேதா³ந்தவாக்யஜம் ।
தஸ்ய நாஸ்தி நியோஜ்யத்வமிதி வேதா³ந்த நிர்ணய: ॥ ௪

(ப - ம்.) யஸ்ய - எந்த ஜீவனுக்கு, வேதா³ந்தவாக்யஜம் - வேதாந்த வாக்கியங்களாலுண்டான, அபரோக்ஷவிஜ்ஞாநம் - பிரத்யக்ஷ அனுபவம், ஸ்தி²தம் - இருக்கிறதோ தஸ்ய - அவனுக்கு, நியோஜ்யத்வம் - ஏவுதல், நாஸ்தி இதி - இல்லையென்பது, வேதா³ந்தநிர்ணய: - வேதாந்தங்களின் நிச்சயமாம்.

(தாத்பர்யம்.) எந்த ஜீவனுக்கு ஜன்மாந்தரங்களில் செய்த புண்ணிய விசேஷங்களினால் உண்டான நித்தியாநித்திய விசாரத்தை முன்னிட்டு அநித்தியமான நாமரூபநாட்டம் நசித்துப் பூரணாநந்த நித்திய ஸ்வரூபமான ஆத்மானுபவம் பிரத்தியக்ஷமாய் உண்டாயிருக்கிறதோ அந்த பரிபூர்ண மகாத்மாவுக்குக் கர்ம காண்டத்தினால் ஏவப்படுதலான விதி நிஷேதரூப நியாமகம் இல்லை.

(விசேஷவுரை.) எக்காரணத்தினால் ஆத்மஞானமடைந்த ஜீவர்களுக்குக் கர்ம காண்டத்தினால் நியமிக்கப்படுவதான அதாவது "இதைச்செய்" என்னும் விதிவாக்கியங்களும் "இதைச்செய்யாதே" என்னும் நிஷேத வாக்கியங்களும் உபயோகமில்லை? என்னும் ஆக்ஷேபத்திற்குச் சமாதானமாவது:— "அஹரஹஸ்ஸந்த்⁴யாமுபாஸீத" "ஸாயம் ப்ராதரக்³நிஹோத்ரம் ஜுஹுயாத்" சூரியோதயத்திலும் அஸ்தமனத்திலும் ஸந்தியோபாஸ்தையைச் செய்; உதயத்திலும் அஸ்தமன காலத்திலும் அக்னிஹோத்திரம் என்னும் ஹோமம் செய் "என்பதாதி விதிவாக்கியங்களும், "நாந்ருத

ஊஹிவெ௫த " பொய் சொல்லாதே, " கூஹிංஸ்ரூாசூ ஸவ௨ூ ஹூஸூதாநி " எந்தப் பிராணிகளேயும் கொல்லாதே "வரோ வதாவநං கஜ ந கதூவ்யං கஷாவந " (எவ்விதமான கஷ்டம் உனக்கு வருவதாயிருந்தாலும்) பிறர்களுக்கு உபத் திரவம் உண்டாவதான காரியத்தைச் செய்யாதே " என்ப தாதி நிஷேத வாக்கியங்களும், தானல்லாத சரீரத்தைத்தா னென்றும் தனதல்லாத விஷயங்களேத் தனதென்றும் அவித் தியாவசத்தர்களாய் மயங்கிய ஜீவர்களின் பொருட்டேயன்றி வேதாந்தங்களாகிற உபநிஷத்துக்களின் முடிவான " தத்துவ மஸி, அஹம்பிரஹ்மாஸ்மி, பிரஞ்ஞானம் பிரஹ்மம், அய மாத்மா பிரஹ்மம் " என்னும் மஹா வாக்கியங்களின் அர்த்த விசாரத்தினுலுண்டான அபரோக்ஷ ஞான சொரூபிகளின் பொருட்டன்று. ஏனெனில் சரீரம் முதலியன தனக்கு இல்லே என்னும் திட அநுபவம் ஞானிக்கு இருப்பதனுல் அம்மகானுக்கு அவித்தை, அவித்யாகாரியமான சரீராதிகள், அவற்றின் சுகதுக்கானுபவத்தின் பொருட்டுச் சுகப் பிர விருத்தி, துக்க நிவிருத்தி முதலியவை அத்தியந்தம் நாசமா யிருக்கின்றன. ஆதலால் பிரவிருத்தி நிவிருத்தி வடிவகர்ம காண்டத்தின் ஏவுதலுக்குப் பிரம்மஞானி கட்டுப்பட்டவ னல்ல என்று வேதாந்தங்களில் நன்கு கூறப்பட்டிருக்கின்றது. மேலும் இது, " ஸநஸாயூநா கஜணா ஹூயா ஞொ வஎவ கூஸாயூநா கநீயாநிதி " வஎஷநிஷெத்ரா ஊஹிஊ ஸூாஹ்ணஸ்ய ந கஜணா வயூயெத நொகநீயாநு ।

" இந்த ஞானி அசுப கர்மத்தைச்செய்வதனுல் தாழ்ந்த ஜன்மத்தையும் சுப கர்மத்தைச் செய்வதனுல் உயர்ந்த ஜன்மத் தையும் அடைகிறதில்லே ; இந்த பரிபூர்ணப் பிரம்மாநந்தானு பவத்தை யடைந்த ஞானியின் மகிமை என்றும் அழியாதது"

என்னும் சுருதிப் பிரமாணத்தினாலும் "ஜ்ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகிந: கர்தவ்யம் நாஸ்தி லோகேஸ்மிந் அஸ்தி சேந்ந ஸ தத்த்வவித்" பரிபூர்ண ஞானமிருதத்தினால் மாறாத திருப்தியடைந்தவனாயும், அந்நிலையை யுள்ளவாறு அறிதற்குப் பரம்பராசாதனங்களான நிஷ்காம்ய கர்மம், ஈச்வர உபாஸனை, குரு சுசுரூஷை முதலிய செய்யவேண்டியவைகளைச் செய்தவனாயுமுள்ள ஜீவப்பிரம்ம அபேத அநுபவயோகிக்கு இவ்வுலகிலும் எவ்வுலகிலும் செய்யவேண்டியது ஒன்றுமேயில்லை. இப்படிக்கன்றி செய்ய வேண்டியவைகள் இருப்பதுபோல் எவ்வந்தக்கரணத்தில் தோன்றுமோ அவ்வந்தக்கரண விசிஷ்டனாகிய புருஷன் ஆத்ம தத்துவத்தை யுணர்ந்தவனல்ல" என்னும் உத்தர கீதா பிரமாணத்தாலும் இது நன்கு விளங்குகின்றது. ஆதலின் பரிபூர்ண ஞானானுபவத்தைப் பெற்ற யோகியை விதி நிஷேத வடிவ சாஸ்திரங்கள் எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாது என்பது சிதையாத சித்தாந்தமாம். (1)

(உ) மெய்யுணரார்க்கு விதிவிலக்குளதெனல்.

(அவதாரிகை.) இங்ஙனமன்றி தானல்லாததும் தனதல்லாததுமான சரீராதிகளிலும் விஷயங்களிலும் அபிமானமுடையவர்களுக்கு வர்ணாச்சிரம தர்மங்களுண் டென்பதை இந்த சுலோகத்தினால் கூறுகின்றார்.

வர்ணாநாம் ஶ்ரௌதா: ப்ரோக்தா ஸர்வஶாஸ்த்ரார்த்தவேதிபி:।
தேஷாம் வர்ணாபிமாநாநாம் வைதிகம் கர்த்தா ஸதா॥ 2

(ப-ம்.) ஸர்வஶாஸ்த்ரார்த்தவேதிபி: - ஸகல சாஸ்திரங்களின் அர்த்தத்தை அறிந்த மகான்களால் வர்ணாநாம்- ஜாதி யபிமானமுள்ளவர்களுக்கு, ஶ்ரௌதா: ப்ரோக்தா:-

(அவ்வவ் வர்ணங்களுக்குரிய) ஆச்சிரம தர்மங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. தேஷாம் - (சரீராதிகளை நானென்று அபிமானித்த) அவர்களுக்கு, ஸதா - எப்பொழுதும், வைதிகீ காரதா - வேதத்தின் விதி நிஷேத ரூபமானஏவுதல் (உண்டு).

(தாத்பர்யம்.) ஸகல சாஸ்திரங்களின் அர்த்தத்தை நன்கறிந்த மகான்களினுல் ஸ்தூலாதி சரீரங்களை நானென்று அபிமானித்த ஜீவர்களுக்குப் பிராம்மணுதி நான்கு வர்ணங்களும் அவ்வவ் வர்ணத்திற்கேற்பட்ட பிரம்மசரியம் முதலிய நான்கு ஆச்சிரம தர்மங்களும் உண்டு ; இங்ஙனம் இருப்பதினுல் அவர்களுக்கு அஞ்ஞான காரியமாகிய அபிமான முள்ளவரைக்கும் வேதத்தின் விதி நிஷேதரூப நியாமகமும் உண்டு.

(விசேஷவுரை.) விதி நிஷேத வடிவ ஏவுதலானது கிரியாஸ்வரூபமாம். கர்மாவென்பது சலனுத்மகம் அதாவது அசைதல் வடிவினது. சலனமென்பது, தேசபரிச் சேதமுள்ள கண்டப் பொருள்களுக்குச் சித்திக்குமேயன்றி அகண்ட நித்தியப பொருளுக்குச் சித்திப்பதன்று. ஆதலால் தான் ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணமென்னும் மூன்று சரீரங்களையும் தானென்று நினைத்த அஞ்ஞானிக்கு வேதத்தின் விதி நிஷேதபரமான ஏவுதல்களும் அவற்றிற்குச் சிறப்பாயுள்ள வர்ணுச்சிரம தர்மங்களும் உண்டென்று கூறப்பட்டதென்க. (2)

(ங) பிரம்ம மறிந்த பெண் புரு டர்க்குப்
பேசும் வருணுச் சிரம மிலே யெனல்.

(அ - கை.) புருஷர்களைப்போலவே ஸ்திரீகளுக்கும் சற்குருநாதன் பரமேச்வரன் இவர்களுடைய கிருபையினுல் ஸ்தூலாதி சரீரங்களில் தானென்னும் மயக்கம் நீங்கிப் பரிபூர

ணப் பிரம்ம சொரூப நிஷ்டை ஏற்பட்டிருக்குமானால் அவர்களுக்கும் வேதத்தின் விதி விலக்குகள் கிடையாதென்பது கூறப்படுகின்றது.

உதேதி ஸ்வஸ்வரூப விஜ்ஞாநம் ஸ்த்ரியோ வா புருஷஸ்ய வா।
வர்ணாச்ரமாசாரஸ்தயோ நாஸ்த்யேவ ஸர்வதா ॥ 3.

(ப - ம்.) ஸ்த்ரியோவாபுருஷஸ்யவா - ஸ்திரீகளுக்காயினும் புருஷர்களுக்காயினும் ஸ்வஸ்வரூபவிஜ்ஞாநம் - ஸ்வப்பிரகாசப் பிரஹ்ம ஞானம், உதேதி - இருக்குமேயானால், தயோ: - ஞானிகளாகிற அந்த ஸ்திரீ புருஷர்களுக்கு, ஸர்வதா - எப்பொழுதும், வர்ணாச்ரமாசாரா: - பிராம்மணாதி வர்ணங்களினுடையவும் பிரம்மசரியாதி ஆச்சிரமங்களினுடையுவுமான தர்மங்கள் நாஸ்த்யேவ - இல்லவேயில்லை.

(தா -ம்.) ஸ்திரீகளுக்காயினும் புருஷர்களுக்காயினும் ஸ்வப்பிரகாச பரிபூர்ணப் பிரஹ்மஞானம் இருக்குமேயானால் அந்த ஞானிகளுக்கு வர்ணாச்சிரம தர்ம ஆசாரணை இல்லவேயில்லை.

(வி - ரை.) சரீராதிகளிலும் விஷயங்களிலும் தான் தனதென்கிற அத்தியாசம் நீங்கிப் பரிபூர்ண நிஷ்டை ஏற்பட்டிருக்குமேயானால், ஸ்திரீகளுக்கும், வர்ணாச்சிரம தர்மங்களில்லை யென்பது சித்தாந்தமாம். ஸ்திரீகள் முதலானவர்களுக்குச் சரீரம் முதலான ஸ்தூலப் பிரபஞ்சத்தின் அத்தியாசம் நிவிர்த்தியாகி பரிபூர்ணப்பிரம்மாகார நிஷ்டை யுண்டாயிருக்குமேயானால் அவர்களுக்கும் சாஸ்திரங்களில் சொல்லுகிறதான வர்ணாச்சிரம தர்மங்கள் இல்லை யென்பது நிச்சயம். (3)

(ச) மெய்யுண ராது விதி கர் மங்களை
விடுத்தோன் கெடுவான் வீணு யென்னல்.

(அ - கை) எந்த ஜீவர்கள் பரிபூரணமான ஆத்மாவின் உத்பத்தி நாசமில்லாது நிர்விகாரமாயுள்ள நிலையைத் தெரிந்து கொள்ளவில்லையோ அவர்களுக்குச் சரீரங்களில் தானென்ற புத்தி யிருப்பதினால் அச்சரீராதிகளுக்கு ஏற்பட்ட வர்ணாச்ர மாதி தர்மங்களை விடுவதனால் மிக்க தாழ்வான பிறவிகளை யடைகிறார்கள் என்று கூறப்படுகின்றது.

அவிஜ்ஞாயாத்மஸத்பாவம் ஸ்வவர்ணாச்ரம மாஸ்திகா: ।
ஜஹாதியஸ்ஸ மூடாத்மா வநச்யேந்நஸம்சய: ॥ 4

(ப - ம்.) ஆஸ்திகா: - ஹே ஆஸ்திகர்களே! ய: - யாரொரு, ஜீவன், ஆத்மஸத்பாவம் - நாம ரூபாதி விகார ரகித மான ஆத்மாவினுடைய இருப்பை, அவிஜ்ஞாய - தெரிந்து கொள்ளாமல், ஸ்வவர்ணாச்ரமம் - தன் வருணாச் சிரம தர்மங்களை, ஜஹாதி - நழுவ விடுகிறானோ, ஸ மூடாத்மா - அந்த புத்தி யில்லாதஜீவன், வநச்யேத் - கெட்டேபோகிறான், (ஜனன மரணரூப துன் பத்தை அனுபவிக்கிறான். நஸம்சய: - இதில் சந் தேகமே கிடையாது.

(தா - ம்.) எந்த ஜீவன் ஆத்மாவின் நாமரூப விகார ரகிதமான எப்பொழுதும் ஒருவிதமா யிருக்கக்கூடிய இருப் பைத் தெரிந்து கொள்ளாமல் தனது வர்ணாச்சிரம தர்மங்களை நழுவ விட்டிருக்கிறானோ அந்த புத்தியில்லாத ஜீவன் கெட் டேபோகிறான் ; ஜனன மரண ரூப துன்பத்தையே அனுப விக்கிறான். இதில் சந்தேகமே இல்லை.

(வி - ரை.) எந்த ஜீவனுக்குக் கிடைப்பதற் கரிதான மனுஷ்ய ஜனனம் கிடைத்தும் விவேகத்தினால் ஆத்மா னாத்மாக்களைப் பிரித்து அநித்தியமான ஸ்தூல சரீராதிகளை அநாத்ம வஸ்துவென்று விடுத்து, உத்பத்தி முதலான ஆறுவித பரிணாமங்களில்லாததாயும் தானே பிரகாசித்துக்கொண்டிருப்பதாயும் பரிபூரணமாயு மிருக்கிற ஆத்ம சொரூபத்தைத் தெரிந்து கொள்ளாமல் தனது வர்ணாச்சிரம தர்மங்களை நழுவ விடுகிறானோ அந்த புத்தியில்லாத ஜீவன் நதீபிரவாகத்தின் பெருஞ்சுழியில் அகப்பட்டு மேலுங் கீழுமாகப் போய் வந்து கஷ்டப்படும் புழுவைப்போல் ஜனன மரணரூப துன்பத்திலிருந்தும் விடுபடுகிறதில்லை மற்றோ உயர்வு தாழ்வான ஜனனங்களையே அடைந்து நாசத்தை யடைகிறான்; இதில் சந்தேகமில்லை. (4)

---

# ஞானயோக கண்டம்.

---

(ரு) தத்துவஞான சாதனங்கூறல்.

(அ - கை.) யதோக்தாநி பாப நிவ்ருத்திஜ்ஞாந ஸாதநம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண: என்னும்நியாயப்பிரகாரம் சரீரத்தைநானென்று அபிமானித்தஜீவர்களுக்கு அந்தந்த கர்மங்களுடைய பலத்திற்குத் தக்கபடி ஏற்படுகிற பிராம்மணாதி சரீரங்களுக்கு வேத சாஸ்திரங்களில் சொல்லுகிற பிரகாரம் கர்மோபாசனைகளை அவற்றின் பலன்களில் இச்சையில்லாமல் ஈச்வரார்ப்பண புத்தியாகச் செய்கிறதினால் சித்த விக்ஷேபத்திற்குக் காரணமான பாப வாசனைகள் நிவர்த்தியாய் ஈச்வர பிரசாதத்தினால் ஞானம் உண்டா

கிறதென்பதாக பிரஹஸ்பதிக்குப் பரமசிவன் சொல்லு கிருர்.

வணாரமாவாராக ஆூஸாைவபாமெஸ்ெர ।
ஸாக்ஷாத் ஸிஷயஜ்ஞாநஃகிப்ராஜாயதே நவ ॥ 5

(ப - ம்.) ஹேஊநவ - ஹேபாபமற்றவனே, வணாரம் ஸாவாராக - சாஸ்திரங்கள் சொல்லுகிற பிரகாரம் பிராமணன் முதலானவர்கள் அவரவர்களுடைய வர்ணு ச்சிரமதர்மங்களை ஈசுவரார்ப்பண புத்தியோடு செய் வதினுல், பரமெஸ்ெரஃஆூஸா - பரமேசுவரன் (ஆத்ம சொரூப சிவன்) பிரசன்னத்தை தஅடைந்து (அவ ரால்) ஸாக்ஷாத் ஸிஷயஜ்ஞாநம் - நேராகவே அகண்ட பரிபூரண ஸ்வப் பிரகாச சிவஞானம், க்ஷிப்ராக - சீக்கிரமாகவே, ஜாயதே - உண்டாகிறது.

(தா - ம்.) ஏபாபமற்றவனே! சாஸ்திரங்கள் சொல்லு கிற பிரகாரம் பிராமணன் முதலானவர்கள் அவரவர்களுடைய வர்ணுச்சிரம தர்மங்களை ஈசுவரார்ப்பண புத்தியோடு செய்வதி ஞல் பரமேசுவரன் (ஆத்ம ஸ்வரூபசிவன்) பிரசன்னத்தை அடைந்து அவரால் நேராகவே அகண்ட பரிபூர்ண ஸ்வப்பிர காச சிவஞானம் சீக்கிரமாக உண்டாகிறது.

(வி - ரை.) வாதவ்யுணஞ்யுஜபாஸ ஷம்ஷாணகஜ விஹாமஸஃ - என்கிற பிரமாணத்தின் பிரகாரம் ஜன்மாந்திரங் களில் சரீராதிகளில் தாதாத்மியாத்யாஸத்தினுல் செய்யப் பட்டதான உத்தம நிக்ருஷ்டங்களான கருமங்களின் பயனுக ஏற்பட்டிருக்கிற ஜென்மங்களை நிவர்த்தித்துக் கொள்ளுவ தற்கு வெஸெயிகாராயாநிஷாஸஷாணஃவஸிகீகிடிதஃ।

என்றபடி எவரெவர்களுக்கு (பிராமணன்முதலானவர்களுக்கு) எந்த எந்த தர்மங்கள் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்வவற்றை ஈசுவரார்ப்பண புத்தியாகச் செய்கிறவர்களுடைய அந்தக் கரணமானது சுத்தியடைந்து ஸாக்ஷாத்தாக ஆத்ம சுவ ரூபமான சிவம்பிரஸன்னத்தைச் செய்து பிரத்தியக்ஷாத்மானுபவஞானம் சீக்கிரம் உண்டாகிறது அதாவது ஆத்மானாத்ம விவேகஞானம் சீக்கிரம் உண்டாகிற தென்பது தாத்பரியமாம். (5)

(சு) மெய்யுணர் வானே வீடு பேறெனல்.

(அ - கை.) ஜ்ஞாநாதேவ து கைவல்யம் - என்ற பிரமாணப்படி அஞ்ஞான வாஸனையாகிற சரீராதி பிரபஞ்ச ஞானமிருக்கும்போது ஆத்மஞானம் எவ்விதம் உண்டாகும் ? என்று ஆக்ஷேபித்து ஞானத்தினால் அஞ்ஞானம் நசித்து ஆத்ம ஸாக்ஷாத்கார முக்தி உண்டாகிற தென்கிறார்.

அஜ்ஞாநேந ஹி ஸம்ஸாரோ ஜ்ஞாநேநைவ நிவர்த்ததே ।
தஸ்மாஜ்ஜ்ஞாநேந ஹே ஸுவ்ரத அஜ்ஞாநஸ்ய க்ஷயோ நநு ॥ 6

(ப - ம்.) ஹே ஸுவ்ரத - ஏமனனசீலனே! அஜ்ஞாநேந ஹி ஸம்ஸாரः - அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட வாசனாவசத்தினால் சம்சார மிருக்கிறது; ஜ்ஞாநேநைவ நிவர்த்ததே - ஆத்மானாத்ம வஸ்து விசாரத்தினால் அநித்தியமாகிற சரீராதி பிரபஞ்சத்தினுடைய மித்தியா நிச்சய மூலமாக நித்தியாத்மானுபவ ஞானம் ஏற்பட்டிருக்கும்போது அஞ்ஞான காரியமானப் பிரபஞ்ச மிருக்குமென்று எவ்விதம் சொல்லுகிறது ? தஸ்மாத் - ஆகையினால், ஜ்ஞாநேந - நித்திய பரிபூர்ண அகண்டைகரஸ பிரம்மானு

பவஞானத்தினுல், ௮ஜ்ஞாநஸ்யக்ஷயாத் - அஞ்ஞான காரியமான சரீராதி பிரபஞ்ச ரூபமித்தியாத்துவ நிச்சய மான அஞ்ஞானம் நாசமாவதால், ஜீவஸ்யாத் - ஜீவப் பிரம்மாபேத ரூபமான முத்தி ஏற்படுகிறது.

(தா - ம்) ஹேமனனசீலா! அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட வாசனுவசத்தினுல் சம்சாரமிருக்கிறது ; ஆத்மானுத்ம வஸ்து விசாரத்தினுல் அநித்தியமாகிற சரீராதி பிரபஞ்சத்தினுடைய மித்தியா நிச்சய மூலமான நித்தியாத்மானுபவஞானம் ஏற் பட்டிருக்கும்போது அஞ்ஞான காரியமான பிரபஞ்சம் எவ் விதம் இருக்கும்? ஆகையினுல் நித்திய பரிபூர்ண அகண்ட ஏகரஸ பிரம்மானுபவ ஞானத்தினுல் அஞ்ஞான காரியமான சரீராதி பிரபஞ்ச ரூபமித்தியாத்வ நிச்சயமான அஞ்ஞானம் நாசமாவதனுல் ஜீவ பிரம்ம அபேத ரூபமான முக்தி ஏற்படு கிறது.

(வி - ரை.) ஸாமாஸா த்ருஷ்டம்த்வைதம் தோன்றுவதான நாமரூப ப்பிரபஞ்சம் சொன் மாத்திரமாக இருப்பதனுலும் அத்வைதம்வாஸ்தவம் - இரண்டாவதற்றதான ஸச்சிதா னந்த பிரம்மம் ஸத்தியமாக இருப்பதனுலும் எவ்விதத்தி லும் வித்தியாசப்படாததான ஸத்தா பரிபூர்ணப் பிரம்மானு பவஞான மிருக்கும்போது தோற்றல் மாத்திரமான சரீராதி ஸம்சாரம் இருக்குக்கிறதென்று எங்ஙனம் சொல்லலாம்? ஆகையினுல் அயிஷ்டாநவஸ்ய ஷோஹிநாமஃ கல்பிதவஸ்துநஃ - "கல்பிதமான தோற்றங்களினுடைய நாசம் பாதத்தை யடையாத அதிஷ்டான ஞானத்தினுல் அல்லவோ" என்றபடி ஆத்மானுபவ ரூபமான ஞானத்தினுல் அஞ்ஞான காரியங்களினுடைய நாசமுண்டாய் வேற்றுமையில்லாததான அபேத ரூப ஜீவப் பிரம்ம ஐக்கிய ரூப முக்தி ஸித்திக்கிறது.

(எ) அறிவை யிழந்தஞ் ஞானத்துழலு
முலகைக் கண்டு வியப் போடி ரங்கல்.

(அ - கை.) மாயயா ஸ்வஜ்ஞாநாஸ் ஸம்ஸாரா பரிதாப: - பரிபூர்ண ஸச்சிதானந்த ஆத்மானுபவ ரூப ஞானத்தைத் தோன்றி மறைவதான சரீராதிகளில் தானென்ற பரிச்சின்ன பாவனையைச்செய்து அவைகளினுடைய உற்பத்தி நாசம் இவைகளினாலும் அந்த சரீராதிகளின் ஸம் ரக்ஷணை முதலானவற்றிற்காக ஏற்படும் காமக் குரோதாதி விருத்திகளினாலும் ஆக்கிரமிக்கப்பட்ட சித்தமுடையவர்க ளாய் இறப்பு பிறப்பு முதலான சம்சாரரூப நரக துக்கங் களை யடைகிறார்க ளென்று ஆச்சரியப்படுகிறார்.

ஸ்வாத்மஜ்ஞாநம் பரித்யஜ்ய மாயயா பரிமோஹிதா:।
நரகேஷு ஹி பச்யந்தே ஸ்வப்நகல்பேஷு து:கிதா: ॥

(ப - ம்.) மாயயா - (வாஸ்வத்தை மறைத்து வேறுவித மாகத் தோற்றுவித்து, மித்தியா ரூபமான சரீராதி ப்பிரபஞ்சத்தில் ஸத்தியபுத்தியைச்செய்யும்) அவிவேகத் தினால் பரிமோஹிதாஸ்ஸ:-நித்தியா நித்திய விவேக மில்லாததான மகா பிராந்தியை அடைந்தவர்களாய், ஜ்ஞாநம்பரித்யஜ்ய - ஸ்வப் பிரகாச பரிபூரணானந்த ஆத்ம ஞானத்தை யிழந்து ஸ்வப்நகல்பேஷு - சுவப்ன வஸ்தையில் கற்பனையால் தோன்றுவதான சரீராதி பிர பஞ்சங்களுக்குச் சமானமான நரகேஷு - சாஸ்திரங் களில் சொல்லுகிறதான ரௌரவாதி நரகங்களைக்காட்டி லும் மிக்க கொடியதான தாயின் கெற்பவாசம், வியாதி மரணம் முதலான நரகங்களை அடைந்து து:கிதா:- துக்கப்படுகிறவர்களாய், பச்யந்தே ஹி - கஷ்டப்படு

கிறார்கள் அல்லவா? (அக்கினியில் சாகங்களைப் பக்குவப் படுத்துவதுபோல் எரிக்கப்படுகிறார்கள்.) கஹோ- என்ன ஆச்சரியம் !

(தா - ம்.) வாஸ்தவத்தை மறைத்து வேறொரு விதமாகத் தோற்றுவிப்பதான மித்தியாரூப சரீராதிப் பிரபஞ்சத்தில் ஸத்திய புத்திரூபமான அவிவேகத்தினால் ஸச்சிதானந்தரூப ஆத்ம ஞானம் நீங்கினவர்களாய், நித்தியா நித்திய விவேக மில்லாததான மகா பிராந்தியை அடைந்தவர்களாய் சுவப் பிரகாச பரிபூர்ணாநந்த ஆத்ம ஞானத்தை யிழந்து சுவப்னாவஸ்தையில் தோன்றுவதான சரீராதிப் பிரபஞ்சத்திற்குச் சமானமான (சாஸ்திரங்களில் சொல்லப்படுவதான) ரௌரவாதி நரகங்களைக்காட்டிலும் மிகக் கொடியதான மாத்ரு கெற்பவாசம், வியாதி, மரணம் முதலான துன்பங்களை அடைந்து கஷ்டப்படுகிறார்கள் அல்லவா? அஹோ ஆச்சரியம் !

(வி - ரை.) இந்திரஜாலம் செய்பவனுடைய மாயையில் மயங்கிய ஜனங்கள் கொஞ்சங்கூட துக்கம் ஏற்படாத தங்களை மிகவும் கஷ்டப்படுகிறவர்களாகக் காண்பதுபோல நித்திய சுத்த புத்த முக்த ஸ்வரூபமான ஆத்மாவைப் பிறப்பு இறப்பு முதலான துக்கங்களை யுடையதாக மதித்து ரௌரவாதி நரகங்களுக்குச் சமானமான ஜன்மாதி துக்கங்களை அடைந்து கஷ்டப்படுகிறார்கள். அதாவது தோற்றல் மாத்திரமாக இருப்பதான சரீராதிப்பிரபஞ்சம் உண்மையில் மித்தையானதனால் அவைகளில் சத்தியத்துவ புத்தியுள்ள ஜீவர்கள் ஜனன மரணாதி ரூப சம்சார சமுத்திரத்தில் விழுந்து கஷ்டப்படுகிறார்களென்று ஆச்சரியப்படுகிறார். (ஹி) யென்னும் சொல் நிச்சயவாசகம்;

(அ) இயற்கையிலான்மா விருளோடுகூடின்
இன்பாம் விடுதலை என்றுமிலையெனல்.

(அ - கை.) "ஶிவோஹ்யஸ்மாஶிவாநவேத்தி. சிவமாக இருந்தால்தான் சிவமாகிறான்." என்ற பிரமாணப்பிரகாரம் ஸச்சிதானந்த ஆத்மா எவ்விதமாகவேனும் அவித்தியா சம்பந்தத்தினால் சரீராதி பாவத்தை யடையுமானால் அந்த ஆத்மாவுக்கு எத்தனைகோடி ஜன்மங்களானாலும் நித்தியானந்த ரூப முக்தியானது கிடைப்பதில்லையென்று சொல்லுகிறார்.

யத்யாத்மா மலிந꞉ கர்த்ருபோக்தாவஸ்யாத் ஸ்வபாவத꞉ ।
நாஸ்தி தஸ்ய விமோக்ஷ꞉ ஸம்ஸாராஜ்ஜந்மகோடிபி꞉ ॥ 8

(ப - ம்.) யதி - சொல்லுகிறபிரகாரம், ஆத்மா - (நித்தியபரிபூர்ண) ஆத்மாவானது, ஸ்வபாவத꞉ - இயற்கையிலேயே, மலிநஸ்யாத் - மலின சத்துவப் பிரதான ரூப அந்தக்கரண உபாதியோடு கூடியதாக ஆகுமானால், கர்த்ருபோக்தாவஸ்யாத் - கரணங்களாகிற சரீராதிகளோடு கூடிச்செய்கையுடையதாகவும் அவைகளால் அனுபவிப்பதான விஷய போகங்களை அனுபவிப்பதாகவும் ஆகும். தஸ்ய - ஸ்வபாவமாக, மனம் முதலிய உபாதிகளோடு கூடிய அந்த ஆத்மாவுக்கு, ஜந்மகோடிபி꞉ - அனேகங்கோடி ஜன்மங்களிலும், ஸம்ஸாராத் - துக்க ரூபமான ஸம்சாரத்தி லிருந்தும், விமோக்ஷ꞉ - (கொஞ்சங்கூட துக்க ஸம்பந்தமில்லாத) மோக்ஷமானது நாஸ்தி - இல்லை.

(தா - ம்.) நித்திய பரிபூர்ண ஆத்மாவானது இயற்கையாகவே மலின சத்துவப் பிரதான ரூப அந்தக்கரண உபாதியோடு கூடியதாகுமானால் கரணங்களாகிற சரீராதிகளோடு கூடிச் செய்கை யுடையதாகவும் அவைகளால் அனுபவிப்பதான விஷய போகங்களை யுடையதாகவும் ஆகும். இங்ஙனம் மனம் முதலான உபாதிகளை சுபாவமாயுடைய ஆத்மாவுக்கு அனேகங்கோடி ஜன்மங்களிலும் துக்க ரூப ஸம்ஸாரத்திலிருந்து கொஞ்சங்கூட துக்க ஸம்பந்த மில்லாத மோக்ஷமானது உண்டாகாது.

(வி - ரை.) ஸச்சிதானந்த ஆத்மாவானது இயற்கையிலேயே ஸங்கல்ப விகல்பம், காமக்குரோதம் முதலானவைகளோடு கூடிய மலின சத்துவ குணமுள்ள அந்தக்கரண விருத்தி ரூப மனம் முதலான உபாதிகளோடுகூடிய தாகுமானால், அந்த அப்பிரகாச (பிரகாச மில்லாத) ஆத்மாவுக்கு எத்தனை கோடி ஜன்மங்களிலும், துக்கமே சுவரூபமா யிருப்பதான ஸம்சாரத்தி லிருந்தும் துக்க சம்பந்தம் சிறிது மில்லாத நித்தியானந்த ஸ்வரூபமான மோக்ஷமானது இல்லவே இல்லை. (8)

(கூ) ஆன்மசொரூப விலக்கணமறைதல்.

(அ - கை.) இவ்விதம் ஆத்மா மலின சத்துவப் பிரதான மனம் முதலிய உபாதிகளோடு கூடியதாக இருப்பதால் எங்ஙனம் நித்திய சுத்த புத்த முக்த ஸ்வரூபமான முக்தி யுண்டாகுமென்ற ஆக்ஷேபத்திற்குச் சமாதானமாவது—ஆத்மாவுக்கு அவ்வித உபாதிகள் இயற்கையில் கிடையா வென்றும் ஆத்மா ஸ்வபாவமாகவே நித்திய புத்த முக்த சுவரூபமாயிருப்பதால் பரிபூர்ண சிவ பாவத்தை யடைந்த குருநாதனுடைய மகாவாக்கிய உபதேசத்தால் பரிபூர்ணாத்மானுபவ ஞானம் சித்திக்கிறதென்றும் இரண்டு சுலோகங்களால் கூறுகிறார்.

ஆத்மாயம் கேவல꞉ ஸ்வச்ச꞉ ஶாந்த꞉ ஸூக்ஷ்ம꞉ ஸநாதந꞉ ।
அஸ்தி ஸர்வாந்தரஸாக்ஷீ சிதாநந்த ஸ்வவிக்ரஹ꞉ ॥ 9

அயம் ஸ மஹாவாநீஶ꞉ ஸ்வயஞ்ஜ்யோதி꞉ ஸநாதந꞉ ।
அஸ்மாஜ்ஜாயதே விஶ்வமத்ரைவ ப்ரவிலீயதே ॥ 10

(ப - ம்.) அயமாத்மா-இந்த பரிபூர்ண ஆத்மாவானது, கேவல꞉ (குணகாரியங்களான) உபாதிகளொன்று மில்லாததாயும் ஸ்வச்ச꞉ - பிரகாச ஸ்வரூபமாயும், ஶாந்த꞉ - சலனசுவபாவமுள்ள மனம் முதலானவைகளைப்போல் சலிக்கக்கூடியதல்லாததாயும், ஸூக்ஷ்ம꞉ - மனம் வாக்கு முதலானவைகளால் அடையக்கூடாததாயும், ஸநாதந꞉ - உத்பத்தி நாசமற்றதாயும், ஸர்வாந்தரஸாக்ஷீ-உபாதிகளால் கற்பிதமான நாமரூபங்களை யெல்லாம் பிரகாசிப்பிப்பதாயும், சிதாநந்த ஸ்வவிக்ரஹ꞉ - சுயம்பிரகாச ஆனந்தமே வடிவினதாயும், அஸ்தி - இருக்கிறது.

அயம் - இந்த லக்ஷணங்களுள்ள ஆத்மாவாகிற, ஸ மஹாவாநு - அந்த மகா மகிமை பொருந்திய பகவான், ஈஶ꞉ - ஸர்வாந்தரியாமியாய் இருந்து ஸகலத்தையும் பிரேரணை செய்கிறதாயும், ஸ்வயஞ்ஜ்யோதி꞉ - தானாகவே பிரகாசித்துக்கொண் டிருப்பதாயும், ஸநாதந꞉ - அழிவற்றதாயுமிருக்கிறான் ; அஸ்மாத் - இந்த ஆத்மாவிலிருந்து, விஶ்வம் - பற்பல நாமரூபங்களோடு கூடியயாவும், ஜாயதே - உண்டாகிறது. அத்ரைவ - இந்த ஆத்மா

விலேயே, ப்ரவிஶீயதே - ஒடுங்குகிறது என்பது ஹி - நிச்சயம்.

(தா - ம்.) இந்த பரிபூர்ண ஸ்வப்ரகாச ஆத்மா குண காரியங்களாகிற உபாதிகளொன்று மில்லாததாயும், பிரகாச முடையதாயும் சலனஸ்வபாவமுள்ளமனம் முதலானவைகளைப் போல் சலிக்கக்கூடியதல்லாததாயும் மனம் வாக்கு முதலா னவைகளால் அடையக்கூடாததாயும் உற்பத்திநாசமற்றதாயும் உபாதிகளால் கற்பிதமான நாம ரூபங்களை யெல்லாம் பிர காசிப்பிப்பதாயும் சுயம்பிரகாச ஆனந்தமே ஆகாரமாக உடையதாயும் இருக்கிறது.

இந்த லக்ஷணங்களுள்ள ஆத்மாவாகிற அந்த மகா மகிமை பொருந்திய பகவான் ஸர்வாந்தரியாமியாயிருந்து பிரேரணை செய்கிறவனும் தானாகவே பிரகாசித்துக்கொண் டிருப்பவனும் அழிவில்லாதவனும் இருக்கிறான். இந்த ஆத்மாவிலிருந்து நாம ரூபங்களோடு கூடிய யாவும் உண்டாய் இந்த ஆத்மாவிலேயே ஒடுங்குகின்றன.

(ஶ்ரீ-ரை.)' யதா ஸுதீப்தாத் பாவகாத்விஸ்புலிங்கா: ஸஹஸ்ரஶ: ப்ரபவந்தே ஸரூபா: ததாக்ஷராத்விவிதா: ஸோம்ய பாவா: ப்ரஜாயந்தே தத்ர சைவாபி யந்தி ॥ அவ்விதம் பெரிய பிரகாசத்தோடு எரிகிறதான அக்கினியி லிருந்து அதே சுவரூபமுடைய அநேக பொறிகள் ஏற்பட்டுத் தோன்றுமோ அவ்விதமே நாச ரகிதமான பரிபூர்ண ஸ்வப் பிரகாச ஆத்மாவிலேயே பற்பல நாம ரூபங்களோடுகூடிய பல சரீராதிப் பிரபஞ்சம் தோன்றி அதிலேயே ஒடுங்குகின்றன." என்றும் " ஸுஷுப்திகாலே ஸகலே விலீநே தமோऽபிபூத: ஸுகரூபமேதி" கற்பிதமானநாமரூபப்பிரபஞ்சங்களுடையநாசம் நாசத்தை

யடையாத அதிஷ்டானரூபமான நிர்விகார ஸ்வப்பிரகாச பிரஹ்மமல்லவா?'' என்ற படியும் அஞ்ஞானத்தினுல் கற்பிக்கப்பட்டதான மனேபாதியோடுகூடிய நாம ரூபப் பிரபஞ்சங்கள் அதிஷ்டானமான ஆத்மாவிலேயே தோன்றி ஆத்மாவிலேயே ஒடுங்குவதால் அந்த ஸத்யப் பிரகாசமுள்ள ஆத்மா சுவபாவமாகவே தேசம், காலம், வஸ்து முதலியவைகளால் பரிச்சேதப்படாமல் ஸதா விளங்கிக்கொண் டிருக்கிறதென்பது தாத்பரியமாம். (9-10)

(ம) சிவமாய்த் தன்னை யறியாதான்
திருட்டும் கொலேயும் புரிந்தோனும்.

(அ - கை.) ஸச்சிதானந்த அகண்டைகரஸ ஸ்வரூபமான ஆத்மாவை அங்ஙனம் தெரிந்து கொள்ளாமல் மாயாகாரியங்களான சரீராதிப் பிரபஞ்சமேதான் என்று எந்தஜீவன் நினைக்கிருனே அந்த ஜீவனுக்கு லௌகிகமாக ஏற்படும் பஞ்ச மகா பாதகங்களில் இரண்டு பிரபலமான பாபங்களாகிற ஸ்தேயம் (திருட்டு) பிரஹ்மஹத்தி (ஆத்மஹத்தி) இவைகள் உண்டாகின்றனவென்று கூறப்படுகின்றது.

யஸ் ஸந்தம் ஸச்சிதாத்மானம் அந்யதா ப்ரதிபத்யதே ।
கிம் தேன ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥

ப்ராஹ்மண்யம் ப்ராப்ய லோகேஸ்மின்
[illegible] பவேத் ।
நாப்னோதி ஸம்ஸாராத்
ஸ வை ப்ரஹ்மஹா பவேத் ॥ 12

(ப - ம்.) யः - எந்த ஜீவன், ஸந்தம்ஸச்சிதாத்மானம் - மேற்சொல்லிய ஸச்சிதானந்த பரிபூர்ண ஸ்வப்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவை, அந்யதா - வேறுவிதமாக (ஸ்தூல

சரீராதி பிரபஞ்சரூபயாகவும் உற்பத்தி நாசமுடைய தாகவும்) ஦ூ஦ஶி வஶ்யதெ - பார்க்கிறுனோ, ஆத்ராவ ஊாரிணா - ஆத்மாவை அபகரித்தவனு யிருக்கிற தெந வொரெண- (ஸ்தூலசரீரம் முதலிய பிரபஞ்சத் தைத் தன்னுடையதென்று கற்பித்துக்கொண்ட) திருட னுகிய அந்த அஜ்ஞ புருஷனுலே, வாவ௦ - பாப மானது, கி௦ந க்ருத௦ - ஏன் செய்ததாக ஆகாது?

கவஷிநுலொகெ - இந்த உத்தம புண்ணிய பூமியாகிய பாத கண்டத்தில், ஬்ராஹ்மண்ய௦ ஦்ராவ்ய - சரீராதிகளி லுள்ள அகம்பாவங்களைவிட்டுப் பரிபூர்ணப் பிரஹ்ம பாவத்தை அடையக் கூடியதான உத்தம சரீரத்தை யடைந்தும், சுஶு஦்஧கொரவாயிரொாஹவெஞ - (நன்றாக உச்சரிக்கக் கூடியதான) வாகிந்திரியத்தையும், (மகான் களால் பிரதி பாதிக்கப்படுகிறதான ஆத்ம சாஸ்திரார்த் தத்தைக்கேட்கக்கூடியதான) செவிட்டுத்தன்மையில்லாத சுரோத்திர இந்திரியத்தையும் அடைந்தும், ஸ௦ஸாரா ஊாவ க்ராஂதி - ஸம்சாரமாகிற உற்பத்தி நாசமுடைய ஸ்தூல சரீராதி பிரபஞ்ச வாசனையை மித்தையென்று தள்ளாமல் போவானேயானுல் ஸஃ஬்ரஹ்மஹாவ௯ - அவன் பிரம்மஹத்தி செய்தவனல்லவா!

(தா - ம்.) எந்த ஜீவன் கீழ்ச் சொல்லியபடி ஸச்சிதா னந்த பரிபூர்ண ஸ்வப்பிரகாசமாயுள்ள ஆத்மாவை வேறு விதமாக அதாவது ஸ்தூல சரீராதிப் பிரபஞ்ச ரூபமாகவும் உற்பத்தி நாச முடையதாகவும், காண்கிறதினுல், ஆத்மாவை அபகரித்தவனு யிருக்கிற (சுபாவமாயுள்ள ஆத்மாவின் பரி பூர்ண ஸ்வப்பிரகாசத் தன்மையை இழந்தும் அவித்தையின்

சொத்தாகிய உற்பத்தி நாசமுடையதான ஸ்தூல சரீராதிப் பிரபஞ்சத்தைத் தன்னுடையதென்று அபகரித்துமிருக்கிற) திருடனாகிய அஞ்ஞ புருஷனாலே பாபமானது ஏன் செய்யப்பட்டதாக ஆகாது? செய்யப்பட்டதேயாம்.

இந்த உத்தம புண்ணிய பூமியாகிய பாரதகண்டத்தில் சரீராதிகளிலுள்ள அகம்பாவத்தைவிட்டுப் பரிபூர்ணப்பிரஹ்ம பாவத்தை அடையக்கூடியதான உத்தம சரீரத்தை அடைந்தும் நன்றாக உச்சரிக்கக் கூடியதான வாகிந்திரியத்தையும், மகான்களால் பிரதிபாதிக்கப்படுகிறதான ஆத்ம சாஸ்திரார்த்தத்தைக் கேட்கக்கூடியதான செவிட்டுத்தன்மையில்லாத சுரோத்திரேந்திரியத்தையும், பெற்றும் அந்த மனுஷ்யன் ஸம்சாரமாகிற உற்பத்தி நாசமுடைய ஸ்தூல சரீராதிப் பிரபஞ்ச வாசனையை மித்தையென்று தள்ளாமற் போவானேயானால், பிரஹ்மஹத்தி செய்தவனென்பது நிச்சயம்.

(வி - ரை.) ''யோ வை ஸ்வாந்தஸ்தாம் தேவதாம் த்யஜேத ஸ்வஸ்யை தேவதாயை ச்யவதே ந பரம் ப்ராப்நோதி ஸ்வ பாபீயாந்பவதி। எந்த அந்தக்கரண உபாதிகனான ஜீவன் தனக்கு அதிஷ்டானமாயும் பிரகாச ரூபமாயுமிருக்கிற தேவதையைத் தள்ளித் தானாகவிருக்கிற ஆத்ம தேவதையை நழுவுதலைச் செய்கிறானோ அந்த ஜீவன் ஜீவோபாதியில்லாததானபரமார்த்தப் பிரஹ்மத்தை அடைகிறதில்லை யென்பதுடன் பாபத்தையும் செய்தவனாகிறான்'' என்கிற பிரமாணப்படி பிரதிபாதிக்கப் பட்டதான நித்திய சுத்த புத்த முக்தஸ்வரூபமாயும்ஸச்சிதானந்தாகண்டைகரசமாயுமிருக்கிற பரிபூர்ண ஆத்ம சொரூபத்தை, வேறு வகையாய்த்தோன்றி மறைவதான அவித்தையின்காரியமாகிய நாமரூபப்பிரபஞ்சத்

தைத் தானென்றும் தன்னுடையதென்றும் ஒருவன் கருது வனேயானால் அவன் அன்னியனுடைய சொத்தைப் பிடுங்கிக் கொண்ட திருட்டுத் தோஷத்தையும், பார்த்தும் கேட்டுமிருக் கிறதான அநேககோடி உலகங்களில் மிக உத்தமமான புண் ணிய பூமியாகிய இந்த பரத கண்டத்தில் கண் காது வாக்கு முதலான இந்திரியங்கள் நன்றாக ஏற்பட்டுள்ள உத்தம சரீரத்தை யடைந்தும் எப்பொழுதும் துக்கமே ஸ்வரூபமாக வுடைய சரீராதி ஸம்சாரத்தைக் கடந்து நித்திய நிரதிசயா நந்த ஆத்ம சொரூபத்தை அடையாததனால் தன் பரி பூர்ண சுவப்பிரகாசமான ஆத்ம சுவரூபத்தைப் பரிச்சின்ன முடைய தமோரூப உபாதியோடு கூட்டி உற்பத்தி நாசமுடையதாகச் செய்த தன்மையால் ஆத்மஹத்திதோஷத் தையும் செய்தவனாக ஆகிறான். (11-12)

(மக) சற்குரு பாற்சென்று நற்கதி யடை யெனல்.

(அ - கை.) "ஆசார்யவாந் புருஷோவேத ஆசாரியனைச் சரணாகதியாக அடைந்த புருஷன் தெரிந்து கொள்ளுகிறான்". என்ற பிரகாரம் சரீராதிகளினால் ஏற்படு கிறதான எவ்வித கஷ்டங்களையும் சகித்துக்கொண்டு எவ் விதத்தினாலாவது, பரிபூர்ண சிவ பாவத்தையடைய இச்சித்து பிரம்ம ஞானியைச் சரணாகதியாக அடைந்து பிரகிருதி காரி யங்களாகிற சரீராதிகளிலுள்ள தானெனும் மித்தியாபிமான த்தை விட்டுப் பரிபூர்ண சிவ பாவத்தை அடையவேண்டு மென்கிறார்.

தஸ்மாத்ஸர்வப்ரயத்நேந ஸ்யா ஸம்ஸாரஹேதுத:।
உத்ஸ்ருஜ்ய ப்ராக்ருதம் பாவம் ஶிவோऽஹமிதி பாவயேத்॥

(ப - ம்.) தஸ்மாத் - ஆகையினாலே, ஸர்வப்ரயத்நேந - நிஷ்காம கர்மோபாஸனை முதலிய ஸகலவித பிரயத்

தனத்தினுலும், ஶ்ரேஷ்டயா - மேலான அவாவுடனும், ஶரீராதிஸஹிதம் குருநாதனுக்குத் தன்னுடைய சரீரம் முதலிய சகலத்தையும் சமர்ப்பித்தலுடன் அந்த மகானுடைய ஆஜ்ஞையை எவ்விதத்திலும் ஆக்ஷேபித்து நடக்காததான பக்தியினுலும், ப்ராக்ருதம் பாவம் - பிரகிருதி காரியங்களாகிய ஸ்தூல சரீராதிப் பிரபஞ்சங்களிலுள்ளதான தன்னுடையதென்னும் பார்வையை (நினைப்பை) உத்ஸ்ருஜ்ய - விட்டு, ஶிவோஹமிதி - ஸ்வப்பிரகாச நித்தியமங்கள அகண்டைகரஸ சிவமே நானென்று, பாவயேத் - பாவனை செய்யவேண்டும்.

(தா - ம்) ஆகையினுல் நிஷ்காம கர்மம், உபாஸனை முதலான ஸகலப் பிரயத்தனத்தாலும் மேலான அவாவினுலும் குருநாதனுக்குத் தன்னுடைய சரீரம் முதலிய ஸகலத்தையும் சமர்ப்பித்து அந்த மகானுடைய ஆஜ்ஞையை எவ்விதத்திலுங் கடவாத பக்தியினுலும் பிரகிருதி காரியங்களாகிற ஸ்தூல சரீராதி பிரபஞ்சங்களிலுள்ள தான் தனதென்னும் பொய்ப் பார்வையை (நினைப்பை) விட்டு ஸ்வப்பிரகாச திவ்வியமங்கள அகண்டைகரஸ சிவம் நானென்று பாவனை செய்யவேண்டும்.

(வி - ரை.) "தஸ்மிஜ்ஞாநார்த்தம் ஸமாஸ்ரோவேத ஶ்ருஷ்டிஜ்ஞாநம் ஸமித்பாணி: ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் - அந்த பரிபூர்ணசுவயம் பிரகாசப் பிரஹ்மத்தின் விசேஷஞானத்திற்காக வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற வர்ணாசிரம தர்மங்களைச் சரிவர அனுஷ்டித்து அதனுல் ஏற்பட்ட பூர்ணப் பிரஹ்மானந்தானுபவம் பெற்றவரா யிருக்கிற அந்த ஞானியாகிய குரு

வையேஅடைந்து அவித்தியாகாரியங்களாகிற நாமரூபப்பிரபஞ்சத்தினுடைய வாசனையைவிட்டு பூர்ணப் பிரஹ்மாநந்தத்தை அடைய வேணுமென்ற இச்சையுள்ள புருஷன், [illegible] என்கிறபடி தன்னுடைய சரீரம், தனம், பூமி முதலான எல்லாவற்றையும் அந்த மகானுக்கே ஸமர்ப்பித்து அவருடைய உத்தரவுபடியே நடந்துகொண்டு தன்னிடத்திலேயே தன்னுடைய சுவப்பிரகாசமான ஆத்ம சுவரூபத்தைப்பார்க்கிறான்.'' எனவே இந்த அத்தியாத்ம நிஷ்டையானது குருநாதனுடைய உபதேசமின்றிச் சித்திக்காது என்பது திண்ணம். அந்த குருநாதனுக்குச் சிஷ்யன் செய்துவருகிற மேலான பத்தி முதலான பணிவிடைகளால் அவர் பிரஸன்னராய் சிஷ்யனுடைய தாபத்திரயங்களை நிவர்த்தி செய்து பூர்ணசிவபாவத்தை உபதேச மூலமாகச் செய்து வைக்கிறார்; ஆதலின் முமுக்ஷுக்கள் குரு சுசுரூஷை முதலியவற்றால் அவித்தியாகாரியங்களான நாமரூபப் பிரபஞ்ச பாவனையை விட்டு சுவப்பிரகாச பரிபூர்ண சிவம் நான்தானென்று பாவிக்க வேண்டுமென்க. (13)

(௧உ) ஈசனையன்னிய மாக எஜிப்பவன்
கையமு தெறிந்துகை நக்குவார்க் கோப்பெனல்.

(அ - கை.) "[illegible]" என்னும் பிரமாணப்படி தன்னுடைய ஹிருதயகுகையில் இருந்து பிரகாசிப்பதாயும் சகல அவயவங்களுக்கும் விளக்கத்தைக் கொடுப்பதாயு மிருக்கிற ஈசுவரனைவிட்டு வேறு பிரகாசரூபமான தேவனிருப்பதாக எவர்கள் நினைத்து அவனை அடைய வேண்டுமென்று பிரயத்தனப்படுகிறார்களோ அவர்

கள் தன்கையிலிருந்த மகிமைபொருந்திய கௌஸ்துபமணியை எறிந்துவிட்டு இரத்தினத்தை யடையவேண்டுமென்று நினைக்கிறவர்களைப்போல் ஆவர். இங்ஙனமே தானாக இருக்கிற ஆத்மஸ்வரூப சிவத்தைத் தள்ளிவிட்டு நாம ரூபங்களாயுள்ள உபாதியோடு கூடிய பாகிய பதார்த்தங்களில் சிவத்தை அடைய விரும்புகிறவர்கள் தன்கையிலிருக்கிற அன்னத்தை எறிந்துவிட்டு புறங்கையை நக்குகிறவர்களுக்குச் சமானமாவார்களென்று கூறப்படுகின்றது.

ஆத்மஸ்தம் ய: ஶிவம் த்யக்த்வா பஹி:ஸ்தம் யஜதே ஶிவம் ।
ஹஸ்தஸ்தம் பிண்டமுத்ஸ்ருஜ்ய லிஹேத் கூர்பரமாத்மன: ॥

(ப - ம்.) ய: - எந்த மனுஷ்யன், ஆத்மஸ்தம் ஶிவம் - அவஸ்தாத்ரய சாக்ஷியாய்ச் சரீரத்திரய விலக்ஷணமா யிருக்கிற ஆநந்தசிவமாகிய தன்னை, த்யக்த்வா - தெரிந்து கொள்ளாமல் தள்ளிவிட்டு, பஹி:ஸ்தம் - வெளியில் நாமரூப உபாதிகளோடு அன்னியமாக இருக்கிறதாக நினைக்கப்படும், ஶிவம் - சிவ ஸ்வரூபத்தை, யஜதே - (அடையவேண்டுமென்று) பூஜை முதலியவைகள் செய்கிறானோ, ஸ: - அந்த புருஷன் ஆத்மன: - ஹஸ்தஸ்தம் - தன் கையிலிருப்பதான, பிண்டம் - ஆஹாரத்தை, உத்ஸ்ருஜ்ய - எறிந்துவிட்டு, கூர்பரம் - புறங்கையை, லிஹேத் - நக்குகிறவன் (போன்றவனாவன்).

(தா - ம்.) எந்த மனுஷ்யன் அவஸ்தாத்திரய சாக்ஷியாய் சரீரத்ரய விலக்ஷணமாயிருக்கிற ஆநந்த சிவமாயிருக்கிற தன்னைத் தெரிந்து கொள்ளாமல் தள்ளிவிட்டு வெளியில் தனக்கன்னியமா யிருப்பதாகக் கருதப்படும் நாமரூப உபாதிகளோடு இருக்கிற சிவ ஸ்வரூபத்தை அடையவேண்டுமென்று பூஜை முதலியவைகளைச் செய்கிறானோ அந்த புரு

ஷன் தன் கையிலிருப்பதான ஆஹாரத்தை எறிந்துவிட்டுப் புறங்கையை நக்குகிறவனுக் கொப்பாவான்.

(வி-ரை) யதார்த்தமாயிருக்கிற ஸச்சிதாநந்த கன ஆத்ம ஸ்வரூபத்தைத் தள்ளிவிட்டு எந்த அஞ்ஞானி தன்னிடத்தில் கற்பிதமாயுள்ள நாமரூபப் பிரபஞ்சங்களைக்கானல் ஜலம் போல் மித்தை யென்று தெரிந்து கொள்ளாமல் ஸத்திய மென்று நம்பித் தனக்கன்னியமாயுள்ள ஈசனை அடையவேண்டு மென்று முயல்கிறானோ அவன் தன் கையிலிருந்த அன்னத்தை எறிந்துவிட்டுப் புறங்கையை நக்குகிற புத்தியில்லாதவனுக்கு ஒப்பாவானென்பது தாத்பரியமாம். (14)

(௧௫) அன்னியப்பார்வை யனைத்தும் பொய்யெனல்.

(அ - கை.) ஸகல நாமரூப கற்பனைகளுக்கு அதிஷ்டானமாயும் ஸ்வப்பிரகாச அகண்டைகரஸ சிவஸ்வரூபமாயு முள்ள ஆத்மஸ்வரூபத்தைத் தன்னிடத்தில் அபேதமாய்ப் பார்க்காதவன் தனக் கன்னியமான பாஹ்யவிஷயங்களோடு பார்த்தாலும்உண்மையாய்ப் பாராதவனே யாவன் என்று கூறுகின்றார்.

ஸர்வபூதஸ்தாதாரம் விசுத்தஜ்ஞானதேஹிநம் ।
ஸ்வாத்மந்யபச்யந்பாஹ்யேஷு பச்யந்நபிநபச்யதி ॥

(ப - ம்.) விசுத்தஜ்ஞானதேஹிநம் - பரிசுத்த பிரகாசமே ஆகாரமாயும், ஸர்வபூதஸ்தம் - சகல பூதங்களிலும் அதிஷ்டானமாயு மிருக்கிற ஆதாரம்-அகண்டைக ரஸ ஸ்வரூபமான தன்னை (ஆத்ம ஸ்வரூபத்தை) ஸ்வாத்மநி தன்னிடத்தில் அபச்யந் - அபேதமாய்ப் பாராமல் பாஹ்யேஷு - வெளியாகத் தோன்றுவதான பின்ன

பின்ன நாமரூபப் பிரபஞ்சங்களிலே தனக்கன்னிய மாய் பஶ்யந்தி - பார்க்கிறவனாக யிருந்தாலும். நப ஶ்யதி - உண்மை ஸ்வரூபத்தைப் பார்க்கிறதில்லை.

(தா - ம்.) பரிசுத்தப் பிரகாசமே ஆகாரமாயும், சகல பூத பௌதிகங்களினுடைய கற்பனைகளுக்கு அதிஷ்டான மாயு மிருக்கிற அகண்டைக ரசஸ்வரூபமான தன்னைத் தன் னிடத்தில் பாராமல் வெளியே தோன்றுவதான பின்ன பின்ன நாமரூபப் பிரபஞ்சங்களிலே பார்க்கிறவனாக விருந்தா லும் அவன் ஸ்வரூபத்தை அறிந்தவனல்ல.

(வி - ரை) ஆத்ம ஸாக்ஷாத்காரமாவது அபேத தரிச னமே யாம். தன்னைக் காட்டிலும் அன்னியமாய் ஒரு பரம் பொருள் ஸகல நாமரூப வெளிப்பொருள்களோடு இருப்ப தாக அறிந்தாலும் அங்ஙனம் அறிந்தவன் பேத திருஷ்டி யோடு கூடியவனா யிருப்பதால் அபேத தரிசனமாகிய ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறாதவனே யாகும். ஏனெனில் ஆத்ம தரிசனத்தின் பயன் பரமானந்தப் பிராப்தியாம். இப்பரமானந் தம் பேததரிசனத்தில் சித்திப்பதன்று; த்விதீயாத்வை பயம் பவதி - "இரண்டாவது பொருளினிருப்பில் அதாவது பேத தரிசனத்தில் பயமே உண்டாகின்றது." என்பது இதற்குப் பிரமாணமாம். ஆதலின் ஸகல கற்பனைகளுக்கு அதிஷ்டான மாயுள்ள ஸச்சிதானந்த அகண்டைகரஸ சிவத்தைத் தன் வடி வாகவும் பிரபஞ்ச வடிவாகவும் அபேதமாய்ப் பார்க்கும் வித் வானே ஆத்மாவை யுள்ளபடி அறிந்தவ னென்பது இதன் திரண்ட பொருளாம்.

(௰௪) சொரூபமறிந்தவன் சோகமுறுனெனல்.

(அ - கை.) अशरीरं शरीरेष्वनवस्थेष्ववस्थितम् । महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति ॥ விஷயாதிகளிலுள்ள ஸத்தியத்துவப் பிரமை நீங்கப் பெற்ற தைரியசாலியான ஞானி சரீரம் முதலியவைகளும் அவைகளுக்கு ஏற்பட்டதான அவஸ்தாத்திரயங்களும் தனக்கில்லையென்று நன்றாய்த் தெரிந்துகொண்டிருப்பதால் சரீராதிகளால் ஏற்படுவதான உற்பத்தி நாசம், முதலிய விகாராதிகளால் துக்கத்தை யடைகிறதில்லை என்கிறார்.

अशरीरं शरीरेषु महान्तं विभुमीश्वरम् ।
आनन्दमक्षरं साक्षान्मत्वा धीरो न शोचति ॥ 16

ப - ம்.) शरीरेषु - சரீரங்களிலே (தேகாதி சங்காதங்களிலே) अशरीरम् - சரீரத் திரயவிலக்ஷணமாயும் विभुम् - வியாபகமாயும் आनन्दम् - ஆநந்த கனமாயும், अक्षरम् - நாசமில்லாததாயும் ईश्वरम् - நியாமகனும், महान्तम् - மகத்தாயுமுள்ள ஆத்மஸ்வரூபத்தை, साक्षान्मत्वा - சரீரத் திரயவிலக்ஷணமாயும் அவஸ்தாத்திரயசாக்ஷியாயும் பரிபூர்ண சிவாகாரமான தன் ஸ்வரூபியாய்த் தெரிந்த धीरः - தைரியமுள்ள புருஷன் न शोचति - (சரீராதிகளுக்கு ஏற்படுகிறதான உற்பத்தி நாசங்களான துக்கங்களினால் துன்பத்தை யடைகிறதில்லை.

தா - ம்.) சரீரங்களிலே, (அதாவது தேகாதி சங்காதங்களிலே) சரீரத்திரய விலக்ஷணமாயும், வியாபகமாயும் ஆனந்த

கனமாயும் நாசமில்லாததாயும் எல்லாவற்றினுள்ளிலிருந்து ஏவு கிறதாயும் உள்ள மகா மகிமை பொருந்திய அந்த ஆத்மஸ்வரூபத்தைத் தன் ஸ்வரூபமாய் அறிந்த ஞானியாகிய தீரன் சரீராதிகளுக்கு ஏற்படுகிறதான உற்பத்தி நாசங்களான துக்கங்களினால் துன்பத்தை அடைகிறதில்லை.

(வி-ரை.) "ஶரீரம் வாவஸதம் ந வி யாவதியெ ஸுமதஃ" என்னும் நியாயப் பிரகாரம் சரீராதிப் பிரபஞ்சத்திற்கு வேறாகவும் ஸத்ஸ்வபாவ பரிபூர்ண சிவஸ்வரூபமாகவும் தன்னை நன்கறிந்த ஞானிக்கு உற்பத்தி நாசமாதி விகாரங்களே ஸ்வபாவமாயுடைய சரீராதிப் பிரபஞ்சங்கள் இருப்பதுபோல் உபாதியால் தோன்றினாலும் அவன் அவைகளினாலுண்டாவதாக நினைக்கப்படும் சுக துக்கங்களினால் கட்டுப்படுவதில்லை.

(மரு.) பிரம்மஞானத்தாற் பேதவொழி வேனல்.

(அ-கை.) அஞ்ஞான காரியமாய நாப ரூப மித்தியாத்துவ நிச்சயமான்து ஜீவ பிரஹ்மைக்கிய வடிவ தத்துவ ஞானத்தால் திடமாய் ஏற்பட்டிருக்கையில் பேதம் யாங்ஙனமுளது? இல்லவே இல்லை யென்று கூறுகின்றார்.

விஹெஉஜநகெஜ்ஞாநெ நஷெ ஜ்ஞாநவஶாந்மூநெ ।
கூதெநா ஸூஹ்ணொ ஹெஉஷேஸஜ ஃகரிஷ்யதி ॥

(ப - ம்.) ஹெமூநெ - அத்தியாத்மசாஸ்திரார்த்தத்தில் மனனமுடையவனே; ஜ்ஞாநவஶாத - தத்துவஞான பலத்தினால், விஹெஉஜநகெஜ்ஞாநெ - மித்தையான ஜீவப் பிரம்ம பேதத்தை யுண்டுபண்ணுகிறதான அஞ்ஞானம், நஷெ - நாசத்தை யடைந்திருக்கையில்,

ஸஙஜும் - மித்தையான, ஆதநா லுஷணாஹேஷம் ஜீவ சிவ பேதமானது, கஃகஸிஷ்டி எவன்செய்வான்?

(தா - ம்.) ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிவிப்பதான சாஸ்திரார்த்தத்தில் மனனமுடையவனே! மித்தையான அஞ்ஞான உபாதியினால் தோற்றுவதான ஜீவப்பிரஹ்ம பேதமானது, வாஸ்தவ ஞானமாகிற ஜீவப்பிரஹ்ம அபேத நிச்சயத்தினால் நாசமடைகையில், மித்தையாயுள்ள ஜீவ சிவ பேதத்தை எவன் காண்பான்? (17)

(வி - ரை.) "ரொயாரொ ஆஜிஷெஜுதம் கூஹெஅதம் வாரொயுடுதஃ" பற்பலவாகத் தோற்றுபவையான நாமரூபங்கள் முற்றும் இல்லாததான அஞ்ஞானத்தைக் காரணமாக வுடையவை; அத்வைதமாகிய அபேதமோ உண்மையாயுள்ளது. பரிபூர்ண ஆத்ம ஸ்வரூபத்தை மறைத்து ஜீவப்பிரஹ்ம பேதத்தைச் செய்வதே ஸ்வபாவமாயுள்ள அஜ்ஞானமானது, பாரமார்த்திக சிவ ஜீவ பேதரகித - ஏகரூப - ஆத்ம ஞானானுபவத்தினால் நாசமாயிருக்கையில், மித்தையான ஜீவப்பிரஹ்மபேதம் எங்ஙனமுளதாம்? பேதமில்லாததனால் துக்கம் இல்லை; சுக, துக்காதி த்வந்த்வங்கள் பேதத்தின் காரியமாதலின். (17)

(கஅ) சுத்தமாமான்மா வசுத்தவுலகதாய்ப்
புத்தநிலையிற் சுத்தமா மென்பதோ
டஞ்ஞானச்சே றறிவாம்நீரா
லன்றிகருமத்தால் நீங்காதென்னல்.

(அ - கை.) "ஷுதவவஸஞுஃ நாவதொத யெதகெநஸிக" என்கிறபடி ஆத்மா நித்திய சுத்த ஸ்வரூபமுள்ளது. அதனிடம் அஞ்ஞானத்தினால் நாமரூபப் பிரபஞ்சம் தோற்றுகின்றது. அந்த அஞ்ஞான காரியமான விசித்

திர பிரபஞ்ச சுகதுக்காதிகள் பரிபூர்ண நித்தியாநந்த ஞானத்தினலன்றி மற்ற கர்மோபாஸனைகளால் நிவர்த்தியாவதல்லவென்று இரண்டு சுலோகங்களால் கூறுகின்றார்.

ஆத்மா ஶுத்தஃ ஸதா நித்யஃ ஸுகரூபஃ ஸ்வயம்ப்ரபஃ।
அஜ்ஞாநாதஶுசிர்பாதி ஜ்ஞாநாச்சுத்தோ விபாத்யயம்॥ (18)

அஜ்ஞாநமலபங்கம் யஃ க்ஷாலயேஜ்ஜ்ஞாந தோயதஃ।
ஸ ஏவ ஸர்வதா ஶுத்தோ நாஜ்ஞஃ கர்மரதோ ஹி ஸஃ॥(19)

(ப - ம்.) ஶுத்தஃ - அஞ்ஞான காரியமாகிய சரீராதி சம்பந்தமற்றதும், ஸதா நித்யஃ - தேசகால வஸ்துக்களால் பரிச்சேதப்படாது முக்காலத்திலும் அழியாததும், ஸுகரூபஃ - ஆநந்த வடிவினதும், ஸ்வயம்ப்ரபஃ - தானகவே விளங்கிக்கொண் டிருப்பதுவுமான, அயம் ஆத்மா - இந்த ஆத்மாவானது, அஜ்ஞாநாத் - அஞ்ஞானத்தினல், அஶுசிர்பாதி - அசுத்தம்போல் தோற்றுகின்றது. ஜ்ஞாநாத்-ஞானத்தினல், ஶுத்தோ விபாதி - சுத்தமாய் விளங்குகின்றது.

யஃ - எவன், அஜ்ஞாநமலபங்கம் - அஞ்ஞானமாகிற அசுத்தச் சேற்றை, ஜ்ஞாநதோயதஃ - அபேத தரிசனமாகிற ஞான தீர்த்தத்தால், க்ஷாலயேத் - கழுவிச் சுத்தம் செய்கின்றனே, ஸ ஏவ - அவனே, ஸர்வதா - எப்பொழுதும், ஶுத்தஃ - சுத்தமானவன், நாஜ்ஞஃ - அஞ்ஞானியன்று; (ஏனெனில்) ஸஃ-அவன் (அந்த அஞ்ஞன்) கர்மரதோ ஹி கர்மத்தைச் செய்வதில் ஆசையுடையவனன்றோ ?

(மூ - ம்.) ஆத்மா எப்பொழுதும் சுத்தமாகவும், நித்திய மாகவும், ஆநந்த வடிவமாகவும், ஸ்வயம் பிரகாசமாகவும் இருக்கிறது. இங்ஙனமுள்ள இது அஞ்ஞானத்தால் அசுத்த மாகத் தோன்றி ஞானத்தால் சுத்தமாய்ப் பிரகாசிக்கிறது. எவன் அஞ்ஞானமாகிற அசுத்தச் சேற்றை ஞானமாகிற ஜலத் தினல் சுத்தம் செய்கிறானோ அவன்தான் எப்பொழுதும் சுத் தன்; கர்மத்தில் பிரியமுள்ள அஞ்ஞானி ஒருகாலும் சுத்த னாகான்.

(வி - ரை.) அஞ்ஞான காரியமாகிற காரிய கரண ஸங் காத (கூட்ட)மாகிய சரீராதிப் பிரபஞ்ச சம்பந்த மற்றதும், தேச காலவஸ்துக்களால் பரிச்சேதப்படாமல் நாசரகிதமான தும், சரீராதிப் பிரபஞ்சங்களுக்கே இயற்கையா யுண்டாவ தான உற்பத்தியாதி அறுவித பரிணமங்களாலுண்டாகும் சுகதுக்க சம்பந்தம் சிறிதுமற்ற ஆநந்த வடிவினதும், சூரி யாதி பரப்பிரகாசங்களை யபேக்ஷித்து விளங்குபவையான நாம ரூபப் பிரபஞ்சங்களைப்போ லன்றித்தானே விளங்கிக்கொண் டிருப்பதுமான இந்த ஆத்மாவானது, நித்தியாநித்திய விவே காதி சாதனங்களினின்மையால் குண காரியமாகிய பூத பௌதி கப் பிரபஞ்சங்கள் போல் அசுத்தமாகத் தோன்றுகிறது. சத சத் விவேகம், வைராக்கியம், சமதமாதிகளினடைவு, தன்னை யறியும் வேட்கை, குருபஸதனம், சிரவணம் மனனம், நிதித் தியாஸனம், ஸமாதி முதலியவற்றால் உண்டாகும் அபேத தரி சனமாகிய தத்துவ ஞானத்தினல் அது யதார்த்தமாய்ப் பிர காசிக்கிறது, "𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 𑌸𑍁𑌪𑍍𑌤𑍋 𑌯𑌦𑌾 ஜீவஃ 𑌪𑍍𑌰𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 - 𑌅𑌜𑌮𑌨𑌿𑌦𑍍𑌰𑌮𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 𑌤𑌦𑌾 - இன்ன காலத்திலுண்டானதென்று சொல்வதற்கு முடியாத அநாதிமாயையினல் நித்திரையையடைந்து அந்த அஞ்ஞானத் தினல் கற்பிதங்களான நாமரூபப் பிரபஞ்சங்களாகிற ஸ்வப்நா

வஸ்தையை யடைந்துள்ள ஜீவன், எப்பொழுது ஸ்ரீ குருநாத னுடைய பிரஸாதத்தால் ஸ்வப்பிரகாச பரிபூர்ண ஆத்மஞான மாகிற போதத்தை அதாவது ஜாக்கிராவஸ்தையை (விழிப்பை) அடைவானே, அப்பொழுதே, உண்மையில் உண்டாகாத தாயும், நித்திரா தோஷத்தினால் ஏற்படுவதான ஸ்வப்நா வஸ்தையற்றதாயும், இரண்டாவதற்றதாயுமுள்ள பூர்ணப் பிர காச ஆத்ம ஞானத்தை (அகண்ட போதத்தை) யடைகிறான்" என்னும் சுருதிப் பிரமாணம் ஈண்டறிதற்பாலதாம்.

கருத்திதுவாம் :—ஆன்மா நித்திய மங்கள சுத்தவடிவம். அசுத்தமென்பது ஆன்மாவினிடத்தில் முக்காலத்திலும் இல்லையாம். யதார்த்தத்தை மறைத்துக் கற்பித அயதார்த்தத் தைத் தோற்றச் செய்யும் ஆவரணவிக்ஷேப வடிவ அஞ் ஞானத்தினால் அது அசுத்த நாம ரூபப் பிரபஞ்சம்போல் தோன்றுகிறது. ஞான காலத்தில் யதார்த்தமாய் விளங்கு கின்றது.

எங்ஙனம் ஒரு பொன்னோ அல்லது இரத்தினமோ அசுத்த (அப்பிரகாசமாகிய) சேற்றால் மறை பட்டபோது பொன்மணிகளின் பிரகாசம் மழுங்கி, ஜலத்தால் கழுவப் பட்டபோது அவை நன்கு பிரகாசிக்குமோ, வங்ஙனமே அஞ் ஞானமாகிற அசுத்தச் சேற்றை அதாவது தன் அந்தக்கர ணத்திலுள்ள அசுத்த வாஸனையை, எந்த ஜீவன் ஸ்வதஸ் ஸித்த அத்வயஜ்ஞானனுபவமாகிற ஜலத்தினால் கழுவுகிறானே அதாவது பேதநாட்டமாகிற வாஸனையை ஒழிக்கிறானே அவனே ஆத்மாவின் உண்மையான சுத்த வடிவினன்; பின்ன வாஸனையோடு கூடிய அந்தக்கரணமுள்ள கர்மியல்லன். கர்மமோ பேதப்பிரதீதியாலுண்டாவதான அநுகூலப் பிரதி கூல விருத்திகளை யாதாரமாகக் கொண்டது. கர்மத்தின் காரணம் அஞ்ஞானமாம். அஞ்ஞானம் அசுத்தமாதலின்,

அதன் காரியமாகிய கருமத்தால் எந்த ஜீவனும் சுத்தமாவ தில்லை. இது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளு கைக்கு நிகராம். இந்த இரண்டு சுலோகங்களாலும் ஆத்மா வின் இயற்கையும், அதனுடைய கற்பிதத் தோற்றமும், கற் பிதத் தோற்றம் நிவர்த்தியாகும் சாதனமும் கூறப்பட்ட தென்க. (18-19)

(௧௭) முற்றுணர் ஞானிக்கு மூவ்வுலகத்திலும்
சற்றுஞ்செய்கையில் சாந்தியாலெனல்.

(அ-கை.) நித்ய பரிபூர்ணாத்ம ஜ்ஞானானுபவமாகிற ஜல த்தினால் அசுத்தமான அஞ்ஞானகாரியங்களாகிற சரீரா திப் பிரபஞ்சங்களிலுள்ள சத்தியத்துவப் பிராந்தியான மல மானது சுத்தம் செய்யப்பட்டுச் செய்யவேண்டியவைகளெல் லாம் செய்து முடித்த ஜீவபிரஹ்ம அபேத ஞானானுபவ யோ கிக்கு, இந்தப் பிரபஞ்சத்தில் செய்யவேண்டிய தொன்று மில்லை யென்றும், அவ்விதமின்றிச் செய்யவேண்டுமென்னும் அந்தக் காண சலனவிர்த்தி ரூபமான காமாதி சேஷ்டைகள் இருப்பவன் வாஸ்தவமான ஆத்ம தத்துவத்தை அறிந்தவ னல்லவென்றும், யதார்த்தாத்மானுபவ ஞானத்தினால் கிருத கிருத்தியத்தையை யடைந்த ஞானிக்கு மூன்று லோகத்தி லும் செய்யத்தகுந்தது ஒன்றுமில்லை யென்றும், அந்த மகான், திவ்விய ஞானானுபவ சித்தியினால் ஈண்டே ஜீவன் முக்தனாகிறா னென்றும், இரண்டு சுலோகங்களால் சொல்லப் படுகின்றன.

𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌮𑍃𑌤𑍇𑌨 𑌤𑍃𑌪𑍍𑌤𑌸𑍍𑌯
𑌕𑍃𑌤 𑌕𑍃𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃
𑌨 𑌤𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂
𑌅𑌸𑍍𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍𑌨 𑌸 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 ॥ (20)

ஞொகஞூயொவிகூத்ருவூ௦
கிஞிஞாவூாநூஜ்வெஷி_நாம் ।
ஐஶெஹவஜீவநாஷூஜொஷூ
ஐஷஹவெஷிகிஷிமூஷகி: ॥ (21)

(ப - ம்.) ஜூாநாஂஷஹெவெவ - நித்திய பிரகாசாத்மஞானு ஹுபவமாகிற ஜலத்தினல், ஶுஷஜவூ - (அஞ்ஞான காரியங்களான நாமரூபப் பிரபஞ்சங்களிலுள்ள ஸத்திய புத்தியாகிற அசுத்தத்தி லிருந்து) சுத்த மடைந்தவனும், கூநூக்கூநூவூ-செய்யவேண்டியவற்றைச்செய்து நித்யாத்மானுபவ ஞானசித்தி யடைந்தவனுயிருக்கிற, யொமிநஃ - ஜீவ பிரஹ்மபேத மில்லாத அபேதானுபவ யோகிகளுக்கு, கஷிநுஞொகெ - இந்தப் பார்க்கப்படுகிறதான பிரபஞ்சத்தில், கூதருவூஞாவி - செய்ய வேண்டியதாயும் அடையவேண்டியதாயும் ஒன்றுமில்லை. கவூிவெகஂ - (அந்தக்கரணத்தினுடைய சலன விருத்தி ரூபமான செய்கை, அதினுலுண்டாகும்பலன், இவைகள்) இருக்குமானல், ஸஃ - அந்த அஞ்ஞானி நதகூவிகஂ - வாஸ்தவமான ஜீவபிரஹ்ம பேதமில்லாத உண்மையைத் தெரிந்தவனன்று.

ஞூநூவெஷி_நாம் ஸத்தியமான ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்த ஞானிகளுக்கு ஞொகஞூயொவி - பூமி அந்தரிக்ஷம் சுவர்க்கங்களாகிற மூன்று லோகங்களிலும் கிஞிகஂ கதருவூ௦நாவி - கொஞ்சங்கூடச் செய்யவேண்டியவைகளில்லை, தெ - அந்த பூர்ணாத்ம ஞானிகள், ஐஶெஹவஜீவநாதாஜீ - (தோற்றல்மாத்திரமான அவித்தியாகாரிய நாம

ரூபப் பிரபஞ்சங்களிலுள்ள ஸத்தியத்துவ பிராந்தி நீங்கி ஸத்தாஸ்பூர்த்தியான ஏகாத்ம ஞானுனுபவ பலத்தினுல், இங்கேயே, சரீரத்திரய விலக்ஷணமாயும், அவஸ்தாத்திரய ஸாக்ஷியாயுமிருக்கிற)ஜீவன் முக்தர்களென்று - ஐஹவெஷி திஷிரூ-ஷிஃ - இங்கேயே கிருதகிர்த்தியதையை யடைந்து ஸத்தியார்த்தத்தை அடைந்தவனென்று வேதமானது சொல்லுகிறது.

(தா-ம்.) நித்தியப் பிரகாசாத்ம ஞானுனுபவமாகிற ஜலத்தினுல் அஞ்ஞான காரியங்களான நாமரூபப் பிரபஞ்சங்களிலுள்ள ஸத்திய புத்தியாகிற அசுத்தத்திலிருந்து சுத்தமடைந்தவனுயும், செய்யவேண்டியதாகவில்லாத நித்தியாத்மானுபவ ஞானஸித்தி யடைந்தவனுயுமிருக்கிற ஜீவப்பிரஹ்ம பேதமற்ற அபேதானுபவ யோகிகளுக்கு இந்தப் பார்க்கப்படுகிறதான பிரபஞ்சத்தில், செய்யவேண்டியதாயும் அடையவேண்டியதாயும் ஒன்றுமில்லை. அந்தக்கரணத்தினுடைய சலனவிருத்தி ரூபமான செய்கை, அதனுலுண்டாகும் பலன், இவைகளினிச்சையவர்களுக்கு இருக்குமானுல் அந்தப் புருஷர்கள் வாஸ்தவமான ஜீவபிரஹ்ம பேதமில்லாத உண்மையைத் தெரிந்தவரல்லர். ஸத்தியமான ஆத்மஞானத்தை யடைந்த ஞானிகளுக்குப் பூமி அந்தரிக்ஷ சுவர்க்கங்களாகிற மூன்று லோகங்களிலும் கொஞ்சம் கூடச் செய்யவேண்டியவை இல்லவே இல்லை. அந்த பூரணுத்ம ஞான புருஷர்கள், தோற்றல் மாத்திரமான அவித்தியா காரிய நாம ரூபப்பிரபஞ்சங்களிலுள்ள ஸத்தியத்துவப் பிராந்தி நீங்கி ஸத்தாஸ்பூர்த்தியான ஏகாத்ம ஜ்ஞானுநுபவ பலத்தினுல், இங்கேயே, சரீரத்திரய விலக்ஷணமாயும் அவஸ்தாத்திர ஸாக்ஷியாயுமிருக்கிற ஜீவன் முத்தியை யடைந்தவர்களென்று வேதமானது சொல்லுகிறது.

(வி-ரை.) "ஐ.ஹஹெஷெஷீஷயஹ.த்ரஜேஷ்" காட்டுத் தீயிலகப்பட்டுக் கொண்டு கஷ்டப்படுகிற ஒரு ஜீவனுக்கு, அந்த அக்கினி பாதையிலிருந்து அவனை விடுவிக்குஞ் சாமர்த்தியமும் தயாள குணமுமுள்ள புருஷனைப்போல், ஸம்சாரத்தினலாகிய தாபத்திலிருந்து விடுபட்டுப் பரமசாந்த பதவியை அடைய வேண்டுமென்ற தீவிர விச்சையுடைய புருஷனுக்குப் பரிபூர்ண சிவானுபவ ஞானியினுடைய உபதேசத்தினல், அனித்தியமாகிய ஸம்சாரப் பிரபஞ்சத்தினின்றும் விடுபட்டு, உற்பத்தி நாசம் முதலான அஞ்ஞான காரிய சரீராதிப் பிரபஞ்சங்களினுடைய தாதாத்மியப் பிராந்தி நிவர்த்தியாய், பரிபூர்ண சுவப்பிரகாச சிவரூபமான ஸத்தியார்த்த ஜ்ஞானனுபவஸித்தி யேற்படுகின்றது. இவனுக்குச் சகல காமனைகளும், அபேதப் பார்வையால் நீங்கினமையால், மூன்று லோகங்களிலும் செய்ய வேண்டியவை யாதுமின்றென்று கூறப்பட்டதென்க. (20-21)

(கஅ) இன்புருவான தன்னிலை யொழித்துத்
துன்புல குறுபவன் துர்ச்சன னென்னல்.

(அ - கை.) ஆநாகூரெஷவ ஸவ.ஃவாஸாவஹா.கிஃ கூரீஜெணஃ ஜெஉெஸெஜ.ஃநஃஷ்ரஜ.த.ந்ருஷ.ஹாணிஃ ॥ ஸுயம்பிரகாசரூப ஆத்ம ஸ்வரூபத்தை அறிவதனல் ஸகல கர்மபாசங்களினுடைய அழிவும், அதனல் சகல துக்க நாசமும், அதனல் ஜனனமரண ரூப ஸம்ஸார நிவர்த்தியும் ஏற்படுகிறதென்கிற பிரமாணப் பிரகாரம், அமிருத ஸ்வபாவமான சுயம்பிரகாச ஆத்ம ஞானனுபவத்தை விட்டுக் கெட்ட நடையை யுடையை மனிதர்கள், சாரமில்லாததான சம்சாரத்தில் கிடந்து அஞ்ஞானத்தினல் மோகத்தை யடைந்து சுழல்கிறார்களென்று ஆச்சரியப்படுவதுடன், நித்தியாபரோக்ஷமான ஆத்ம ஞானனுபவமாகிற சாரத்தை ருசிபார்த்தவன், பிராரப்த நிமித்த

மான சரீராதிப் பிரபஞ்சங்களினுடைய வியவகாரம் வாசனுபலத்தினால் தோற்றப் பட்டாலும், அவைகளை மித்தியா விஷயங்களென்று தள்ளி, ஸ்வரூபமான ஆத்மானுபவ ஞானத்தை உடனே அடைவானென்றும், எவன் அந்த ஸ்வரூப ஆத்ம ஞானனுபவத்தைவிட்டுத் தோற்றல் மாத்திரமான சரீராதிப் பிரபஞ்சத்தை வாஸ்தவமாக வெண்ணிச் சந்தோஷப்படுகிறானோ, அவன் கெடுதலான புத்தியுள்ளவனென்றும் சொல்லுகிறார்.

அஹோ ஜ்ஞாநாம்ருதம் த்யக்த்வா மாயாபரிமோஹிதா: ।
பரிப்ரமந்தி ஸம்ஸாரே ஸதாஸாரே நராதமா: ॥ (22)
ஜ்ஞாநாம்ருதரஸோயேந ஸக்ருதாஸ்வாதிதோ பவேத் ।
ஸ ஸர்வகார்யமுத்ஸ்ருஜ்ய தத்ரைவ பரிதாவதி ॥ (23)
ஜ்ஞாநாம்ருதரஸஸ்பர்ஶோ யேந நாஸ்வாதிதோ பவேத் ।
யோவாந்ருத்தாவிரக்தசித்தோ ஸாமேயேவ ஹ்ருஜ்ஜீவதி: ॥

ப - ம்.) நராதமா: - (துக்கத்தையே கொடுப்பதான சரீராதிப் பிரபஞ்சத்தை ஸத்தியமாக நினைக்கிற) கெட்ட மனுஷ்யர்கள், மாயாபரிமோஹிதாஸ்ஸந்த: - வாஸ்தவத்தை மறைத்து வேறுவிதமாகக் காட்டும் அஞ்ஞானத்தினாற்பெரியமயக்கத்தை அடைந்தவர்களாய், ஜ்ஞாநாம்ருதம் த்யக்த்வா - நித்திய பரிபூரணனந்த ஆத்ம ஞான ரஸத்தைவிட்டு, ஸதாஸாரே - எப்பொழுதும் ஸாரமில்லாததான (அஞ்ஞானத்தினால் தோற்றலமாத்திரமான) ஸம்ஸாரே - சரீராதிப் பிரபஞ்சத்தில், பரிப்ரமந்தி - சுழல்கிறார்கள். அஹோ - என்ன ஆச்சரியம்!

யேந - எந்த நித்தியா நித்திய விவேக ஞானமுடைய புருஷனாலே, ஜ்ஞாநாநந்தரஸ: - துக்க ரூபமான சரீராதி சம்பந்தம் சிறிது மில்லாததான நித்தியாத்ம ஞானமிருத ரஸமானது, ஸக்ருதாஸ்வாதிதோபவேத் - ஒரு தடவை அனுபவிக்கப்படுமே யானால், ஸஸர்வகார்யமுத்ஸ்ருஜ்ய அந்த நித்தியாத்ம ஞானானுபவ ரஸத்தை அனுபவித்த உத்தம புருஷன், பிராரப்தவசத்தினால், சரீராதிப் பிரபஞ்சம் தோற்றினாலும் அவைகள் வாசனாபலத்தினால்மித்தையாகத் தோற்றுகிற தென்று தள்ளி, தமேவாஸ்வாதயதி - ஸத்தியமாகிற பிரகாசாத்ம ஞானத்தையே அனுபவிப்பதற்குத் தாவுகிறான் (ஸ்வப்பிரகாசபரிபூரணாத்ம ஞானானுபவத்தையே ஸதா நாடுகிறான்.

யோவா - எந்த புருஷனாவது, தஸ்ஹாய - அந்த நித்திய நிரதிசயாநந்த ஞானத்தைவிட்டு, துர்புத்தி: - துர்ப்புத்தியினால், அந்யத்ராபிரமேத - அந்நியமாயுள்ள மித்தியா சரீராதிப் பிரபஞ்சங்களில் ரமித்து வருகிறானோ, யேந - அந்தப் புருஷனால் ஸ்தாய: - அநேகமாய், ஜ்ஞாநாநந்தரஸ: - எவ்விதத்திலும் மாறாத பரிபூர்ண ஆத்மஞான அநுபவ ரஸமானது, நஸ்வாதிதோபவேத் - அனுபவிக்கப் பட்டதாக ஆகாது.

(தா - ம்.) துக்கத்தையே கொடுப்பதான சரீராதிப் பிரபஞ்சத்தை ஸத்தியமாக நினைக்கிற கெட்ட மனுஷ்யர்கள் வாஸ்தவத்தை மறைத்து வேறுவிதமாகக் காட்டும் அஞ்ஞானத்தினால் பெரிய மயக்கத்தை யடைந்தவர்களாய் நித்திய பரிபூர்ணாநந்த ஆத்மஞான ரஸத்தைவிட்டு விட்டு, எப்பொழுதும், ஸாரமில்லாததான (அஞ்ஞானத்தினால் தோற்றல் மாத்

திரமான) சரீராதிப் பிரபஞ்சத்தில் சுழல்கிறார்கள்; என்ன ஆச்சரியம் !

எந்த நித்தியா நித்திய விவேகமுடைய புருஷனாலே துக்கரூபமான சரீராதி ஸம்பந்த மில்லாததான நித்தியாத்ம ஞானாமிருதரஸமானது ஒரு தடவை அநுபவிக்கப் பட்டதோ, அந்த நித்தியாத்ம ஞானானுபவ ரஸத்தை அநுபவித்த உத்தம புருஷன் பிராரப்தவசத்தினால் சரீராதிப் பிரபஞ்ச விவகாரங்களை (வாஸனா பலத்தினால் மித்தையாகத் தோற்றுகின்றனவென்று) தள்ளி, ஸத்தியமாகிற பிரஹ்மாத்ம ஞானத்தையே அநுவிப்பதற்கு அதிலேயே இருக்கிறான்.

எந்த புருஷன் அந்த நித்திய ஸ்வாத்மாநந்தத்தை விட்டுத் துர்ப்புத்தியினால் அந்நியமான மித்தியாப் பிரபஞ்சத்தில் ரமிக்கிறானோ அவனால், அநேகமாய், எவ்விதத்திலும் மாறாத பரிபூர்ண ஆத்மஞான அநுபவரஸமானது அநுபவிக்கப் பட்டதாக ஆகாது.

(வி - ம்.) "ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நானேவ பஶ்யதி - இந்தப்பிரகாச பரிபூர்ண பிரஹ்மத்தில் எவன் கற்பனையான பல நாமரூபங்களைப் பார்க்கிறானோ, அந்த மனுஷ்யன் ஜனனமரண ரூப சரீராதிகளையே அடைகிறா" னென்றும், "ரஸம்ஹ்யேவாயம் லப்த்வானந்தீ பவதி" (அசாரமாயும் தோன்றி மறைவதாயுமுள்ள நாமரூபப் பிரபஞ்ச கற்பனைகளுக்கு அதிஷ்டானமாயும் உற்பத்தி நாசம் முதலான விகார பாவங்களற்ற தாயுமிருக்கிற) ஏக ரஸ ஸ்வரூபமான ஆத்மரஸத்தை அடைந்து ஆனந்தத்தை அநுபவிக்கிறார்க" ளென்றும் பல பிரபலப் பிரமாணங்களிருப்பதால், ஸதஸத் விவேகத்தினால் மித்தியா நிவர்த்தி பூர்வகமான ஸத்யாத்மஞானத்தை அடையாத அஞ்

ஞ புருஷர்கள், நதியின் பெரிய பிரவாகத்திலுள்ள பெருஞ் சுழியிலகப்பட்ட புழுவைப்போல் மேலுங்கீழுமா யிருக்கிற சரீராதிப் பிரபஞ்சத்தையே அடைந்து கஷ்டப்படுகிறார்களென்று ஆச்சரியப்படுவதுடன் சாஸ்திரார்த்த விசாரணையினாலுண்டான விவேக ஞானத்தினால், எந்தப் பிரகாச ரூப ஆத்ம ஞான ரஸமானது எந்த விவேகியினால் அனுபவத்திற்குக் கொண்டு வரப்பட்டதோ அந்த ஞானிக்குச் சரீராதி வியவகாரங்களில் ஸத்தியத்துவப் பிரமம் எப்பொழுதும் உண்டாகாதென்றும், எவன் அஞ்ஞான காரியமான சரீராதிப் பிரபஞ்சங்களை ஸத்தியமாக நினைத்து, நித்திய சுத்தபுத்த முக்த ஏகரஸ சுவரூபமான ஆத்ம ஸ்வரூப ஞானத்தை விட்டுத் துர்ப்புத்தியினால், கானலில் தோன்றும் நீர் போலுள்ள பிரபஞ்ச சுகங்களை யடைகிறானோ, அந்த அஞ்ஞ புருஷன் தனக்குச் சுகத்தைச் செய்வதான அமிருத ரூபமான அன்னத்தை விட்டுச் சரீரத்திற்குக் கெடுதியையே செய்யும் விஷத்தைச் சாப்பிடுகிற துஷ்ட மனுஷ்யனுக் கொப்பாவானென்பது தாத்பரியமாம். (22-24)

(கக) உலகநாட்டத்தோ ருண்மையறி யாரெனல்.

(அ - கை.) "ஸர்வம் க²ல்விதம் ப்³ரஹ்ம - தோற்றல் மாத்திரமான இந்த நாம ரூப உலகம் அதிஷ்டான வடிவ ஸச்சிதானந்தப் பிரஹ்மந்தான்" என்று ஞானிகள் அறிந்திருக்கிறார்கள். அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்ட மனதையுடையவர்கள் சுக சொரூபமான ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளுகிறதில்லையென்று கூறுகிறார்.

ஆத்மைவேதம் ஜக³த்ஸர்வம் ஜ்ஞாநிநாம் விஜாநதாம் ஸதா³ ।
அஜ்ஞாநேநாவ்ருதாத்மாநோ ந விஜாநந்தி ஶங்கரம் ॥ (25)

(ப - ம்.) ஞாநிந: - ஞானிகள், இதம் ஸமஸ்தம் - காணப்படும்படியான இந்த உலகமெல்லாம், ஸத்யம் வேத்தி - ஸத்தியப்பிரகாச ஆத்மாதானென்று, ஜாநந்தி - தெரிந்திருக்கிறார்கள்; அஜ்ஞாநமோஹிதா: - அறிவில்லாததினுல் மயங்கிய (ஜனன மரணப் பிரவாகத்தோடு கூடியதான சரீராதிகளைத் தானென்று அபிமானித்த) அஞ்ஞானிகள், ஸுகம் - நித்திய நிரதிசயானந்த ஸுகாகாரமாயிருக்கிற ஆத்மசிவத்தை, ந விஜாநந்தி - தெரிந்துகொள்ளுகிறதில்லை.

(தா - ம்.) ஞானிகள் அவித்யோபாதியினுற் பலவாகத் தோற்றுகிற நாமரூபங்களி லெல்லாம், தோற்றல் மாத்திரமான நாமரூப நாட்டத்தை விட்டு, ஸத்தா ஸாமானியமான ஸச்சிதாநந்த ஆத்மஸ்வரூபத்தையே எங்கும் பார்க்கிறார்கள். (அறிவில்லாததினுல் மயக்கம் ஏற்பட்டு ஜனன மரணப் பிரவாகத்தோடு கூடியதான சரீராதிகளைத் தானென்று அபிமானித்த) அஞ்ஞர்கள், நித்திய நிரதிசயானந்த சுகாகாரமா யிருக்கிற ஆத்மசிவத்தைத் தெரிந்துகொள்ளுகிறதில்லை.

(வி - ம்.)" ஸர்வம் ஸத்ரூபம் ஸர்வம் ஸ்வப்ரகாசம் - ஸர்வமாகத் தோற்றுகிறதான உபாதிகளினுடைய இருத்தல் என்பது காலத்திரயத்திலும் மாறுபடாததான பிரஹ்மந்தா னென்றும், விளங்குதலை யுடையதான நாமரூபங்களினுடைய விளக்கம் வேறு பிரகாசத்தை அபேக்ஷிக்காத பிரஹ்மப் பிரகாசமே" என்றும் ஞானிகள் தெரிந்துகொண்டிருப்பதால், தோன்றிவிளங்கும் இந்த ஜகத்தும் நித்தியாத்ம சொரூபந்தா னென்று நன்கு தெரிந்திருக்கிறார்கள்; நாமரூபங்களைச் சத்தியமாகப் பார்க்கிற

அஞ்ஞானிகள் நித்தியப் பிரகாச சுகாகார ஆத்ம சிவத்தை யறிவதில்லை. பாம்பைப் பார்ப்பவர்கள் கயிற்றை யெங்ஙனம் அறியக் கூடும்? (25)

(உ௬) சுயவறிவுடையோர்க்குச் சுக துக்க மில்லை எனல்.

அ - கை.) ஶரீரஂ வாவ ஸந்தஂ ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத: - அஞ்ஞானத்தினல் தோற்றுகிற சரீர நாட்டமானது, பிரகாசரூப ஆத்ம ஞானத்தினல் பாதத்தை யடைந்த ஞானிக்கு, அவித்யாகாரியங்களான சரீராதிகளுக்கு ஏற்படுகிறதான ஜனன மரண ரூப இஷ்டாநிஷ்டப் பிராப்தி வடிவ சுக துக்கங்களினுடைய பற்றுதலில்லை யென்று சொல்லுகிறுர்.

ஶரீரோ ஹ்யநாநாத்மா ஸர்வது:கைர்ந பாத்யதே।
க்லேஶஹீந: பூர்ணாத்மா ஹீநது:க்த உச்யதே போதிபி: ॥

(ப - ம்.) ஹ்யநாநாத்மா - தேசகால வஸ்துக்களால் பிரிவையடையாது எங்கும் வியாபகமான ஆத்மா, ஶரீர: - இல்லாததான அஞ்ஞான காரியங்களான சரீராதிகளற்றது. ஸர்வது:கைர்ந பாத்யதே - அஞ்ஞான காரியங்களாகிற சரீரங்களினுடைய இஷ்டா நிஷ்ட ரூபங்களான சுகதுக்கங்களால் பாதிக்கப்படுகிற தில்லை. க்லேஶஹீந: - வியாவகாரிக சரீராதிகளின் துக்கங்களினின்றும் விடுபட்ட - பூர்ணாத்மா - பூர்ணப் பிரகாச ரூபமான வியாபக ஆத்மானுபவ ஞானியானவன், போதிபி: - பூர்ண போதத்தை அடைந்த ஞானிகளால், ஹீநது:க்த உச்யதே - அஞ்ஞான காரியப் பிரபஞ்சங்களினுடைய துக்கங்களின்றும் விடுபட்டவனென்று சொல்லப்படுகிறுன்.

(தா-ம்) தேசகால வஸ்துக்களால் பிரிவுதலடையாது எங்கும் வியாபகமான ஆத்மா, இல்லாததான அஞ்ஞான காரியங்களான சரீராதிகளற்றதாயும் சுகதுக்காதிகளால் பாதிக்கப்படாததாயுமிருக்கிறது; இத்தகைய லக்ஷணங்களோடுகூடிச் சகல விவகாரக் கிலேசங்களினின்றும் விடுபட்ட அபரோக்ஷ ஞானியைப் பெரியோர் முத்தனென்று சொல்லுகிறார்கள். (26)

(வி-ரை) "அஶரீரம் ஶரீரேஷ்வநவஸ்தேஷ்வவஸ்திதம் மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ ந ஶோசதி" விஷயாதிகளிலுள்ள ஸத்தியத்துவப்பிரமை நீங்கப்பெற்ற தைரியசாலியாய ஞானி, சரீரம் முதலியவைகளும், அவைகளுக்குரித்தான அவஸ்தாத்திரயங்களும் தனக்கில்லை யென்று நன்றாய்த் தெரிந்து கொண்டிருப்பதனால், சரீராதிகளால் ஏற்படுவதான துக்கத்தை யடைகிறதில்லை" என்னும் பிரமாணப்படி எந்த மகா புருஷன் அவித்யாதி பஞ்ச கிலேசங்களினின்றும் விடுபட்டுத் தன்னை யுள்ளபடி அதாவது அசரீரியாயும், வியாபகமாயும், சுக துக்காதி துவந்துவ அஸங்கனயும் அறிந்திருக்கிறானே, அவனே ஜீவன் முக்தனெனப் பெரியோர் கூறுவர்.

கிலேசங்கள் ஐந்தாம். அவை அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசம் என்பனவாம் - அவித்தையென்பது அஞ்ஞானம்; அஸ்மிதையாவது தானல்லாத பஞ்ச கோசங்களில் தானெனும் மயக்க உணர்வு; ராகமென்பது ஆசை, துவேஷம் வெறுப்பு; அபிநிவேசம் என்பது தனக்கும் அதாவது ஜீவனுக்கும், சரீரத்திற்கும், விஷயாதிகளுக்கும் உள்ள சம்பந்த நீக்கத்திலேற்படும் பயம். இவைகளினின்றும் நீங்கிய பிரஸன்ன ஆத்மாவே முத்தனாம்.

ஈண்டு, வ்யஸ்த மென்பது அபரோக்ஷ அநுபவத்தை அதாவது ரஜோகுண தமோகுண விருத்திகளனைத்தும் நீங்கிச்

சத்துவாகாரமான சுத்த சித்தத்தில் அகண்டாகார விருத்தியால், தான் சரீரத்திரய விலக்ஷணனையும், அவஸ்தாத்திரயஸாக்ஷியாயும், பஞ்சகோச விலக்ஷணனையும் அறிந்து அங்ஙனமே நிற்கும் நிலையினைக் குறிப்பிப்பதாம். இத்தகைய நிலையில் நிற்கும் மகானே ஜீவன் முத்தனெனப்படுவன்; இவன் தான் சோகத்தைக் கடந்தவன். "தரதிசோகமாத்மவித்" என்பதிற்குப் பிரமாணமாம்.

(உக) நன்னிலைச் சாதனம் ஞானமே யெனலோடு
பன்னுங் கரும மன்றெனப் பகறல்.

(அ - கை) அவிவேகத்தினால் தோன்றும் சரீராதிப் பிரபஞ்ச துக்க நிவர்த்தியானது சரீராதிப் பிரபஞ்ச மித்தியாத்துவ நிச்சயமாகிற தத்துவ ஞானத்தினாலேயே ஏற்படுவதல்லது அஞ்ஞான காரியங்களான கர்மோபாஸனைகளாலன்று என்பது ஈண்டுக் கூறப்படுகின்றது.

தஸ்மாத³ஜ்ஞாநஜாநி த்³ருஷ்டஶ்ருதாநி தே³ஹிநாம் ।
ஜ்ஞாநேநைவ நிவ்ருத்திஸ்ஸ்யாத³ஜ்ஞாநஸ்யாநகர்மபி⁴: ॥ (27)

நாஸ்திஜ்ஞாநஸமம் கிஞ்சித் பவித்ரம் பாபநாஶநம்
தது³ஷ்ட்ராஸாத்⁴யதே நாஸ்தி ஸம்ஸாரஸ்ய காரணம் ॥ (28)

(ப. - ம்.) தேஹிநாம் - சரீராதிகளைத் தானென்று மதித்தவர்களுக்கு, அஜ்ஞாநஜாநி - அவிவேகமாகிற காரணத்தை உடையவைகளான, த்³ருஷ்டஶ்ருதாநி - காணப்படுகிறதான இந்தப் பிரபஞ்சத்தினுடையவும், கேட்கப்படுவதான பரலோகங்களினுடையவுமான எல்லாச் சரீராதி துக்கங்களும் (ஏற்பட்டிருக்கின்றன). தஸ்மாத் -

ஆகையினால், அஜ்ஞாநஸ்ய - இல்லாத அஞ்ஞானத்தைக் காரணமாக வுடைத்தான சரீராதிப் பிரபஞ்சங்களி னுடைய, நிவ்ருத்தி:-காலத்திரயத்திலும் இல்லையென்ற நிச்சயம், ஜ்ஞாநேநைவ - நித்திய ஸ்வப்பிரகாச பூர் ணாத்ம ஞானத்தினால்தான், ஸ்யாத்-உண்டாகிறது; ந க்ரியாபி:-சரீரங்களினால் செய்யப்படுகிறதான கர்மோபாச னைகளால் உண்டாகிறதில்லை.

பாபநாஶநம் - (சரீரத்தைத்தானென்று நினைத்ததனால் உண்டான) பாபத்தினுடைய நாசத்தைச் செய்ய, ஶுத்தம் - பரிசுத்தமான பிரயச்சித்தமானது, ஜ்ஞாநாத் ருதே - நித்யபரிபூர்ண ஸ்வப்பிரகாச ஆத்மஞானத்தை விட வேறாக, கிஞ்சிதபி - கொஞ்சங்கூட இல்லை. தஸ்யாப்யாஸாத்ருதே - இந்த ஸ்வப்பிரகாச ஆத்மஞான சாஸ்திரப் பழக்கத்தைக் காட்டிலும், ஸம்ஸாரரோகஸ்ய துகாரணம் - ஜனனமரண ரூப ஸம்சாரத்தினுண்டா கிற துக்கங்களினுடைய அத்தியந்த நிவர்த்தியானது, நாஸ்தி - இல்லை.

(தா - ம்.) சரீராதிகளைத் தானென்று மதித்தவர்களுக்கு, அவிவேகமாகிற காரணத்தை உடையவைகளான, காணப்படு கிறதான இந்தப் பிரபஞ்சத்தினுடையவும், கேட்கப்படுகிற தான பரலோகங்களினுடையவுமான எல்லாச் சரீராதி துக்கங் களும் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையினால் இல்லாத அஞ்ஞா னத்தைக் காரணமாய் உடைத்தான சரீராதிப் பிரபஞ்சங்களி னுடைய நிவர்த்தி (காலத்திரயத்திலும் இல்லையென்கிற நிச் சயம்) நித்திய சுவப்பிரகாச பூர்ணாத்மஞானத்தினால்தான் உண்டாகிறது; கர்மத்தினாலன்று.

சரீரத்தைத் தானென்று எண்ணினதிலுண்டான பாபத்தினுடைய நாசத்தைச் செய்ய மிகச்சுத்தமான சாதனம் நித்தியபரிபூர்ண சுவப்பிரகாச ஆத்மஞானத்திற்குவேறு கொஞ்சங்கூட இல்லை; அந்தச்சுவப்பிரகாச ஆத்ம ஞானசாஸ்திராப்பியாசத்தைக்காட்டிலும் வேறாகிய ஸாதனத்தினால் ஜனனமரணரூப ஸம்சாரத்தினாலுண்டாகிற துக்கங்களினுடைய அத்தியந்த நிவர்த்தியானது உண்டாவதே இல்லை.

(வி ரை.) "ஜ்ஞாநாதேவ து கைவல்யம்-சுவப்பிரகாச ஆத்மஞானத்தினால்தான் அத்தியந்த துக்க நிவர்த்தியான மூக்தியாகிற பரமபுருஷார்த்தம்" என்கிற பிரகாரம் சரீராதிகளில் தானெனும் மயக்கத்தினாலுண்டான திருஷ்டானுசிராவிகமான துக்கங்களின் அத்தியந்தநாசம், காரணத்தோடுகூடியதான சரீராதிப் பிரபஞ்சமித்தியா நிச்சயத்தினாலும், நித்திய பரிபூர்ண சுவப்பிரகாச ஆத்மஞானத்தினாலுமே யன்றி வேறு அஞ்ஞானகாரியங்களான சரீராதிப் பிரபஞ்சங்களாலுண்டாகிறதில்லை. ஆகையால், நித்திய நிரதிசயானந்த ஆத்மஞானத்தை அப்பியசிப்பதை விட்டு, ஜன்மாதிகளைத் தருவதான அஞ்ஞான காரிய கர்மங்களைச் செய்வதனால் திருஷ்டமான சம்சாரத்தினாலுண்டாகிற துக்கத்தினுடைய அத்தியந்த நிவர்த்தி ஏற்படுகிறதில்லை யென்பது தாற்பரியமாம். (27 - 28)

(உஉ) ஆயாசம் சற்றுமில் அத்துவிதத்தினை
ஏயார் மனத்தினாலென்னே யென்னல்.

(அ-கை.) இரண்டாவதற்ற பரிபூர்ணாத்ம ஜ்ஞானாப்பியாசம் பண்ணுவதில், கர்மோபாஸனைகள் செய்வதனாலேற்

படும் அவ்வளவு கஷ்டமில்லையென்றும், வித்தியாசப்படாத தான ஆநந்தானுபவ மிருக்கிறதென்றும், அப்படிக்கிருந்தும் இந்த பூர்ண ஞானப்பியாசத்தைச் செய்ய மனுஷ்யர்கள் விரும்புகிறதில்லை யென்றும் சொல்லுகிறார்.

ஸுகாப்யாஸஸ்தாவத்தத்த்வஸ்ய ஸம்ஶ்ரத்தயாரப்தஜந்மநி ।
ததாபி பரமாத்வைதம் நைவவாஞ்சந்தி லப்தநரா: ॥ 29

(ப - ம்.) லப்தநரா: - கிடைப்பதற்கரிய மனுஷ்ய ஜன்மத்தை யடைந்தவர்கள், தாவத்தத்த்வஸ்ய ஸுகாப்யாஸ:-அந்த நித்திய பரிபூர்ணாத்ம ஞானத்தைப் பழகுவது சற்றும் சிரமமல்ல வென்றும், ஸம்ஶ்ரத்தயாரப்தஜந்மநி - பூர்ணசிரத்தை யுடன் அப்பியாசம் செய்ய ஆரம்பித்த ஜன்மத்திலேயே, தன்னிடம் சற்றும் இல்லாததான துக்கத்தினுடைய இன்மையும், நித்தியஸித்தமான பரிபூர்ண சுவப்பிரகாச ஆத்மஞான ஸித்தியும் ஸித்திக்கிறதென்றும் ததாபி அறிந்திருந்தும், பரமாத்வைதம் - தோன்றுதல் மறைத லில்லாததான பாரமார்த்திக அத்வைதத்தை, நைவ வாஞ்சந்தி - (அடைய) விரும்புகிறதில்லை. (29)

(த - ம்.) கிடைப்பதற்கரிய மனுஷ்ய ஜன்மத்தை யடைந்தவர்கள், அந்த நித்திய பரிபூர்ணாத்ம ஞானத்தைப் பழகுவதில் சிரமமில்லையென்றும், பூர்ண சிரத்தையுடன் அப்பியாசம் செய்ய ஆரம்பித்த ஜன்மத்திலேயே கொஞ்சங்கூட இல்லாததான துக்கத்தினுடைய இன்மையும், நித்திய ஸித்த மான பரிபூர்ண சுவப்பிரகாசாத்ம ஞான ஸித்தியும், ஸித்திக் கிறதென்றும் அறிந்திருக்கிறார்கள். அவ்விதமிருந்தும் தோன் றுதல் மறைதலில்லாததான பாரமார்த்திக அத்வைத

நித்திய நிரதிசயாநந்த ஆத்மானுபவ ஞானத்தை அவர்கள் அடையவிரும்புகிறதில்லை.

(வி - ரை.) "ச்ரேயச்ச ப்ரேயச்ச மநுஷ்யமேதஸ் தௌ ஸம்பரீத்ய விவிநக்தி தீர: । ச்ரேயோ ஹி தீரோ(அ)பி ப்ரேயஸோ வ்ருணீதே ப்ரேயோ மந்தோ யோகக்ஷேமாத் வ்ருணீதே" உத்தமமான மனுஷ்ய ஜன்மத்தை யடைந்தும் சிலர் மேன்மையானது இன்னதென்றும் தாழ்மையானது இன்னதென்றும் பிரித்து அறிகிறதில்லை. பார்வைக்கு மட்டுமுள்ள நாமரூபப் பிரபஞ்சங்களிலுள்ள மித்தியாத்துவ நிச்சயத்தை அடைந்த தைரியசாலிகள், நித்திய நிரதிசயாநந்த ஆத்மஜ்ஞானத்தை அடையவிரும்புகிறார்கள். பார்க்கப்படுவதும் கேட்கப்படுவதுமான இந்த லோகத்திலும் பரலோகங்களிலுமுள்ள துச்சமான விஷய சுகங்களை, மயக்க புத்தியுள்ளவர்கள் விரும்புகிறார்கள்" என்னும் சுருதிப்படி மேலான ஜன்மத்தை யடைந்தவர்கள் நித்திய ஸ்வப்பிரகாச பரிபூர்ணாத்ம ஜ்ஞானத்தை யடைய விரும்பவேண்டும். அவ்வித ஞான ஸித்தியில் சிரமம் கிஞ்சித்தும் இல்லை. அந்த நித்தியாத்ம ஜ்ஞானத்தை அடைந்ததனால் உபமானமற்ற நித்திய நிரதிசயாநந்த அபயநிலை அப்பொழுதே உண்டாகின்றது. இந்நிலையிலுள்ளவனே அபய வடிவ ஆநந்த ரூபனாவான். (29)

(உ௯) புன்மனத்தோர்க்குப் - பொருளுணர்விலையெனல்.

(அ-கை.) "ஜ்ஞாநமுத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண: - ஜன்மாந்தரங்களில் செய்த பாபங்களினுடைய நாசத்தினால் தான் நித்தியா நித்திய வஸ்து விவேக ஜ்ஞானமுண்டாகிறதென்றும், பாப வாஸனைகளுடன் கூடிய

புத்திகளுக்கு ஜ்ஞானமென்னும்வார்த்தையும் துர்லபமாமென்றும் சொல்லுகிறார்.

ப்ரக்ஷீணாஶேஷபாபஸ்ய ஜ்ஞானே த்யானே பவேந்மதி: ।
பாபோபஹதபுத்தீநாம் தத்வார்தாபி ஸுதுர்லபா ॥

(ப - ம்.) ப்ரக்ஷீணாஶேஷபாபஸ்ய - (நிஷ்காம கர்மம், உபாஸனை குருஸேவை முதலிய ஸாதனங்களினால்) பாப வாசனைகளெல்லாம் நீங்கப்பெற்றவனுக்கு, ஜ்ஞானே - (நாமரூபரகிதமான ஸ்வப்பிரகாசாத்ம) ஞானத்திலும், த்யானே - (உற்பத்தி நாசங்களில்லாததான பிரஹ்மம் நானென்று) தியானம் செய்வதிலும், மதி: - புத்தியானது பவேத் - உண்டாகிறது, பாபோபஹதபுத்தீநாம் - பாப வாசனையினால் கொல்லப்பட்டிருக்கிற புத்தியை யுடையவர்களுக்கு, தத்வார்தாபி - அந்த (ஆத்ம ஞானம் அல்லது நான் பிரம்மமென்கிற) வார்த்தைகூட, ஸுதுர்லபா - ரொம்பவும் துர்லபம். (பிரஹ்மம் ஆத்மா சிவம்) என்கிற வார்த்தைகூட அவன் வாக்கில் வருவது கஷ்டமாம்.

(தா - ம்.) நிஷ்காமகர்மோபாஸனை குருஸேவை முதலிய ஸாதனங்களினால் பாபவாஸனைகளெல்லாம் நீங்கப் பெற்றவனுக்கு, நாமரூபரகித ஸ்வயம் பிரகாச உத்தமஞானத்திலும், உற்பத்திநாசங்களில்லாததான பிரஹ்மம் நானென்னும் நிதித்தியாசனத்திலும் புத்தியானது பிரவர்த்திக்கும் பாக்கியம் உண்டாகிறது; பாபவாசனைகளினால் அமிழ்த்தப் பட்டிருக்கிற புத்தியையுடையவர்களுக்கு அந்த ஆத்மஞானம் அல்லது நான் பிரஹ்மம் என்கிற வார்த்தைகூட மிகவும்

துர்லபமாம். (பிரஹ்மம் ஆத்மா சிவம், என்னுமொருபொருள் இருப்பதாக அவன் கனவிலும் நினையான்; வாயினுலும் சொல்லான்.)

(வி - ரை). " ஶ்ரௌதஸ்மார்த்த ஸதாசாரநிஷ்டா வர்ணாஶ்ரமிகம்।" வேதத்திலும் சாஸ்திரங்களிலும் சொல்லியிருக்கிறபடி, பிராம்மணன் முதலிய வர்ணங்களுக்கும் பிரம்மசரியம் முதலான ஆச்ரமிகளுக்கும் ஏற்பட்ட தர்மங்களை ஈசுவரார்ப்பணபுத்தியோடு செய்வதனுல் அந்தக்கரணத்திலுள்ள மலவாஸனையையும், குருஸேவை ஈசுவரோபாஸனை மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை, முதலியவைகளினுல் விக்ஷேபவாஸனையையும் நீக்கி, விவேகம் - வைராக்கியம், சமாதி ஷட்கஸம்பத்தி, முமுக்ஷுத்துவம் முதலான ஞானஸாதனங்களோடு கூடியவனுக்கு, அகண்டசுவப்பிரகாச பரிபூர்ண பிரஹ்ம ஜ்ஞானத்திலும், சரீராதிப் பிரபஞ்சங்களை மித்தையென்று நீக்கி அகண்டைகரஸ சிவம் நான் என்று பாவிக்கும் அஹங்கிரகத்தியானத்திலும் புத்தி செல்லுகிறது; அங்ஙனமின்றி ஜன்மாந்தரங்களிற் செய்த பாபவாசனைகளினுண்மையால் சரீராதிப் பிரபஞ்சங்களைச்சத்தியமாகப்பார்க்கிற அஞ்ஞபுருஷர்களுக்கு பிரஹ்மம், ஆத்மா சிவம், என்கிறவார்த்தைகூட வரமாட்டாது. (30)

(உச) நாநா வுலகமஞ் ஞானகற்பிதமேனல்.

(அ - கை.) " நேஹ நாநாஸ்தி கிஞ்சந। இந்தப் பரிபூர்ண பிரம்மத்தில் பல வென்பது சற்றுமில்லை" என்னும் சுருதிப் பிரமாணப்படி நித்தியபரிபூர்ண ஸர்வவியாகப்பிரஹ்மத்தில் அஞ்ஞானத்தினுல் பலவாகத் தோற்றுகிற தென்றும்,

பாரமார்த்திகத்தில் கொஞ்சம்கூடப் பேதமில்லை யென்றும் சொல்லுகிறார்.

நித்யஸ்ஸர்வகதோ ஹ்யாத்மா கூடஸ்தோ தோஷவர்ஜித: ।
ஏகஸ்ஸன் பித்யதே ப்ராந்த்யா மாயயா ந ஸ்வரூபத: ॥ 31

(ப - ம்). ஆத்மா - (தேசகாலவஸ்துக்களால் பிரிவுதலை அடையாமல், வியாபகமாயிருக்கிற) ஆத்மாவானது, நித்ய:- முக்காலத்திலும் அழியாததாயும், ஸர்வகத:-எங்கும் அதாவது நாமரூப உபாதிகளிலெல்லாம் ஆதாரமாயிருக்கும் அஸ்தி, பாதி, பிரியவடிவினதாயும், கூடஸ்த:- கொல்லன்பட்டடையைப் போல் அசையாததாயும், தோஷவர்ஜித: - அவித்தியா காம கர்மங்கள் முதலிய தோஷங்களற்றதாயினும், ஏகஸ்ஸந்-இரண்டு படாததான ஏகரஸ பிரஹ்மத்தில், மாயயா ப்ராந்த்யா- இல்லாத மாயையின் காரியமான மயக்கத்தினால், பித்யதே - (நாமரூபங்கள்) இருக்கின்றன; ந ஸ்வரூபத:- வாஸ்தவத்தில் இல்லை - (பரமார்த்தத்தில், உபாதியே யில்லாததனால் உபாதியினாலாகிற பேதம் கொஞ்சமுமில்லை).

(தா - ம்.) தேசகால வஸ்துக்களால் பிரிவுதலை அடையாமல் வியாபகமாயிருக்கிற ஆத்மாவானது முக்காலத்திலும் அழியாததாயும் எங்கும் அதாவது நாமரூப உபாதிகளிலெல்லாம் ஆதாரமாயுள்ள அஸ்தி, பாதி, பிரியவடிவினதாயும், கொல்லன் பட்டடையைப்போல் அசைவற்றதாயும், அவித்தை காமம் கர்மம் முதலான தோஷங்களற்றதாயினும் இரண்டு படாததான ஏகரஸ பிரஹ்மத்தில் இல்லாததைத்

காரணமாக வுடைத்தான மயக்கத்தினுலே தான்நாமரூபங்கள் உள்ளனபோல் காணப்படுகின்றன; வாஸ்தவத்திலில்லை. (பரமார்த்தத்தில் உபாதியே யில்லையாதலால் உபாதியினுலாகிற தான பேதம் கொஞ்சமு மில்லை.

(வி - ரை.) "ஸத்யவிஜ்ஞாநஜ்ஞேயம்ஸர்வதோஷவஜிதம் நிராமயம்" காலத்திரயத்திலும் மாறுபடாததாயும், பூர்ணப்பிரகாச கனமாயும், பரிச்சின்னப் படாததாயும், துவிதப்படாததாயும், மாயை, அதன் காரிய நாமரூபப் பிரபஞ்சம் முதலான எவ்வித தோஷங்களு மற்றதாயும், சரீராதிகளுக்கு ஏற்படுகிறதான உற்பத்தி மரணம் முதலான வியாதிகளில்லாததாயு மிருக்கிற அகண்டைக ரஸப்பிரஹ்மத்தில், ஆகாசத்தில் தோன்றுகிற கெந்தருவ நகரம், நீலத்தன்மை, கூடாரம், வளைவுகளைப் போல், பிராந்தியினுல், நானாவுலகமும் சுகதுக்கங்களும் தோற்றுகின்றனவே யன்றிப் பாரமார்த்திகத்தில் இல்லவே இல்லை. (31)

(உரு) பிரஹ்மத்தை யறிந்தவன்-பிரஹ்மமே யாமெனல்.

(அ - கை) "ஏஷத ஆத்மா அந்தர்யாம்யம்ருதஃ ஸர்வபரிபூர்ணமாயும், நாமரூப உபாதிகளுக்கு உள்ளிருந்து பிரேரணை செய்கிறதாயு மிருக்கிற இந்த ஆத்மா, ஜனன மரணங்களாகிற விகாரங்க ளில்லாத அமிர்தஸ்வரூபம்" என்கிறபடி யோகிகள், தோற்றப்படுகிறதான உபாதிகளொன்று மில்லாததாயும், பிரகாசரூபமாயும், எல்லா உபாதிகளுக்குள்ளிருப்பதாயு மிருக்கிற பரமாத்ம சொரூபத்தைத் தெரிந்து பாரமார்த்திகமான தானுகிய பிரஹ்மபாவத்தை அடைகினுர்க ளொன்றும், எந்த ஸமயத்தில், மனத்தில், ஸதா, எங்கும்

பரிபூர்ணப் பிரகாசப் பிரஹ்மந்தா னிருப்பதாக விளங்குகிறதோ அப்பொழுதே தானுயிருப்பதாயும், பிரிவுதலில்லாததாயு மிருக்கிற பூர்ணுத்மாவை நன்ருக அடைகிருனென்றும், எந்த காலத்தில் எல்லாமாகக் கற்பிக்கப்பட்டுள்ள நாமரூபங்களுடைய அதிஷ்டான ஸ்வரூபமாகத் தன்னையும், கற்பிதங்களான நாமரூபங்களி லெல்லாம் வியாபகமான தன் ஆத்மஸ்வரூபத்தையும் பார்க்கிருனோ அப்பொழுதே பூர்ண பிரஹ்மபாவத்தை அடைகிரு னென்றும், எந்த நிமிஷத்தில் பாரமார்த்திக ஸத்தா பரிபூர்ணமாயும், உபாதிகளொன்று மில்லாததாயும், பிரிவுதலாகத் தோற்றுகிற நாமரூபப் பிரபஞ்சம் வேறு விதமான மயக்கத் தோற்றமென்றும், தெரிந்துகொள்ளுகிருனோ அந்த க்ஷணமே நாம ரூபங்களாகிற உபாதிகளினுடைய சம்பந்த மில்லாத நித்திய முக்த பிரஹ்மமாகிருனென்றும், எந்த ஸமயத்தில் ஜனன மரணங்களாகிற வியாதிகளுக்கு ஒரே ஔஷதமான பரிபூர்ண ஸ்வப்பிரகாச பிரஹ்மஞானம் உண்டாகிறதோ அப்பொழுதே இந்த ஞானி நித்யமங்கள சிவமாக இருக்கிருனென்றும் சொல்லுகிருர்.

யதைவ பரமாத்வைதம் ப்ரத்யக்ஷேண ப்ரகாஶிதஃ ।
ஸாக்ஷாத்பரஶிவம் ஸ்வம் ஸாக்ஷாத் ஜாநாதி தத் ॥ 32
யதா நிவேதநம் ஸாக்ஷாத் த்ருஷ்டம் ததா ।
யோகிநாம் ஸர்வதா ஶிவ ஏவ ஸ்வயம் ॥ 33
யதா ஸர்வாணி பூதானி ஸ்வாத்மந்யேவ பஶ்யதி ।
ஸர்வபூதேஷு சாத்மாநம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ॥
யதா பஶ்யதி சாத்மாநம் கேவலம் பரமார்த்தத꞉ ।
மாயாமாத்ரம் ஜகத்க்ருத்ஸ்நம் ததா பவதி நிர்வ்ருத꞉ ॥ 35

யதா ஜந்மஜராது:கவ்யாதீநாமேகபேஷஜம் ।
கைவல்யம் ப்ரஹ்மவிஜ்ஞாநம் ஜாயதே தஸ்ய ததா ஶிவ: ॥ 36

(ப - ம்.) யஸ்ய - எந்தப் பராவர ஞானிக்கு, இதம் - இங்ஙனம், (கற்பித நாமரூபங்களினுடைய ஆதார சுவரூபமான) பரம் - மேலானதாயும், ஸர்வத்ர ஸம்ஸ்தித: எல்லாவற்றினுள்ளு மிருப்பதாயுமான, அயமாத்மா - இந்தப் பரிபூர்ண ஸ்வப்பிரகாச ஆத்மாவானது, ப்ரகாஶித: - பிரகாசத்தை அடைந்ததோ (எவன்ஸ்வயம்பிரகாச ரூபமாக விளங்கினனோ) ஸ: - அந்தப் பூர்ண ஜ்ஞானி, பராம்ருதம் - கொஞ்சங்கூட உபாதிகளில்லாததான ஸ்வபாவமாகவே மேலான அமிர்தஸ்வரூபமாயும், அபரம் - அவரமாயுள்ள நாமரூபப் பிரதீதியில்லாததாயுமிருக்கிற, ஸ்வகம்பாவம் - தன்னுடைய சரீராதி ஸம்பந்தங்களில்லாத பரிபூர்ணாத்மப் பிரகாசஸ்வ பாவத்தை, ஸாக்ஷாத்யாதி - நேராகவே அடைகிறான். (நாமரூபரகிதநிர்விகாரசிவஸ்வரூபமாகிறான்).

யதா - எந்த ஸமயத்தில், ஸதாஸம்வித்ரூபம் - தேசகால வஸ்துக்களினால் பிரிவுநிலை அடையாததான, சைதந்யம் - பூர்ண ஸ்வப்பிரகாச ஆத்மா, மநஸி பாதி - மனத்தினிடத்தில் பிரகாசத்தை அடைந்ததோ, ததா - அந்த ஸமயத்திலேயே, அத்வயாத்மநா - உபாதியினால் தோன்றுவதான ஜீவபிரஹ்ம பேதமில்லாததனாலே, யோகிந: - (பேதத்தை மித்தை யென்றறிந்த) ஆத்மபிரஹ்ம யோகிகள், ஸ்வயம்ஸம்வேத்யதே - தன்னையே

நன்றாக அடைகிறார்கள். (அவித்தையாகிற உபாதியினாலாகிய நாமரூபங்களை மித்தையென்றறிந்த ஆத்மஞான யோகிகள் தானே பிரஹ்மமென்னும் பூர்ணபாவத்தை அடைகிறார்கள்.)

யதா - எந்த வேளையில், ஸ்வாத்மநேவ - தானாகிய அதிஷ்டான ரூப பிரஹ்மத்திலேயே, ஸர்வபூதானி பஶ்யதி - தோற்ற மாத்திரமுடையதான நாமரூபப் பிரபஞ்சங்களைப் பார்க்கிறானோ (கற்பனைகளாகிற உபாதிகளுக்கு ஆதாரமாகத் தன்னைப் பார்க்கிறானோ) ஸர்வபூதேஷு - நாமரூபங்களாகிற உபாதிகளிலெல்லாம் ஸ்வாத்மாநம் பஶ்யதி - வியாபகப் பிரகாசஆத்மாவான தன்னையும் பார்க்கிறானோ, ததா - அப்பொழுதே, ப்ரஹ்மஸம்பத்யதே - வியாபகமான பூர்ணபிரஹ்மத்தை நன்றாக அடைகிறான்.

யதா - எந்த ஸமயத்தில், ப்ரக்ஷீணம் - பிரவு தலை உடையதான நாமரூபஜகத்தானது, மாயாமாத்ரம் - தனக்கெனப் பொருளில்லாது சொன்மாத்திரமாய் விளங்கக் கூடியதென்றும், ஆத்மாநம் - வியாபகமான பிரகாச ஆத்மாவை, கேவலம் - உபாதிகளொன்றுமில்லாததாயும், பரமார்த்தத: பஶ்யதி - பாரமார்த்திகமாக (வாஸ்தவமாக) வும் பார்க்கிறானோ, ததா - அப்பொழுதே, நிர்வ்ருதிம் வ்ரஜதி - மாய்ய அவித்தைகளாலுண்டான ஜீவேசுவர பேதமில்லாத நிராவரணமான பூர்ணப்பிரகாச ஆத்ம பாவத்தை அடைகிறான்.

யதா - எந்த ஸமயத்தில், (ஒருவனுக்கு) ஜநநஜராமரணவ்யாதீநாம் - பிறப்பு, கிழத்தனம், நாசம், முதலியவைகளாகிற வியாதிகளுக்கு, ஏகபேஷஜம் - ஒரே ஔஷதரூபமான, கைவல்யஸம்விஜ்ஞாநம் - நிராவரண பிரஹ்ம ஸாக்ஷாத்கார ஞானமானது, ஜாயதே - உண்டாகிறதோ, ததா - அப்பொழுதே, ஏஷ: - இவன் (உபாதியினால் தோன்றின பேதம் நீங்கின ஞானி) ஶிவ: - நித்திய மங்களமான சிவமே (யாகிறான்).

(தா - ம்.) எந்தப் பராவர ஞானிக்குக் கற்பித நாமரூபங்களினுடைய ஆதாரஸ்வரூபமாகவும் எல்லாவற்றினுள்ளிலுமிருப்பதான இந்தப் பரிபூர்ண ஸ்வப்பிரகாச ஆத்மாவானது பிரகாசத்தை அடைந்ததோ, அந்தப் பூர்ண ஞானி கொஞ்சங்கூட உபாதிகளில்லாததாய் ஸ்வபாவமாகவே மேலான அமிர்த ஸ்வரூபமாயும், அவசமாயுள்ள நாமரூபப் பிரதீதியில்லாததாயுமிருக்கிற சரீராதி ஸம்பந்தங்களில்லாத ஸ்வபூரணாத்மப் பிரகாசபாவத்தை நேராகவே அடைகிறான் (நாமரூப ரகித நிர்விகாரசிவஸ்வரூபமாகிறான்).

எந்த சமயத்தில் தேசகால வஸ்துக்களினால் பிரிவுதலை அடையாததான பூர்ண சுவயம் பிரகாச ஆத்மா, மனத்தினிடத்தில் பிரகாசத்தை அடைந்ததோ, அந்த ஸமயத்திலேயே, உபாதியினால் தோன்றுவதான ஜீவபிரஹ்ம பேதமில்லாததனாலே, பேதத்தை மித்தையென்றறிந்த ஆத்மயோகிகள் தன்னையே நன்றாக அடைகிறார்கள். (அவித்தையாகிற உபாதியினாலாகிய நாமரூபங்களை மித்தையென்றறிந்த ஆத்மஞானயோகிகள் தானே பிரஹ்மமென்னும் பூர்ணபாவத்தை அடைகிறார்கள்).

எந்த வேளையில், தானாகிற அதிஷ்டானரூப பிரஹ்மத்தின் கண் உபாதியினால்தோற்றுவதானநாமரூபப்பிரபஞ்சங்களையும் நாமரூபங்களாலாகிற உபாதிகளிலெல்லாம் வியாபகப்பிரகாச ஆத்மாவான தன்னையும் பார்க்கிறானோ; அப்பொழுதே, வியாபகமான பூர்ணப் பிரஹ்மத்தை நன்றாக அடைகிறான்.

எந்த ஸமயத்தில் பிரிவுதலை யுடையதான நாமரூபஜகத்தானது தனக்கெனப் பொருளில்லாது சொன்மாத்திரமாய் விளங்கக்கூடியு தென்றும், வியாபகமான பிரகாச ஆத்மாவை உபாதிகளொன்று மில்லாததாயும், பாரமார்த்திகமாக (வாஸ்தவமாக)வும் பார்க்கிறானோ, அப்பொழுதே மாயை அவித்தைகளாலுண்டான ஜீவேசுவர பேதமில்லாத நிராவரணமான பூர்ணப் பிரகாச ஆத்மபாவத்தை அடைகிறான்.

எந்த ஸமயத்தில் ஒருவனுக்கு, பிறப்பு, கிழத்தனம் மரணம், முதலிய வியாதிகளுக்கு, ஒரே ஔஷதரூபமான நிராவரண பிரஹ்ம ஸாக்ஷாத்காரஞானம் உண்டாகிறதோ, அப்பொழுதே அவன் நித்தியமங்களமான சிவமே யாகிறான். (32-36.)

(வி - ரை.) "யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யே஽ஸ்ய ஹ்ருதி ஸ்ரிதா: அத மர்த்யோऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே" எந்த ஸமயத்தில் இந்த பராவரஞானி, தன்னுடைய ஹிருதயத்தை ஆசிரயித்துள்ள ஸகல வாஸனரூபகர்மாதி விருத்திகளிலிருந்தும் விடுபடுகிறானோ அந்த புருஷன் அப்பொழுதே மர்த்தியபாவமில்லாததான (ஜனனமரண ரூபவிகார ரகித அமிர்தபாவத்தை அடைந்து, அங்கேயே அகண்ட பரிபூர்ண பிரஹ்மபாவத்தை அனுபவிக்கிறான்"

என்னும் சுருதிப்பிரமாணப்படி எந்த காலத்தில் ஒருவனுக்குச் சகல அனர்த்தங்களும் நாசமாகின்றனவோ அந்த காலத்தி லேயே ஆநந்தப் பிராப்தி ஸித்திக்கின்றது. எல்லா ஜீவர்க ளாலும் வேண்டப்படும் பரம புருஷார்த்தமான மோக்ஷஸ்வ ரூபம் அனர்த்த நிவர்த்தி - ஆநந்தப்பிராப்தி வடிவமாம். ஸகல நாமரூபப்பிரபஞ்சவடிவ அனர்த்தங்களும் ஆநந்தவடிவ பிரஹ் மத்தில் அஞ்ஞானத்தால் கற்பிக்கப்பட்டிருப்பதனால், அஞ் ஞானமானது ஞானத்தினால் நாசமாகும் காலத்தில் காரிய மான ஸகல அனர்த்தங்களும் நாசமாய் அவற்றின் அதிஷ் டான வடிவ ஆநந்தரூப பிரஹ்மம் நன்கு விளங்குகின்றது. கற்பித ஸர்ப்பநாசமானது அதிஷ்டான கயிறு வடிவமாய் மிஞ்சுவது போல. இந்நிலை ஸமாதியாலன்றிச் சித்திக்காது. ஸமாதியாவது, "காணப்படும் இவ்வுலகும், மாயையல்லது அஞ்ஞானமும் என்னைத்தவிற வேறாக எப்பொழுதும் இல்லை" என்னும் சுத்தமான புத்தி விருத்தியேயாம்; அதாவது விஷய வடிவ ஸர்வ மனோவிர்த்திகளையுந் தடுத்து "நானே பிரஹ் மம்; பிரஹ்மமேநான்" என்று தானே தானாய் நிலைத்துள்ள அகண்டாகார விருத்திவடிவமாம். இது சவிகற்பம் நிர்விகற்ப மென இருவகைப்படும். இவைபும் பாகியம் ஆந்தரமென மற்றும் இருவகையாய்ப் பாகிய சவிகற்பம், ஆந்தரசவிகற்பம், பாகிய நிர்விகற்பம், ஆந்தர நிர்விகற்பமென நான்கு வகைப் படும்.

இந்நான்கு வகையான சமாதிகளும் ஈண்டு ஐந்து சுலோ கங்களால் கூறப்பட்டதென்க. முதலாவதன்கண் முக்குண வடிவ அந்தக்கரணத்திற்கும் அதன் மூன்றுவித பரிணாம மாகிய சாந்த,கோர, மூடவிருத்திகளுக்கும் உள்ளீடாயிருந்து

அவற்றைப் பிரகாசிப்பிக்கச் செய்யும் பிரத்தியகான்ம ஸாக்ஷாத்காரமாகிய ஆந்தர ஸவிகல்பசமாதியும், இரண்டாவதன்கண் அங்ஙனம் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட பிரத்தியகான்மாவே, தேச, கால, வஸ்து பரிச்சேதமின்றி எங்கும், எக்காலத்தும், எல்லாமாயும் யாதொரு தடையுமின்றி விளங்கும் பாகிய ஸவிகல்ப ஸமாதியும், மூன்றாவதன்கண் மேற்கூறிய இரண்டு, ஸவிகற்பஸமாதிகளும், நான்காவதில் இருவித நிர்விகற்பசமாதிகளும், ஐந்தாவதன்கண், ஸவிகல்பஸமாதியே நிர்விகற்பத்திற்குச் சாதனமாமென்பதும்கூறப்பட்டிருக்கின்றன. இங்ஙனம் பஞ்சகோச விலக்ஷணமாயுள்ள தன் உண்மை வடிவத்தையும், ஸகல கற்பனாவடிவ நாமரூபப்பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமான பிரஹ்ம ஸ்வரூபத்தையும் அறிந்து தன்னிடத்தில் எல்லாவற்றையும், எல்லாவற்றிலும் தன்னையும் அபேதமாய்க்கண்டு தானே தானாய் நிலைக்கப் பிரஹ்மஞானத்தைத தவிற மற்றோர் சாதனம் இல்லையெனத் தெளிந்து ஸற்குரு அநுக்கிரகத்தைப்பெற்றுஅபரோக்ஷஸாக்ஷாத்காரத்தின் பொருட்டு ஸமாதியப்பியசித்து அங்ஙனமே கேவலமாய் நிற்கும் பிரஹ்மவித்து பிரஹ்ம வடிவமேயாகிறான் என்பது இதன் திரண்ட பொருளாம். (32-36)

(உசு) ஞான மாண்பதனை நயம்பட வுரைத்தல்.

(அ - கை.) ஞானமென்பது வேதாந்தங்களினால் நேராகக் குறிப்பிடாமல் பாரிசேஷிக நியாயத்தால் அதத்தாயுள்ள நாம ரூபங்களை நிஷேதிப்பதன் மூலமாய் நிஷேதிக்கக்கூடாததான ஸ்வப்பிரகாச பரிபூர்ண ஆத்மாவே ஞானமென்றும், அதைத் தவிற வேறாய்ச் சொல்லப்படுவனவெல்லாம் அஞ்ஞானம் தானென்றும், சுவாநுபவைகவேத்தியமான ஞானத்தின்

மாகாத்மியம் வாக்கினால் சொல்லக்கூடியதல்ல வென்றும் ஆச்சரியப்படுகிறார்.

ஜ்ஞாநம் வேதாந்தவிஜ்ஞாநம் அஜ்ஞாநம் இதரந்முநே ।
அஹோ ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் யோ வக்தும் ந சக்யதே ॥ 37

(ப - ம்.) ஹே முநே - ஹேமனன சீலனே! ஜ்ஞாநம் - சுவப்பிரகாசாத்மஜ்ஞானமென்பது வேதாந்தவிஜ்ஞாநம் - உபநிஷத்துக்களினால் ஏற்படுகிறதாயும், அஞ்ஞான காரியமான நாமரூபங்களினுடைய மித்தியாத்துவ நிச்சயத்தினால் ஸித்திப்பதாயுமுள்ள நிருபாதிக சுவானுபவ ஞானமேயாம்; இதரத் - இதற்கு வேறாகவுள்ள வாதரூபமான பாண்டித்தியவாசனையினால் உண்டானதான் பரோக்ஷம், அஜ்ஞாநம் - அஞ்ஞானமேயாம். ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் - சுவானுபவாத்ம ஜ்ஞானத்தின் மகாத்மியத்தை, யோ வக்தும் - என்றால் கடபடாதிகளைப்போல் குறிப்பிட்டுச் சொல்ல, ந சக்யதே - முடியாது அஹோ - ஞானத்தின் மகிமை யென்னே!

(தா - ம்.) ஹே மனனசீலனே! ஸ்வப்பிரகாச ஆத்ம ஜ்ஞானமானது உபநிஷத்துக்களினால் ஏற்படுகிறதாயும் அஞ்ஞான காரியமான நாம ரூபங்களினுடைய மித்தியாத்துவ நிச்சயத்தினால் சித்திப்பதாயுமுள்ள நிருபாதிக சுவாநுபவ வடிவமாம். இதற்கு வேறாய்ப் பாண்டித்திய வாசனையினால் உண்டானதான மற்றெதுவும் அஞ்ஞானமேயாம். சுவானுபவ ஆத்ம ஜ்ஞானத்தின் மகிமையை யென்றால் கடபடாதிகளைப் போல் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. ஞானத்தின் மகிமை அவாங்மானஸ கோசரமாமென்பது கருத்தாம்.

(வி - ரை.) "நேதிநேதீதி வேதாந்தைஃ நிரஸ்தஸ்வ விலக்ஷணம்" தானாகிற பூர்ணப் பிரகாச ஆத்மாவுக்கு வேறாய அஞ்ஞான காரிய மித்தியாவாசனா ரூப புத்தியும் அதனால் பார்க்கப்படுபவைகளான சரீராதிப் பிரபஞ்சங்களும் திருசியமாவதால் ஆத்மா வல்லவென்று அத்தியாத்ம சாஸ்திரங்கள் தள்ளுகின்றன." என்னும் பிரமாணப்படி திருசியமாயுள்ள அநாத்ம பதார்த்தங்களை மித்தை யென்று நீக்கிய காலத்தில் மிஞ்சும் ஸச்சிதாநந்த வடிவமே ஆத்மாவாம். இங்ஙனமுள்ள ஆத்மாவைத் தானாய்க் காண்பதே ஞானமாம். இது நிர்விஷயமாதலால் கடபடாதி விஷய ஞானம்போல் மனவாக்குக்களுக்கு எட்டாததாம். இந்த ஆத்ம ஞானத்தின் மகிமை அதியற்புதமானது. என்று இங்ஙனம் தன்னுடைய அநுபவத்தினால் ஆச்சரியப்படுவதுடன் இதற்கு வேறாய, ஸகல வாக்குவாதங்களும் அஞ்ஞானமே யாமென்றும் கூறப்பட்டதென்க.

(உஎ) மெய்யறிவாந்தழல்—வினைகளைச்சுடுமெனல்.

(அ - கை.) "ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி ஭ஸ்மஸாத் குருதேऽர்ஜுந" என்ற பகவத்கீதா வசனப் பிரகாரம் சாஸ்திரங்களிற் சொல்லுகிற பிரகாரம் விதிப்படி ஞானாப்பியாசம் செய்யா விட்டாலும், சிரத்தையுடன் செய்கிற ஞானாப்பியாசமானது அநேகஞ் ஜென்மங்களாகச்செய்யப்பட்ட பாப வாஸனைகள் மிகுதியா யிருந்தாலும், எங்ஙனம் சிறிய தீபமானது பெரிய இருட்டையும் போக்குமோ வங்ஙனமே, பாப வாசனைகளைப் பஸ்மம் செய்கிறதென்றும், மந்திரம் ஔஷதம் இவைகளின் ஸித்தியால் விஷத்தைக் கொடுத்துத் தனக்கு அனிஷ்டத்தைச் செய்பவைகளான சர்ப்பாதிகளுடன் விளையாடுபவனான மந்திரவாதியைப்போல், நித்திய பரிபூர்ணாத்ம

ஞானத்தை அடைந்த ஞானி அஞ்ஞான காரியங்களாகிற நாமரூப சரீராதிகளுடன் காரியா காரியங்களைச் செய்பவன்போல் தோன்றப்பட்டாலும், அவைகளினாலுண்டான நன்மை தீமைகளாகிற பலன்கள், இந்த ஸித்த ஞானியை யொன்றுஞ் செய்யமாட்டாவென்றுஞ் சொல்லுகிறார்.

க்ஷுத்ரோऽபி யதா தீப: ஸுமஹந்நாஶயேத்தம: ।
ஜ்ஞாநாப்யாஸஸ்ததாऽல்போऽபி மஹத்பாபம் வ்யபோஹதி ॥

யதா வஹ்நிர்மஹாதீப்த: ஶுஷ்கமார்த்ரஞ்ச நிர்தஹேத் ।
ததா ஶுபாஶுபம் கர்ம ஜ்ஞாநாக்நிர்தஹதி க்ஷணாத் ॥ 39

யதா பத்மபலாஶஸ்த: [illegible] ஸலிலேந ந லிப்யதே ।
[illegible] லிப்யதே ஜ்ஞாநீ [illegible] ॥ 40

[illegible] யதா தோயை: ஸமுத்ரோऽபி ந லிப்யதே ।
ததா ஶுபாஶுபைர்ஜ்ஞாநீ விஷயைர்ந ஹி லிப்யதே ॥ 41

மந்த்ரௌஷதபலைர்யத்வஜ்ஜீர்யதே பக்ஷிதம் விஷம் ।
தத்வத்ஸர்வாணி பாபாநி ஜீர்யந்தே ஜ்ஞாநிந: க்ஷணாத் ॥

(ப - ம்.) யதா தீப: க்ஷுத்ரோऽபி - எவ்விதம் தீபமானது சிறியதாக விருந்தாலும், மஹத்தம: ஸுநாஶயேத் - பெரியதான இருட்டும் நன்றாக நாசஞ் செய்யப்படுகிறதோ, ததா ஜ்ஞாநாப்யாஸ: - அவ்விதமே (அநித்தியமான சரீராதிப்பிரபஞ்சங்களினுடைய ஸம்பந்தம் சிறிது மில்லாததான) நித்திய பரிபூர்ணாத்ம ஜ்ஞானத்தை அடைய முயற்சி செய்வது, அல்போऽபி - (சாஸ்திரங்களில் சொல்லுகிற பிரகாரம் ஸாங்கமா யில்லாவிட்டாலும், ஆதரவுடன்) கொஞ்சமாகவிருந்தாலும்,

ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு ... அநேக ஜன்மங்களில் செய்ததான மகா பாபங்களைப் போக்கடிக்கின்றது.

யதாவஹ்நிர் மஹாதீப்த: - எவ்விதம் பெரிதாகவும் பிரகாசத்துடனும் எரிகிறதான அக்கினியானது, ஸுஷ்கமார்த்ரஞ்ச நிர்தஹேத் - உலர்ந்ததாயும் ஈரமாயுமிருக்கிற கட்டை முதலியவைகளை யாதொரு பேத மில்லாமல் எரித்து விடுகிறதோ, ததா ஸுபாஸுபம் கர்ம - அவ்விதமே அநேகஜன்மங்களில் செய்ததான நன்மை தீமைகளாகிற கர்மங்களை, ஜ்ஞாநாக்நிர்தஹதி க்ஷணாத் - ஸ்வப்பிரகாச ஆத்மஞானக்கினியானது அதே க்ஷணத்தில் எரித்து விடுகின்றது. (போக்கடித்து விடுகிறது).

யதாகஜோ மந்த்ரஸித்த: - எப்படி விஷத்தை நாசஞ் செய்யக்கூடிய மந்திரஸித்திபலத்தோடு கூடியவன்; க்ரீடந்நபி ஸர்ப்பாதிபிர் நதஷ்யதே - ஸர்ப்பம் முதலான விஷ ஜந்துக்களோடு விளையாடினாலும் அவைகளினால் கடிக்கப்படுகிறதில்லையோ, ததேந்த்ரிய புஜங்கைஸ்ச க்ரீடந்நபி - அவ்விதமே, இந்திரியங்களாகிற ஸர்ப்பங்களோடு விளையாடுகிறவனாக விருந்தாலும் (வெளிப்பார்வையையே சுபாவமாக வுடையதான மனம், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுடன் சேர்ந்து விஷயாதிகளை யனுபவிக்கிறவன்போல் காணப்பட்டாலும்), ஜ்ஞாநீ நலிப்யதே - சரீராதி ஸம்பந்தம் சிறிது மற்ற ஸ்வப்பிரகாச பரிபூர்ண ஜ்ஞானிக்கு விஷயாதிகளினாலுள்ள குணதோஷங்களின் ஸம்பந்தம் உண்டாகிறதில்லை.

யதாபத்மபலாஸஸ்த்வம் - எங்ஙனம் தன்னோடிருப்பதான ஜலத்தோடு சேர்ந்திருந்தாலும், பத்மபத்ரம்

லிப்யதே - தாமரை யிலையானது அதனுடன் (ஜலத்துடன்) ஒட்டுகிறதில்லையோ, ததா - அங்ஙனமே. ஜ்ஞாநீ - ஆத்ம ஞானஸித்த புருஷன், ஸர்வைர் விஷயைஃ - சப்த ஸ்பரிசாதி விஷயங்களாகிற நாமரூப சரீராதி விஷயங்களோடு; ந லிப்யதே - ஸம்பந்தப்படுகிறதில்லை (ஆத்மாவுக்கு வேறாக விஷயாதிகளில்லாததனால், அஞ்ஞானிகளுக்கு, ஞானிகள் சரீராதிகளிலிருப்பதுபோல் தோன்றப்பட்டாலும் பூர்ணாத்ம ஞானிக்கு ஆத்மாவைத் தவிர வேறொன்றும் ஸத்தியமா யில்லை).

ஔஷதைஃ - மந்திரம், மூலிகை முதலியவைகளின் பலத்தினால், பக்ஷிதம் விஷம் - சாப்பிடப்பட்ட விஷமானது, யதா ஜீர்யதே - எப்படி ஜீரணமாகிறதோ ததைவ - அவ்விதமே, ஜ்ஞாநிநஃ - நித்தியாத்மஜ்ஞானஸித்தி யுடையவர்களுடைய, ஸர்வகர்மாணி - சரீர ஸம்பந்தமான புண்ணிய பாவ ரூப கர்மங்கள் அனைத்தும், க்ஷணாஜ்ஜீர்யந்தே - க்ஷணத்தில் எரிந்து போகின்றன. (அகர்த்தாத்ம ஞானத்தினால் சரீராதிகளுடைய செய்கைகள் ஞான ஸித்தி யுடையவனைப் பாதிக்கிறதில்லை).

(தா- ம்.) எவ்விதம் தீபமானது சிறியதாக விருந்தாலும் அதனால் பெரிய இருட்டும் நன்றாக நாசம் செய்யப்படுகிறதோ அவ்விதமே, அநித்தியமான சரீராதிப் பிரபஞ்ச சம்பந்த மில்லாததான நித்தியபரிபூர்ணாத்ம ஞானத்தை அடைய முயற்சி செய்வது, சாஸ்திரங்களில் சொல்லுகிற பிரகாரம் சரிவர இல்லாவிட்டாலும் ஆசரவுடன் கூடிக் கொஞ்சமாக விருந்தாலும், அநேக ஜன்மங்களில் செய்ததான மகா பாபங்களையும் போக்கடிக்கின்றது.

எவ்விதம் பெரிதாகவும், பிரகாசத்துடனும் எரிகிற அக்கினியானது உலர்ந்ததாயும் ஈரமாயு மிருக்கிற கட்டை முதலியவைகளை யெரித்து விடுகிறதோ அவ்விதமே அநேக ஜன்மங்களில் செய்யப்பட்ட நன்மை தீமைகளாகிற கர்மங்கள் ஸ்வப்பிரகாச ஆத்ம ஞானக்கியால் அதே க்ஷணத்தில் எரிக்கப்படுகின்றன.

எப்படி, விஷத்தை நாசஞ் செய்யக்கூடிய மந்திர ஸித்தியின் பலத்தோடு கூடியவன், ஸர்ப்பம் முதலிய விஷ ஜந்துக்களோடு விளையாடினாலும், அவைகளினால் கடிக்கப்படுகிறதான அனிஷ்ட (மரண ரூப துக்க)த்தை அடைகிறதில்லையோ, அவ்விதமே, இந்திரியங்களாகிற ஸர்ப்பங்களோடு விளையாடுகிறவனா யிருந்தாலும் அதாவது வெளிப்பார்வையையே ஸ்வபாவமாக வுடைய மனம், ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் முதலியவைகளுடன் சேர்ந்து விஷயாதிகளை யனுபவிக்கிறவனைப்போல் காணப்பட்டாலும்) சரீராதி ஸம்பந்தம் சிறிதுமற்ற ஸ்வப்பிரகாச பரிபூர்ண ஞானிக்கு, விஷயாதிகளினால் ஏற்படுகிறதான குணதோஷங்களின் ஸம்பந்தம் உண்டாகிறதில்லை.

எவ்விதம் தாமரையிலையானது தன்னோடிருப்பதான ஜலத்தோடு ஒட்டுகிற தில்லையோ, அவ்விதமே ஆத்ம ஞான ஸித்தபுருஷன், சப்த ஸ்பரிசாதி விஷயங்களாகிற நாம ரூப சரீராதி யுலகத்தோடு ஸம்பந்தப் படுகிறதில்லை. (ஆத்மாவிற்கு வேறாக விஷயாதிக ளில்லாமையினால் அஞ்ஞானிகளின் பார்வையில் அவர்களுக்குச்சரீராதிக ளிருப்பது போல் தோன்றப்பட்டாலும் அத்வைத பூர்ணாத்ம ஞானிக்கு ஆத்மாவைத் தவிர வேறொன்றும் ஸத்தியமா யில்லை.)

மந்திரம் மூலிகை முதலியவைகளின் ஸித்தியின் பலத்தினல், சாப்பிடப்பட்டதான விஷமானது எப்படி ஜீர்ணமாகிறதோ, அவ்விதமே நித்தியாத்ம ஜ்ஞானஸித்தி யடைந்தவர்களுடைய சரீர ஸம்பந்தமான புண்ணிய பாபரூப கர்மங்கள் தத்துவஞான முண்டான அதே க்ஷணத்தில் எரிந்து போகின்றன.(அகர்த்தாத்ம ஞானத்தினல் சரீராதிகளுடைய செய்கைகள், ஞானஸித்தி யுடையவனைப் பாதிக்கிறதில்லை. (38-42)

(வி - ரை.) "பித்யதே ஹ்ருதயக்ரந்திஸ் சித்யந்தே ஸர்வஸம்சயா: । க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே - மிகவும் மேலாகிய பாரமார்த்திக ஸச்சிதாநந்த வடிவ ஆத்ம ஸாக்ஷாத்காரப் பிரஹ்ம ஞானிக்கு, நாம ரூப அத்தியாச வடிவ ஹிருதயக்கிரந்தி நாசமாகும்; ஆத்மா தேகாதிகளினும் பின்னமா? அன்று? பின்னமாயின் அது பிரஹ்மத்தைக் காட்டிலும் வேறு? அல்லது பிரஹ்ம வடிவமா? என்பன வாதி அநேக சந்தேகங்களும் நாசத்தை யடையும்; அன்றியும் அவனுடைய ஸகல கர்மங்களும் நாசமாகின்றன" என்னும் சுருதிப் பிரமாணப்படி பிரஹ்மஜ்ஞானிக்கு யாதொரு கர்மமும் கிடையாது ; என்றல் ஆத்ம ஞானியால் செய்யப் படும் எந்தக் கருமமும் பலன் கொடுப்பதில்லை. எங்ஙன மெனின், பேரிருளானது ஒரு சிறிய விளக்கானும் ஈரமும் உலர்ந்ததுமான இந்தனம் (விறகு) காட்டுத் தீயினலும் நாசமாவன போல். இத்தகைய ஞானி கருமஞ் செய்யினும் அதனல் பந்த முருன்; எங்ஙன மெனின் மந்திர பலமுடைய மந்திரவாதி ஸர்ப்பங்களுடன் பழகி யவற்றல் கடிக்கப் பட்டாலும் அவனுக்குள்ள மந்திர பலத்தினல், விஷம் ஏறிக்கெடுதி செய்யாதது போலும்,ஜலத்திலேயே உள்ள தாமரையிலை அந்த ஜலத்தோடு சேர்ந்து நனையாதது போலும் ஆம் என மேலே ஐந்து சுலோகங்களால் கூறப்பட்டதென்க.

சங்கை:—"அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபாஶுபம் - செய்யப்பட்ட நல்வினை தீவினைகளை அவசியம், ஒருவன் அனுபவித்தே தீரவேண்டும்" என்றபடி, ஞானியும், ஞானம் உண்டாவதற்கு முன் தன்னால் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளை அனுபவித்தே தீரவேண்டும்; அனுபவிக்காமல் கர்மங்கள் எங்ஙனம் நாசமாகும்?

சமாதானம்:—அங்ஙனமன்று; கர்மாக்கள் அனுபவத்தால் நாசமாவதில்லை; மற்றோ விருத்தியாகின்றனவாம். கர்மாக்களின் ஸ்திதி மூன்று வடிவமாய்ச் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது - அவையாவன:—ஆகாமி-கிரியாவடிவம்; ஸஞ்சிதம் - வாஸனை வடிவம்; பிராரப்தம் - அனுபவ வடிவம். அனுபவவடிவ பிராரப்தமானது ஆசிரயத்தோடு கூடி யிருப்பதால் அது அனுபவிக்கப்படினும் நாசமாவதில்லையாம்; மற்றோ அனுபவ காலத்தில் பல வேறு ஆகாமி கர்மாக்களை யுண்டு பண்ணுகின்றது. இதனால் பல ஸஞ்சிதங்கள், பல பிராரப்தங்கள்ஏற்படுகின்றன. ஆதலாற்றான் கர்மாக்கள் அனுபவத்தினால் நாசமாகாவென முன் கூறப்பட்டதென்க கர்மநாசம் ஆசிரிய நாசத்தினாலேயே யாம். ஆகாமி, ஸஞ்சித பிராரப்தங்களுக்கு ஆசிரயம் முறையே பிராந்தி ஜன்னிய தாதாத்மியம், கர்த்துரு ஜன்னிய தாதாத்மியம், போக்துரு ஜன்ய தாதாத்மியமாம்.

பிராந்தி ஜன்னிய தாதாத்மியமாவது பாரமார்த்திகமாய்க் காரணங்களுக்கும் ஆத்மாவுக்கும் யாதொரு சம்பந்தமு மில்லாதிருக்கவும் மயக்கத்தால் சம்பந்த முண்டென்பதாம்.

கர்த்துருஜன்னிய தாதாத்மியமாவது அகர்த்தாவாகிய ஆன்மாவினிடத்தில் கர்த்துருத்தன்மையைக் காண்பதாம்.

போக்த்ரு ஜன்னிய தாதாத்மியமாவது அபோக்தாவாகிய ஆன்மாவினிடத்தில் போக்த்ருத்தன்மையைக் காண்பதாம்.

இம்மூன்றுவித தாதான்மியங்களும்(கர்மஆசிரயங்களும்) தத்துவ ஞானிக்கு இன்மையால் அவர்களிடத்தில் கர்மாக்கள் நிர்மூல மாயிருக்கின்றன. நிர்மூலமான (வேரற்ற) மரம் நாசமாவது போலக்கர்மங்களின் ஆசிரியம் ஞானத்தினாற்றான் நாசமாகும்; மற்றெவையாலுமாகாது. ஏனென்னில் ஞானத்தைத் தவிர மற்றெதுவும் கர்மத்திற்கு விரோதி யன்றும். இதனாற்றான் "ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ஜுநா" ஹே அர்ச்சுன ! ஞானக்னியால் 'ஸர்வ கர்மங்களும் நாசமாகின்றன" வென்று பகவான் கீதையில் அருளிச் செய்திருக்கின்றனர்.

இங்ஙனம் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய வடிவ தத்துவ ஞானத்தால் ஸகல கர்மங்களும் நசிக்கப் பெற்ற ஜீவன் முத்தன் நாமரூபப்பிரபஞ்சத்தோடு சம்பந்தித்து விவகரிப்பது போல் அஞ்ஞானிகளுக்குப் புலப்படினும், அந்த முத்தனுடைய ஆபாஸ (போலி) விவகாரம் வறுபட்ட விதை முளைக்காதது போலவும் எரிந்துபோன வஸ்திரம் உடுக்க உதவாதது போலவும் கானலில் தோன்றும் ஜலம் தாகத்தைத் தீர்க்காதது போலவும் அவனுடைய ஸம்ஸார துக்கத்திற்குக் காரணமாவ தில்லையா மென்பது இதன் திரண்டபொருளாம்.

(உஅ) ஞானியின் துவேஷி - நரகமேய் துவனெனல்.

(அ - கை.) எந்த மனுஷ்யர்கள் ஆத்ம ஞானியின் மகிமையைத் தெரிந்துகொள்ளாமலிருப்பதோடு அந்த ஞானியினுடைய மனம் கஷ்டப்படக் கூடிய நிலைமையில் நடந்துகொள்ளுகிறார்களோ அவர்கள் என்றும் நிவர்த்தியாகாததாயும், ஸகிக்கக் கூடாத துன்பந்தரக் கூடியதாயுமான கொடிய நரகவாஸத்தை யடைகிறார்கள் என்று கூறுகின்றார்.

யே த்விஷந்தி மஹாத்மானம் ஜ்ஞானினம் நராதமா: ।
தே கோராரௌரவே கல்பம் சோகார்தே நரகே ஸதா ॥ 43

(ப - ம்.) யே நராதமா: மனுஷ்யர்களில் கெட்டவர்களான எந்த மூர்க்கர்கள், மஹாத்மானம் ஜ்ஞானினம் த்விஷந்தி - பூர்ணாத்மப் பிரகாச ஜ்ஞானியைப் பகைத்துக்கொள்ளுகிறார்களோ, தே - அவர்கள், ஸதா - எப்பொழுதும் சோகார்தே நரகே - தனிமையாயும் ஸகிக்கக் கூடாத துன்பத்தைக் கொடுப்பதுமான நரகத்தில் (சாஸ்திரங்களில் சொல்லப்படுபவையான பேரிருள் சூழ்ந்தும் கத்தி முதலிய பயங்கர வஸ்துக்களும் ஸர்ப்பம் முதலிய துஷ்ட ஜந்துக்களும் நிறைந்து அவைகளினால் தாங்க முடியாத கஷ்டத்தைக் கொடுப்பதான நரகத்தில்) கல்பம் தே - கற்பகாலம் வரையும் (எல்லா உலகங்களையும் ஸிருஷ்டிப்பவரான பிரம்ம தேவனுடைய ஆயுள் பூராவும்) துன்பப்படுகிறார்கள்.

(தா - ம்.) மனுஷ்யர்களில் அதமமான எந்த மூர்க்கன் பூர்ணாத்மப் பிரகாச ஜ்ஞானியைத் துவேஷித்து அவனுக்குத் தீங்கு செய்கிறானோ அவன், சாஸ்திரங்களில் சொல்லப்படுவதான ரௌரவாதி நரகத்தில் அதாவது பேரிருள் சூழ்ந்ததும், கத்தி, ஈட்டி முதலிய பயங்கர வஸ்துக்களாலும் ஸர்ப்பம், தேள் முதலிய துஷ்ட ஜந்துக்களாலும் நிறையப் பெற்றதும் தாங்க முடியாத துன்பத்தைத் தரக் கூடியதுமான நரகத்தில் கற்பாந்த காலம் வரை துன்பப்படுகிறான்.

கல்பகாலமாவது ஒரு சதுர்முகப்பிரமனுடைய ஆயுள்காலமாம். பிரம்ம தேவனுடைய ஆயுள் விவரமாவது:—மானவ யுகங்களாகிய கிருத, திரேத, துவாபர, கலிகள் சேர்ந்து ஒரு

சதுர்யுகமாம். இத்தகைய சதுர்யுகங்கள் ஆயிரம் கொண்டது பிரமனுக்கு ஒரு பகல். மற்றோர் ஆயிரம் சதுர்யுகங்கள் ஒரு இரவு. அதாவது இரண்டாயிரம் சதுர்யுகங்கள் ஒரு நாளாம் ; இங்ஙனம் நூறு வருஷங்கள் ஒரு கல்பமாம். (43)

(வி - ரை.) ஞானியைப் பகைத்தவன் நரகமெய்துவானென்பதன் உண்மையாதெனில், கூறப்படும்:—

பிரஹ்மஞானி பிரஹ்ம வடிவமாம். பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றுமென்பது சிதையாத சித்தாந்தமாம். ஆதலின் பிரஹ்ம ஞானியைப் பகைத்தலாவது தன்னுடைய பிரத்யகாத்ம - கூடஸ்த - ஸாக்ஷியைப்பகைத்தலேயாகும். ஆத்மாவைப் பகைத்தலாவது அநாத்மப்பிராந்தி (அவித்தை) யோடு கூடுதலாம். இக்கூட்டுறவே ஸம்ஸாரமாம். ஆதலின் அது ஆத்தியாத்மிக, ஆதி பௌதிக, ஆதி தைவிகாதி தாபத்திரயங்களாகிற அக்னியோடு கூடியதும், அவித்தையாகிற பேரிருளோடு கூடியதும், துவைதப் பிரதீதியைக் காரணமாகவுடைய அநுகூலப்பிரதிகூலவிருத்தி வடிவ பயங்கர வஸ்துக்களாலும், காமம், குரோதம், துவேஷம் முதலிய துர்விருத்திகளாகிற துஷ்ட ஜந்துக்களோடும் கூடி, ஸதா துன்பத்தையே தரக்கூடியதாயும் மீள முடியாததாயுமுள்ள நரகமேயாம். இங்ஙனம் கல்பாந்த காலம்வரை ஜீவ பாவத்தோடு ஸம்ஸார நரகத்தில் மொத்துண்டு மறுபடியும் மற்றோர் பிரமன் சிருஷ்டிக்க மறுபடியும் துன்புறுவன். ஆதலின் ஞானியின் பகைவனுக்கு (அஞ்ஞானிக்கு) ஸம்ஸாரமாகிற நரகவேதனை நீங்காதென்பது சித்தாந்தமாம்.

(உகூ) ஞானியின் பூஜ்யதை-ஞாலத்திற் பெரிதெனல்.

(அ - கை.) தத்துவ ஞானத்தைத் துவேஷியாமல் அதனை யடைய வேண்டுமென்று விரும்பும் அப்பியாசியும்

உலகத்தோரால் பூஜிக்கப்படத்தக்கவனெனின் ஆரூடனைப் பற்றிக் கேட்பானேன்? என்று ஞானியின் பூஜ்யதை இங்குக் கூறப்படுகின்றது.

ஜாநாஹ்யாஸாத: பூஜ்ய: கிம்புநராரூடஸ்ய: ॥

(ப - ம்.) அனுசாரபரனு யிருந்தாலும், நன்னடக்கையோடு கூடியவனு யிருந்தாலும், சாஸ்திராப்பியாசமின்றிய பாமரனுனாலும்; சாஸ்திரங்களின் கரைகண்ட கல்வியுடையவனுனாலும், ஜ்ஞாநாப்யாஸரத: - (அஞ்ஞான காரியங்களாகிற பாஞ்ச பௌதிக காரியகரண ஸங்காதமாகிய சரீரத்தோடும், விஷயாதிகளோடும் ரமிக்காமல் அவற்றில் விரக்தனுய்) நித்தியப் பிரகாச ஆத்மஜ்ஞானுப் பியாசத்தில் ஆதரவுடன் பழகுபவன்; பூஜ்ய: மற்றோரால் (அஞ்ஞான காரிய ஸம் ஸாரிகளால்) பூஜிக்கப்படத் தக்கவன். (எனில்) ஜ்ஞாநவாரூட: - பூர்ண ஸ்வப்பிரகாச ஆரூட ஞானியைப் பற்றி, கிம் புந: - மற்றென்? (பூஜிக்கப்படத் தக்கவனென்று சொல்ல வேண்டுமோ ?)

(தா - ம்.) ஆசாரபரனுயினும், அநாசாரியாயினும் ஞானுப்பியாசி யாவராலும்பூஜிக்கப்படத்தக்கவனெனில்,ஞானஸித்தன் பூஜை செய்வதற்குரியவனென்று சொல்லவும் வேண்டுமா ?

(வி - ரை.) பூஜிக்கப்படத் தக்கவன் ஈச்வரனேயன்றி மற்றவரல்லர். ஏனெனில் ஈச்வரன் ஸர்வ சக்திமானுகையால்,

பூஜிப்பவனால் வேண்டப்படுவன வெல்லாம் கொடுக்கும் ஆற்றல் அவனுக்குண்டு. அங்ஙனமன்றி ஆத்ம ஸ்வரூபத்தை யறிய எத்தனிக்கும் அப்பியாசியும் பூஜிக்கப்படத் தக்கவனென்பது எங்ஙனம் பொருந்தும்? எனின், கூறப்படும். "𑌕𑌾𑌷𑌾𑌯𑌦𑌣𑍍𑌡𑌧𑌾𑌰𑍇𑌣 𑌯𑌤𑌿𑌃 𑌸 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌶𑌯𑌃" ஜ்ஞானப்பியாஸியாகிய யதி (அப்பியாசி)யின் பாகிய சின்னங்களாகிய காஷாயம், தண்டம் முதலிய வற்றினாலேயே யவன் போற்றற்குரியவன்" என்னும் சுருதியிதற்குப் பிரமாணமாம். லோகானுபவமும் இங்ஙனமேயாம். எவன் சப்தாதி விஷயங்களிலிருந்து விரக்தனாய் நிவிருத்த சித்தமுடையவனாய் தன் ஆத்ம ஸ்வரூபத்தை யறிய முயல்கிறானோ, அவனே பிரவிருத்தி பராயுள்ள யாவராலும் போற்றற் குரியவனாவன்.

இஃதன்றியும், "𑌪𑌰𑌮𑌾𑌦𑍍𑌵𑍈𑌤𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌯𑍇𑌨 𑌤𑌤𑍍𑌪𑌾𑌦𑍌 𑌮𑌮 𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿" எவனால் பரமார்த்த ஜ்ஞானிக்குப் பணிவிடைகள், செய்யப்படுகின்றனவோ, அத்தகைய ஜ்ஞானப்பியாசியின் பாதங்கள் என் சென்னிமேல் உள்ளனவாம்" என்று நான்முகப் பிரமன் பிரஹ்ம கீதையில் கூறுவது இங்கு நன்குணர் தற்பாலதாம்.

மேலும்,

𑌯𑌥𑌾 𑌗𑍁𑌰𑍁𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑍇𑌶𑍋 𑌯𑌥𑍈𑌵𑍇𑌶𑌸𑍍𑌤𑌥𑌾 𑌗𑍁𑌰𑍁𑌃 ।
𑌪𑍂𑌜𑌨𑍀𑌯𑍋 𑌮𑌹𑌾𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌨 𑌭𑍇𑌦𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌤𑌯𑍋𑌃 ॥

எங்ஙனம் ஈசுவரன் ஸர்வ பரிபூர்ணனோ அங்ஙனமே ஞானியாகிய குருவும், ஸர்வ பரிபூர்ணனே. ஆகையால் சிரேயஸை விரும்புகிறவர்கள் மிகுந்த பக்தியுடன் குருவையும் ஈசுவரனையும் பூஜை செய்யவேண்டும். குருவுக்கும் ஈசுவர

னுக்கும் கொஞ்சங்கூடப் பேதமில்லை "அன்றியும்" ஆத்மஜ்ஞம் ஹ்யர்ச்சயேத் பூதிகாம: ஸ்வப்ரகாச வியாபக ஸ்வப்பிரகாச ஆத்மஞானத்தையடைய விரும்புகிறவன் ஆத்ம ஞானியை அர்ச்சனை செய்ய வேண்டியது" என்னும் பிரமாணங்களின்படி அப்படிப்பட்ட திவ்யஞான ஸித்தியின் பொருட்டு அப்பியாசம் செய்பவன் யாவராலும் பூஜித்தற் குரியவனேயாம்.

"ஆசாரபரனு யிருந்தாலும் அநாசார பரனுயிருந் தாலும்" என்று கூறப்பட்டதன் கருத்திதுவாம்:— அப்பியாசியின் மனம் பரமாயுள்ள ஞானத்தின் கண்ணேயே என்றும் நிலை பெற்றிருப்பதால் தர்ம சாஸ்திர முறைப்படி வருணுச்சிரம நெறிகள் ஒருகால் தவறி யிருப்பினும் இருக்கலாம்; அதனல் இழுக்கில்லை என்பதேயாம். இங்ஙனமுள்ள ஜீவப் பிரஹ்மைக்கிய தத்துவ ஞான அப்பியாசியே போற்றற் குரியனெனின் ஆரூடனைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? இது "கை முதிகா" நியாயமாம். "கிம் உத" "மற் றென்ன?" இந்நியாயத்திற்கு உதாரணம் "அம்மியும் குழவியும் ஆகாயத்திற் பறந்தால் இலவம் பஞ்சைப்பற்றி என் சொல்வது? என்பதாம்.

(௩௦) ஞானியின்பூசை நலமெலாந்தருமெனல்.

(அ - கை.) ஆத்மஜ்ஞானஸித்தனை மிக்க ஆதரவோடு பூஜை, சரீரசிசுரூஷை, அவன் வேண்டுவனவற்றைக் கொடுத் தல் முதலியவற்றைச் செய்பவன் இதர எந்த ஸாதனத்தினுலும் பெறமுடியாத மகாபல (மோக்ஷ) த்தை யடைதல் திண்ணம்; ஆதலின் முமுக்ஷு ஞானிபூஜை அவசியம் செய்யவேண்டுமென்று கூறப்படுகின்றது.

யஸ்ய ஶுபம் கர்மபலஸ்ய ஜ்ஞாநீ ம்ரியதி ஸத்வ்ருத்த ।
தஸ்ய க்ரீடந்தி பிதரோ யாஸ்யாம: பராம் கதிம் ॥ 45
யஸ்யாத்மாநுபவப்ரத்யக்ஷம் புத்திஸ்தத்ரைவ வர்த்ததே ।
தத்த்ருஷ்டிகோசராஸ்ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பிஷை: ॥

(ப - ம்.) ஸத்வ்ருத்த - நன்மையான சாஸ்திரார்த்தத்தில் பிரவிருத்தியுடையவனே, யஸ்ய ஶுபம் கர்மபலஸ்ய - (சுபமான கர்மோபாஸனைகளைச்செய்து பலவிசேஷத்தை அடையப்போகிற)எந்தப் பாக்கியவானுடைய கிரகத்தை யுத்தேசித்து, ஜ்ஞாநீ ம்ரியதி - ஆத்மஞானிபோகிறானோ, தஸ்ய - (சுப பலத்தை அடையப்போகிற)அந்தப் பாக்கியவானுடைய, பிதர: - (பிதுர்லோகத்தில் கர்மபலத்தின் போகத்தை அனுபவிக்கிற) அவன் முன்வம்சஸ்தர்கள், யாஸ்யாம: பராம் கதிம் - மேலான கதியை அடையப் போகிறோமென்று, க்ரீடந்தி - உற்சாகத்துடன் கூத்தாடுகிறார்கள்.

யஸ்ய-எந்தத் தீவிர தரபக்குவமுள்ள ஜ்ஞானஸித்தியையுடையவனுடைய, புத்தி: - புத்திவிருத்தியானது, தத்ரைவ-(மித்தியாபூதங்களான சரீராதிநாமரூபப்பிரபஞ்சங்களை விட்டு) ஸத்தியப் பிரகாச ஆத்மாவில், ஆத்மாநுபவப்ரத்யக்ஷம் வர்த்ததே-அனாத்மாக்களுடைய ஸத்தியத் தோற்றமின்றி நித்தியப் பிரகாச ஆத்ம ஞானனுபவத்தில் நிலைபெற்றிருக்கிறதோ, தத்த்ருஷ்டிகோசரா: - அந்தத்திடஞானியினுடைய கருணைகடாக்ஷத்திற்குள் அகப்பட்ட வெல்லாஜீவர்களும், ஸர்வகில்பிஷை: முச்யந்தே - எல்லாவித பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்.

(தா - ம்.) ஹே நன்மையான சாஸ்திரார்த்தத்தில் பிரவிருத்தி யுடையவனே! சுபமான கர்மோ பாஸனைகளைச் செய்து விசேஷ பலத்தை அடையப்போகிற எந்தப் பாக்கியவானுடைய கிரகத்தை யுத்தேசித்து ஆத்ம ஞானி போகிருனே, (சுப பலத்தை அடையப்போகிற) அந்தப் பாக்கியவானுடைய (பிதுர்லோகத்தில் கர்மபல போகத்தை அனுபவிக்கிற அவனுடைய) முன் வம்சஸ்தர்கள் மேலான கதியை அடையப்போகிருமென்று உற்சாகத்துடன் விளையாடுகிருர்கள்.

எந்தத் தீவிரதர பக்குவமுள்ள ஞானஸித்தி யுடையவனுடைய புத்தி விருத்தியானது மித்தியா பூதங்களான சரீராதி நாமரூபப் பிரபஞ்சங்களை விட்டு ஸத்தியப் பிரகாச ஆத்மாவில், அனாத்மாக்களுடைய உண்மைத் தோற்றமின்றி நித்தியப் பிரகாச ஆத்ம ஞானனுபவத்தில் நிலைபெற்றிருக்கிறதோ அந்தத் திட ஜ்ஞானியினுடைய கருணையோடுள்ள பார்வையிற் பட்டவெல்லா ஜீவர்களும் எல்லாவித பாபங்களிலிருந்தும் விடுபடுகிருர்கள்.

(வி - ரை.) "𑌨 𑌹𑍍𑌯𑌮𑍍𑌮𑌯𑌾𑌨𑌿 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌨 𑌦𑍇𑌵𑌾 𑌮𑍃𑌚𑍍𑌛𑌿𑌲𑌾𑌮𑌯𑌾𑌃 । 𑌤𑍇 𑌪𑍁𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑍁𑌰𑍁𑌕𑌾𑌲𑍇𑌨 𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌦𑍇𑌵 𑌸𑌾𑌧𑌵𑌃" தீர்த்த ஸேவை தலயாத்திரை, மூர்த்தியாராதனம் முதலியவைகள் காலாந்தரத்தில் பலனைத் தருவதன்றி உடனே தருவனவன்ரும். சித்தத்தில் விசேஷவாஸனையின்றிப் பரம சாந்த வாசனையுடைய ஸாதுக்களுடைய கிருபாதிருஷ்டியில் பட்ட ஜீவர்கள் அப்பொழுதே ஸகல பாவ வாஸனைகளிலிருந்தும் விடுபடுகிருர்கள். எந்த மகா பலமாகிற, பூரணத்ம ஞானியினுடைய ஸேவைக்காக, சுபமான கர்மோபாஸனைகள் செய்யப்படுகின்றனவோ அந்த மகாமகிமைபொருந்திய ஞானி,

யாதோ ஒரு நிமித்தத்தினால் ஒரு கிரகஸ்தனுடைய கிரகத்தைக் குறிப்பிட்டு வருவானேயானால், அந்தக் கிரகஸ்தனுடைய முன் வம்சஸ்தர்கள் "மேலான புண்ணிய பதவியை அடையப்போகிறோ"மென்று ஆநந்தக் கூத்தாடுகிறார்களென்றும் எந்தப் பூர்ணபாவத்தை யடைந்த மகானுடைய கருணையாகிய பார்வையில் பட்ட ஸகல ஜீவராசிகளும் உடனே அநேக ஜன்மங்களில் செய்திருக்கிற பாபக் கூட்டங்களெல்லாம் உடனே எரிக்கப்பட்டு, நன்மையானவழியில் உடனே திரும்பிவிடுகிறார்களென்பதும் பலிதார்த்தமாம். 45-46

(அ-கை.) "𑌯𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑍇 𑌪𑌰𑌾 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑌥𑌾 𑌦𑍇𑌵𑍇 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌰𑍌 𑌤𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌕𑌥𑌿𑌤𑌾 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑍍𑌤𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । சாந்தி தாந்தி முதலிய சாதனங்களோடு கூடிய எந்த உத்தமாதிகாரிக்கு எங்ஙனம் ஈசுவரனிடத்தில் மேலானபக்தியிருக்குமோ அங்ஙனமேஞானோபதேஷ்டாவான குருவினிடத்திலும்இருக்கிறதோ அந்த உத்தம ஜிஜ்ஞாஸுவுக்கு உபதேசிக்கப்படுவதான ஜீவபிரம்மைக்கிய ரூபமான அர்த்தமானது நன்கு விளங்குகின்றது."என்றபிரகாரம் குரு ஈசுவரர்களிடத்தில் அபேதபுத்தியோடிருந்து பக்தி சுசுரூஷை முதலானவைகளைச் செய்கிற பூர்ண விசுவாஸமுள்ள உத்தம புருஷனுக்குச் சாஸ்திர ஆராய்ச்சி முதலான சாதனங்களில்லாவிட்டாலும், மேல் சொன்ன உத்தம சாதன பலத்தினால் கொஞ்சங்கூட ஸந்தேகமில்லாமல் பிர்ம்மாத்மைக்கிய விஷயம் பிரகாசிப்பதுடன் ஸமஸ்தமான இஷ்ட ஸித்திகளும் ஏற்படுகின்றன. இத்தகைய தத்துவஞானியின் தரிசனம் ஏற்படும்கூடப் பாக்கியக் குறைவினால் அவனைப் பாமரர்கள் உபேக்ஷை செய்கிறார்கள் என்று கூறப்படுகின்றது.

(௬௧) ஞானியின் பெருமையும்—நாடினரடையும் ஈனமில் பயனும்—இணைத்தேன விசைதல்.

ஶிவாத்மனா ஜ்ஞானவதாம் வரிஷ்டேநா
ப்ரஹ்மேஶாத்யா: பதவீம் யாந்தி ।
விஹாய ஸம்ஸாரஶிவோதயேந நரா
ஹி ஶீக்ரம் பாபவஶாதஹோ ஶிவேந ॥ (47)

ஶிவாத்மயம் ப்ராப்ய விஹாய தத்வதா
விஶேஷதோ ஶோகபயேந பாபகா: ।
யதா ததா ஜ்ஞாநிநமீஶ்வரேஶ்வரம்
விஹாய ஶோகேந ப்ரயாந்தி ஶாந்தவா: ॥ (48)

அஹோ ஶோகம் பரஶோகதுஷ்பலம்
விஹாய ஶரயா பரிஶோஷிதா நரா: ।
ஹிதாய லோகே விசரந்தி தேஶிகேந
விஷம் பிபந்த்யேவ ஶிவாம்ருதம் விநா ॥ (49)

ப்ரஹ்மேந்த்ராதீந கிம் ஸகலம் ஸம்ஸ்ருஷ்டயேணாபவாதி
ஸூர்யாசந்த்ராக்ஷ்யாதிபிஶேஷாதஸம்ஸ்ரஹம் ॥ [தா॥

ப - ம்.) ஹேஶிவேந - ஹேமனன சீலனே! ஶிவாத்மநா ஜ்ஞானவரிஷ்டேநாக - ஆத்மஜ்ஞானிகளுக்குள்சிரேஷ்டனயிருக்கிற பூர்ணத்மஞானியினுடைய கருணையோடுள்ள பார்வையினலே, ஸர்வேஶ்வராக்யம்பதவி ப்ராப்தி தேவதைகளுக்கெல்லாம் ஈசுவரனுகிற பதவியைச் சீக்கிரத்தில் அடைகிறார்கள்; தம்விஹாய - அப்படிப்பட்ட ஞானியாகிய ஈசுவரனை விட்டு, பாபவஶாத் - ஜன்மாந்தரங்களில் செய்த பாபவாஸனைகளின் பலத்தால், நரா: - மனுஷ்யர்கள், ஸம்ஸாரஶிவோ

ஓயஎ ஹு ஜேஷி - ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் விழுந்து அதிலுள்ள சுழியில் அகப்பட்டுக் கீழும் மேலுமாகக் கஷ்டப்படுகிறார்கள் - (இறப்புப் பிறப்பாகிற பெருங்கடலில் வருவதும் போவதுமான சுழியில் அகப்பட்டுக் கஷ்டப்படுகிறார்கள்,) கூஹொ - ஆச்சரியம். 47

யஶாவோஒகஃ - எப்படி, அறிவில்லாத சிறுவன், ஜஹாநியிம் ஹூரவு - எவர்களுக்கும் கிடைக்காத பெரிய இரத்தினம், ஸ்வர்ணம், முதலியவைகளுடைய குவியலை அடைந்தும், தஜ்ஹாய அந்தப் பெரும் பொருளைக் தனக்கு வேண்டாமென்று தள்ளிவிட்டு, ஜொஹலவெஞ வஷ யாவெஷூத - அறிவில்லாமையாகிறமயக்கத்தின்பலத்தினல், ஓட்டாஞ்சல்லி, மண், கட்டி, குப்பை, இவைகளைக் கைக்கொண்டு விளையாடுவானே, தயாஜோநவாஃ அந்தப் பிரகாசம், ஜனித்து மரணத்தை அடைகிற சுபாவமுள்ள (சரீராதிகளைத் தானென்று மதித்திருக்கிற) மனுஷ்யர்கள், ஶூஂஸ்வமெஸ்வஶூஂஜ்ஞாநிநஂவிஹாய - ஈசுவராதிகளுக்கெல்லாம் ஈசுவரனுக விளங்கும் பூர்ணப் பிரகாச ஆத்ம ஞானியைத் தள்ளிவிட்டு, ஜொஹெநவ ஶஷி - அஞ்ஞானமாகிற மதுவைக் குடித்து அதன் வெறியாகிற மயக்கத்தினல் சரீராதிப் பிரபஞ்சங்களைச் சத்தியமென்றும், அவைகளினல் ஏற்படுகிற விஷயங்களே சுகமென்றும், நினைத்துக்கெட்டுப் போகிருர்கள். 48

ஓஹஜேபெந - ஆத்ம ஸ்வரூப சாஸ்திரார்த்தங்னன சீலனே! ஜஹாஐஂவாஶாயஊதஶிஊகஂ விஹாய - அற்பமாயுள்ள மித்தியாபூத சரீராதிப் பிரபஞ்சத்தோற்றமின்றி

வாஸ்தவஸத்தியார்த்தத்தை அடைந்த ஆத்ம நிஷ்ட ஞானியை (யடையாமல்) தள்ளிவிட்டு, ஸாயயாவ்யாமிமொ ஹிதாநராः - இல்லாததைக் காரணமாக உடையதான பெரிய மயக்கத்தினல் மகா வியாமோகத்தை அடைந்து, மனுஷ்யர்கள், ஹிதாய - தங்கள் ஹிதத்தின் பொருட்டு, லோகே - உலகத்தில், விஹரந்தி - பற்பல வகையான ஸாதனங்களைச் செய்து திரிகின்றார்கள். தே - அவர்கள் (இங்ஙனம் செய்வது) ஸ்ஹா சரீரம் விநா விஷம்விவதெந்த்ரீவ - சரீரத்திற்குச் சுகத்தைச் செய்வதான அமிருதத்தைத் தள்ளிவிட்டுச் சரீரத்தில் வியாதி, மரணம் முதலான கெடுதிகளைச் செய்வதான விஷத்தையே சாப்பிடுகிறதைப்போலவாம்.

கிம்வஹுனோக்தேந - ஜாஸ்தியாகச் சொன்னதினலே என்ன? ஸவஶம்ஸம் ஹெணவாஷிதம் - தீவிர முமுக்ஷுக்களுக்குச் சொல்லவேண்டிய யாவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் சொல்லப்பட்டது. வெதாந்த ஸம் ஹம் - வேதத்தின் சிரோபாகமான உபநிஷத்துக்களின் சுருக்கதாற்பரியமான ஜீவபிரஹ்ம அபேத வடிவ பூர்ணப் பிரகாச ஆத்ம ஞானத்தை, ஶ்ரத்ஸயா ரஹக்ஷ்ராவ - பூர்ண விசுவாஸத்தோடும் ஞானியாங் குருவினுடைய சுசுரூஷை அவன் வேண்டுபவைகளைக் கொடுத்தல், முதலான ஸாதனங்களோடும், வித்தி - தெரிந்துகொள். 47—50

(தா - ம்.) ஹேமனன சீலனே! ஆத்ம ஞானிகளுக்குள் சிரேஷ்டனு யிருக்கிற பூர்ணத்ம ஞானியினுடைய கருணையோடு கூடிய பார்வையினலே, ஜீவர்கள், தேவதைகளுக்

கெல்லாம் ஈசுவரனாகிற பதவியைச் சீக்கிரத்தில் அடைகிறார்கள். அப்படிப்பட்ட ஞானியாகிய ஈசுவரனை விட்டு, ஜன்மாந்தரங்களில் செய்த பாபவாஸனைகளின் பலத்தால் மனுஷ்யர்கள் ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் விழுந்து அதிலுள்ள சுழியிலகப்பட்டு மேலுங் கீழுமாகக் கஷ்டப்படுகிறார்கள். (பிறப்பு இறப்பாகிற ஸம்ஸாரமகா சமுத்திரத்தில் வருவதும் போவதுமான சுழியிலகப்பட்டுக் கஷ்டப்படுகிறார்கள்) 47.

ஆச்சரியம்.

எப்படி. அறிவில்லாத சிறுவன், எவர்களுக்கும் கிடைக்காத பெரிய இரத்தினம், ஸ்வர்ணம், முதலியவைகளுடைய குவியலை அடைந்தும், அந்தப் பெரும்பொருள்களைத் தனக்கு வேண்டாமென்று தள்ளிவிட்டுப்! அறிவின்மையாகிற மயக்க பலத்தினால், ஓட்டாஞ்சல்லி, மண்கட்டி, குப்பை முதலியவைகளைக் கைக்கொண்டு விளையாடுவானோ, அந்தப்பிரகாரமே ஜனித்து மரணத்தை யடைகிற சுவபாவமுள்ள (சரீ ராதிகளைத் தானென்று மதித்திருக்கிற) மனுஷ்யர்கள், ஈசுவராதிகளுக்கெல்லாம் ஈசுவரனாக விளங்கும் பூர்ணப் பிரகாச ஆத்மஞானியைத் தள்ளிவிட்டு அஞ்ஞானமாகிற கள்ளைக்குடித்து, அதன்வெறியாகிற மயக்கத்தினால் சரீராதிப் பிரபஞ்சங்களை ஸத்திய மென்றும் அவைகளினாலேற்படுகிற துக்கங்களை சுகமென்றும் நினைத்துக் கெட்டுப்போகிறார்கள். 48

ஹே ஆத்மஸ்வரூப சாஸ்த்திரார்த்தமனன சீலனே! மித்தியா பூதமானசரீராதிப்பிரபஞ்சத்தோற்றம்சிறிதுமின்றிபாரமார்த்திகஸத்தியார்த்தத்தை யடைந்த, ஆத்மநிஷ்டர்களாகிய ஞானிகளை யடையாமல், யாதொருபிரயத்தனமு மின்றித் தற்செயலாய் அவர்கள் கிடைத்தகாலத்திலும்அவர்களையுபேக்ஷை செய்து நீக்கி, அஞ்ஞானத்தினால் பெரிதும் மயங்கிய ஜீவர்

கள், தங்களுக்குச் சிரேயஸைத்தேடும் பொருட்டு, உலகத்தில் ஸாது ஸங்கத்தைத் தவிற மற்ற ஸாதனங்களைச் செய்து நிஷ்பலமாய்ச் சுழல்கின்றார்கள். அவர்கள் இங்ஙனஞ் செய்வது, சரீரத்திற்குச் சுகத்தையும் ஆயுளையும் கொடுப்பதாயும் தித்தித்துமுள்ள அமிருதத்தை வேண்டாமென்று தள்ளிவிட்டு அதற்கு (சரீரத்திற்கு) வியாதி, மரணம் முதலியவைகளைச் செய்கின்ற விஷத்தைத்தேடி யுட்கொள்ளுதல் போலவாம்.

அதிகஞ் சொல்லிப் பயனென்? தீவிர முமுக்ஷுக்களுக்குச் சொல்லவேண்டியயாவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் சொல்லப்பட்டன. வேத சிரஸ்ஸான உபநிஷத்துக்களின் தாற்பரியமான ஜீவப்பிர்ஹ்ம அபேத வடிவபூர்ணப் பிரகாச ஆத்ம ஞானத்தைச் சிரத்தை, விசுவாஸம், ஈச்வரோபாஸனை, குருபக்தி முதலிய முக்கிய ஸாதனங்களினால் தெரிந்து கொள்வாராக.

(வி - ரை.) யம் யம் லோகம் மனஸா ஸம்விபாதி

விசுத்தஸத்வ: காமயதே யாம்ஶ்ச காமான் ।

தம் தம் லோகம் ஜயதே தாம்ஶ்ச காமான்

தஸ்மாதாத்மஜ்ஞம் ஹ்யர்ச்சயேத் பூதிகாம: ॥

“பரமாத்மாவைத் தானே யென்றறிந்த பிரஹ்மவித்வான், மனத்தினால் எந்த லோகங்களைஸங்கல்பித்தாலும், எந்த இஷ்டத்தை விரும்பினாலும் அவற்றையெல்லாம் பெறுகிறான். அவன் ஸர்வகாம அவாப்தன் (ஸகல விஷயங்களையு மடைந்தவன்) ஆகையால் தனக்காயினும் பிறர்க்காயினும் எந்த இஷ்டத்தையும் பூர்த்திசெய்யவும் செய்துவைக்கவும் வல்லவன். ஆகையால் மேலானதாகிய சிரேயஸை விரும்பும் முமுக்ஷுக்கள் அந்த பிரஹ்மஜ்ஞானியைப் பக்தியால் பூஜித்தல் வேண்

டும்" என்னும் முண்டகோபநிஷத்தின்வாக்கியப்படிஞானியே உபாசிக்கத் தக்கவன். ஈச்வரனும் அந்த ஞானியைத் தொடர்ந்து செல்வனெனில் அவனுடைய மகிமையைப்பற்றி என்ன சொல்வது! ஞானிபூஜையால் அடையக் கூடாதது ஒன்றுமில்லை. பாவிகளுள் முதன்மையான சுவிர்ணனும் ஞானியின் கடாக்ஷவீக்ஷண்யத்தால் சச்சிதாநந்த சிவவடிவமானனெனின் மற்றோர் நிரூபணமும் வேண்டுமோ? பலபடி சொல்லுவானேன். எந்த இடத்தில் அகண்ட சச்சிதாநந்த சிவவடிவ ஞானி, சரீரத்தோடு விளங்குகிறானோ,அந்த இடத்தில் மோக்ஷமென்பது பிரஸன்னமாயிருக்கிறது. ஆகையினால் சிரேயஸை (வீட்டை)யானாலும்,பிரேயஸை (அறம்,பொருள், இன்பங்களை)யானாலும் விரும்புபவர்கள், அந்தப் பிரஹ்மஜ்ஞானியைத் தஞ்சமெனவடைந்து உடல்பொருளாவிகளை யவனுக்குத் தத்தஞ் செய்து கபட மற்ற பக்தியோடு பூசித்தல் வேண்டும். இங்ஙனஞ் செய்யின், பாக்கியவானுயுள்ள முமுக்ஷுவுக்கு, அந்தமகான் கருணையோடு ஜீவப்பிரஹ்ம ஐக்கிய அத்வைத ஸ்திதியை உபதேசிப்பன். இத்தகைய அபய நிலையையடைய, ஞானி பூசையைவிட மற்றோர் சாதனம் இன்றும். இந்தப் பரமமான சித்தாந்தமானது,

𑌸𑌦𑌾𑌽𑌦𑍍𑌵𑍈𑌤𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌦𑍍𑌯𑍋𑌗𑌿𑌨𑍇 ।
𑌶𑌰𑍀𑌰𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌶𑍍𑌚 𑌦𑌦𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌸𑌹 ॥ 1

𑌸𑌦𑌾𑌽𑌦𑍍𑌵𑍈𑌤 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ।
𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾 𑌸𑌾𑌧𑌨𑌂 𑌹𑌿 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

𑌸𑌦𑌾𑌽𑌦𑍍𑌵𑍈𑌤𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌯𑌤𑍍𑌰 𑌕𑍁𑌤𑍍𑌰 𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌸𑌦𑌾 ।
𑌤𑌤𑍍𑌰 𑌸𑌨𑍍𑌨𑌿𑌹𑌿𑌤𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌨𑌾𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌾 ॥ 3

ஸாரோபேத விஜ்ஞாந நிஷ்டஸ்ய ஸாயுஜ்யம் ।
ஸமோ தேவம் நவஸ்யாஜி நஹரிநஸ்யாஸ்வரோஸ்யாநஃ ॥ 4

(இ - ள்.) *அந்த பிரஹ்மஞானிக்கு உடல், பொருள், ஆவி இவைகளைத் தத்தம் செய்யவேண்டும்.* (1)

*இவனுக்குப் பணிவிடைசெய்வது பிரஹ்மவித்தையை யடைய உத்தமமான ஸாதனமாம்.* (2)

*பரமாத்ம விஜ்ஞானி எங்குளனோ அங்கு முத்தியிருக்கிறது. இதில் சந்தேகமில்லை.* (3)

*இவனுக்குச் சமமாக யாதொரு தேவனுமில்லை, ஹரிஹராதிகளும் அவனுக்குச் சமமன்று.* (4)

*என்னும் பிரஹ்ம கீதையின் பிரபலப் பிரமாணங்களால் நன்கு விளங்கும். மேலும்,*

" ஞால முண்டவன் றலைமிசை சுமப்பன்மெய்ஞ் ஞானி வேண் டேதெல்லா, மால முண்டவ னவன்பின்னே திரிகுவ னவனடித் துகட்கன்றே, சீல மன்னரு மற்றுள தேவருந் திசைதிசை பணிந்தேத்தக், காலி ரண்டையுந் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்.

*என்று ஞானாமிர்தமும்,*

" திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்
திடஞானி தெரிசனமே தேவ பூசை
திடஞானி தெரிசனமே செப தபங்கள்
திடஞானி தெரிசனமே செயு மறங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை
திடஞானி தெரிசனமே மேவு தற்குத்
திரிவிதமா முலகத்து மரிதாமி யார்க்கும். "

" வரமான ஞானிக்கு மகிழ்வி னோடே
வளமான போசனமே யளிப்ப தாலுந்
திரமான ஞானிக்குத் தேவை யான
திரவியமே சிரத்தையோடு கொடுப்ப தாலும்
பரமான ஞானிக்குப் பத்தி யோடே
பலவிதமாம் பணிவிடையே செய்வ தாலும்
அரிதான மோட்சசுக மெளிதே யாக
வடைந்திடலா மணுவுமிதி லைய மில்லை "

*என்று ரிபுகீதையுங் கூறுவது இங்குணர்தற் பாலனவாம்.*

ஞானயோககண்டம்

*முற்றிற்று.*

சிவம்.

---

சிவம்.

# முக்தி கண்டம்.

முன்கண்டத்தில் ஆத்மஜ்ஞான ஸ்வரூபமும், அதை யடையும் ஸாதனங்களுள் மேலானதாயுள்ள குரு ஈச்வரபக்தி களும் நன்கு விளக்கப்பட்டதுடன் ஜீவன் முத்த புருஷர்களுக் குப் பூர்வ (கர்ம) காண்டத்தின் ஏவுதல் கிடையாதென்றும், இத்தகைய ஆத்மஜ்ஞானிக்கு வேண்டியவைகளைக் கொடுத் தல், அவன் திருவடியைப் பூசித்தல் பணிவிடை செய்தல் முதலிய வற்றால், ஒருவன் முன்ஜென்மங்களிற் செய்த ஸகல பாபங்களும் நாசமாவது மன்றி அவனுடைய முன்னோர்களும் கடைத்தேறுகிறார்களென்றும் பரமபுருஷார்த்தமாகிய மோ க்ஷத்தை யடைவதற்கு ஞானிபூஜையைவிட மற்றோர் ஸாதன மில்லையென்றும், சாஸ்திரங்களிற் கூறப்பட்ட மற்றைய சாத னங்களனைத்தும் சற்குருவின் அடைவிற்கே சாதனங்களா மென்றும் பிரதிபாதிக்கப்பட்டுள்ளன.

இந்த முத்தி கண்டத்தில், முக்தியின் ஸ்வரூபமும், மோக்ஷஸாதனமும், லக்ஷணமும், முத்தனது பெருமையும், முக்தனது லக்ஷணமும், உபதேசமகிமையும் கூறப்படும். இவ் விஷயங்கள் பரமசிவனால் ஸ்ரீமகாவிஷ்ணுவுக்குக் கூறப்படு கின்றன.

(க) மறைநெறி யொழுக்கும்—இறையவன்பத்தியும்
கறையறு மின்ப—கண்ணதாக் கும்மெனல்.

(அ-கை) "யஜ்ஞேந பாபவைநாசக்ஷயாத் பாபஸ்ய கர்மண: । ஜ்ஞாநமுத்பத்யதே பும்ஸாம் । மோக்ஷஸாதந ஸாமக்ர்யாம் பக்திரேவ கரீயஸீ"—என்னும் பிரமாணங்களின்படி ஜீவபாவத்திற்குக் காரணமாயுள்ள (மலம், விக்ஷேபம், ஆவரணமென்னும்) அந்தக்கரணதோஷங்கள், முறையே நிஷ்காம கர்மம், ஈச்வர உபாஸனை, தத்துவஞானங்களால் நாசமாகின்றன" வென்பது சித்தாந்தமாம். ஆகவே ஜீவர்களுக்குள்ள மலவிக்ஷேப தோஷங்கள் வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள நல்லொழுக்கத்தாலும், ஈச்வரபக்தியாலும் நீங்கி விவேகாதி ஸாதனங்களின் மூலமாய்ப் பேரின்பத்தின் அடைவில் இச்சையும், அதற்குரிய ஸாதனங்களில் சிரத்தையும் உண்டாகின்றன வென்று கூறப்படுகின்றது.

வேதோக்ததர்மநிஷ்டாநாம் மத்பக்தாநாம் மஹாத்மநாம் ।
முக்தௌ ப்ரவ்ருத்திபர்யந்தம் ச்ரத்தா ஸாக்ஷாத்விஜாயதே ॥ 1

(ப - ம்.) வேதோக்ததர்மநிஷ்டாநாம்-வேதங்களில் விதிக்கப்பட்டுள்ள வர்ணாச்ரமதர்மங்களைச் சரிவர அநுஷ்டானஞ் செய்கிறவர்களாயும், மத்பக்தாநாம் மஹாத்மநாம் - ஸர்வாத்மரூப சிவமாம்என்னிடத்தில் மேலான பக்தியுள்ளவர்களாயு முள்ள மகாத்மாக்களுக்கு, முக்தௌ - மோக்ஷத்தில், ப்ரவ்ருத்திபர்யந்தம் - பிரவேசம் உண்டாகும் வரையில், ஸாக்ஷாத் - தானாகவே, ச்ரத்தா - சிரத்தையானது, விஜாயதே - உண்டாகிறது.

(தா - ம்) அவரவர்களுக்கு வேதங்களில் விதிக்கப்பட்டிருக்கிற வர்ணாச்சிரம தர்மங்களைச் சரியாய் அநுஷ்டித்துவருகிறவர்களாயும், ஸர்வாத்ம ரூப| சிவத்தினிடம் மேலான பக்தியுள்ளவர்களாயு முள்ள மகான்களுக்கு அஞ்ஞான நிவர்த்தி

ரூப மோக்ஷ ஸித்திவரைக்கும் மற்றொருவருடைய தூண்டுத லில்லாமலே அந்நிலையை யடையவேண்டுமென்னும் சிரத்தை யுண்டாகின்றது.

(வி - ரை) ஈண்டு, மோக்ஷப்பிரவிருத்தியில் சிரத்தையே காரணமாமென்று கூறப்படுகின்றது. இத்தகைய சிரத்தை யானது பக்தியையும் சித்த சுத்தியையும் அபேக்ஷிக்கின்றது. மோக்ஷஸாதனங்கள் பலவற்றிற்கும் சிரத்தை ஆதாரவடிவ மாம். ஸர்வஸாதன ஸம்பத்தியாய தயிர்கடைதலின் சாமக் கிரியில் சிரத்தை கடைதற் பாத்திரமாம். அது நாசமானல் ஸர்வஸாதனங்களும் நிஷ்பலமாம். சிரத்தை யொன்றிருந் தால் ஸகலஸாதனங்களும் ஸபலமாம். ஆதலாற்றான் "ஶ்ரத்தா ஸர்வஸ்ய காரணம்" சிரத்தையே ஸகல சாதனங்களின் அடைவிற்கும் காரணமாம் என்றும், "ஶ்ரத்தாவாந்லபதே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: ஜ்ஞாநம் லப்த்வா பராம் ஶாந்திம் நிர்வாணமதிகச்சதி - சிரத்தையையுடையவன் தற்பர ஞய் இந்திரிய விவகாரங்களனைத்தும் நசிக்கப்பெற்றவனாய் அபேத ஞானத்தையடைந்து யாவற்றினும் அதீதமான உப சாந்தஸ்வரூப நிர்வாணத்தை அடைகிறான்" என்றும் சாஸ் திரங்கள் கூறுகின்றன.

இத்தகைய உத்தமோத்தம ஸாதனமாகிய சிரத்தை யானது வேத நெறியினின்றும் சிறிதும் தவறாது ஒழுகுபவ னுக்கும் பரமேச்வரபக்தனுக்குமே யுண்டாகு மென்றும் கூறப்பட்டதென்க.

ஈண்டு "முத்தியில் பிரவேசம் உண்டாகும் வரையில்" என்பது ஸகலநாம ரூபப்பிரபஞ்ச நாட்டம் நீங்கி (அனர்த்தங் கள் நிவர்த்தியாய்) அஸ்தி, பாதி, பிரியஸ்வரூப அகண்ட சிவ

மாகவே விளங்கும் ஜீவன் முத்தி நிலையையடையும் வரையில் என்பதாம். (1)

(உ) முத்தியி னிலக்கண—மினைத்தேன மொழிதல்.

(அ - கை) "வாஸநா ஷூக்ஷயோமோக்ஷ: - தேசகால வஸ்துபரிச் சேதத்தோடு கூடிய ஸகலபேத வாஸனைகளின் நாசமே மோக்ஷமாம். நான் ஜீவனென்றும், பரன் என்னைவிட வேறு என்றும், உள்ள பேத பாவத்தின் நாசமே மோக்ஷமாமென்று முத்தியின் இலக்கணம் கூறப்படுகின்றது.

ஸாயுஜ்ய ரூபவாபரோமுக்திர்ஜீவ பராத்மநோ: ।
பாரமார்த்திகதாதாத்ம்யரூபஸ்யாஜ்ஞாநநாஸத: ॥ 2

(ப - ம்.) ஸுஸ்ய-(சிரத்தையோடு கூடிய ஸாதனங்களையுடைய தீவிரதர) முமுக்ஷுவுக்கு, அஜ்ஞாநநாஸத: - (விபரீதத்தோற்றத்திற்குக் காரணமாகிய) அவித்தையின் நாசத்தால், ஜீவபராத்மநோ:-ஜீவபரமாத்மாக்கள், பாரமார்த்திகதாதாத்ம்யரூபா - யதார்த்தமாயுள்ள, பரப்பிரஹ்மத்தோடு ஐக்கியமாய் (அபேதமாய் விளங்கும் நிலையுண்டாகின்றது). இத்தகைய நிலையே, ஸாயுஜ்யரூபா-இரண்டறக் கலத்தல்வடிவமாயும், பரோ-மேலானதாயுமுள்ள, முக்தி: - மோக்ஷமாம்.

(தா - ம்.) சிரத்தையோடு கூடிய தீவிர தரமுமுக்ஷுவுக்கு விபரீதத் தோற்றத்தின் காரணமாகிய அவித்தியா நாசத்தினால், பேதமாய் விளங்கும் ஜீவபரமாத்மாக்கள் பாரமார்த்திகப் பிரஹ்மத்தில் பாலும் நீரும் போலவும், உப்பும் ஜலமும் போலவும், ஐக்கியப்பட்டு அபேதமாய் விளங்கும் நிலையுண்டாகின்றது. இதுவே மேலானதாயுள்ள ஸாயுஜ்ய ரூப மோக்ஷமாம்.

(வி - ரை) ஜீவப்பிரஹ்மங்களுக்கு ஐக்கியம் ஸ்வாபாவிகமேயாம். இது புதிதாயுண்டாவதன்று. புதிதா யுண்டானது அவற்றின் பேதமேயாம். இப்பேதம் அவித்தையால் தோன்றியதாம். அபேதமாகிய ஐக்கியமும் அவித்தையாலேயே மறைந்ததாம். அதாவது அவித்தையின் ஆவரண சக்தியால் அபேதமாகிய பாரமார்த்திக ஐக்கியம் மறைபட்டு விக்ஷேப சக்தியால் இல்லாததான மித்தியாபேதம் தோன்றிற்று என்பதாம். இங்ஙனம் ஸகல ஜீவர்களும் அவித்தியா வசத்தர்களாய் ஸ்வயமாகவே யுள்ள பிரஹ்ம ஸ்வரூபமானது அடையப்படவில்லையென்று மயங்கி, மயக்கந் தெளிந்த காலத்தில் நித்தியப்பிராப்தமாயுள்ள பிரஹ்மத்தை யடைந்ததாக நினைக்கிறார்கள்.

ஸாயுஜ்ஜிய மென்பது பின்னப் பிரதீதி (பார்வை) யொழிந்து ஐக்கியப்படுவதாம். (2)

(௩) ஜீவன் முத்தியின்—சிறப்பினைச் செப்பல்.

(அ - கை.) நிவ்ருத்திராத்மமோஹஸ்ய ஜ்ஞாதஸ்யைவோபலக்ஷிதः உபலக்ஷணஹாநேபிஸ்யாத்வ்ருத்திः பாவகாதிவத்" நித்திய பரிபூர்ண ஆத்மாவை அநித்திய பரிச்சின்ன ஜக ஜீவாதி அநாத்ம பதார்த்தங்களாகக் காட்டிய மயக்க நாசத்தால் அதாவது அஜ்ஞான நாசத்தால் ஆத்ம ஜ்ஞானம் ஸமாதியில் அறியப்படுகின்றது. ஒருமுறை ஸமாதியில் ஆத்ம ஸாக்ஷாத்காரமான பின்னர், இந்த தத்துவஞானமானது ஸமாதியின்றியகாலத்திலும் உள்ளதாயிருக்கிறது. விழிப்பையடைந்தவன் மறுபடியும் மயக்கத்தை யடைவதில்லை. எங்ஙனமெனின் சமையல் செய்யப்பட்ட அன்னமானது மறுபடியும் தன் பூர்வஸ்திதியாய அரிசியின் வடிவத்தை யெய்தாதது போலவாம்" என்னும் பிரமாணப்படி எந்த உத்தம ஜிஞ்ஞாஸு

வுக்கு, ஜன்மாந்தர புண்ணிய விசேஷத்தினாலும், பூர்ணாத்ம ஜ்ஞானியின் உபதேசத்தினாலும், சரீராதிப் பிரபஞ்சம் கேவலம் தோற்றல் மாத்திரமே யென்றும், தன் ஆத்ம ஸ்வரூபமே ஸகலத்திற்கும் அதிஷ்டான வடிவ ஸ்வப் பிரகாச பரிபூர்ணமா யிருப்பதென்றும் சந்தேக விபரீத மற்ற திட ஞானம் ஏற்பட்டிருக்கிறதோ அவனுக்கு மயக்கம் நீங்கிய காலத்திலும் அவனிடத்தில் நாமரூப சரீராதிப் பிரபஞ்ச விகார நிகழ்ச்சி அஞ்ஞானிகளின் திருஷ்டிக்குத் தோன்றினாலும், அவன் (ஞானி) தன் நிலையிலிருந்து நழுவுவ தில்லை. இந்நிலையே ஜீவன் முத்தியாம் என்று ஜீவன் முத்தியின் ஸ்வரூபம் ஈண்டு கூறப்படுகின்றது.

யஸ்ய முக்திரபிவ்யக்தா ஸ்வஸ்வரூபாத்மரூபிணீ ।
தஸ்ய ப்ராரப்தகாலாந்தா ஜீவந்முக்தி: ப்ரகீர்த்திதா ॥ 3

ஸ்வஸ்வரூபாத்மஸம்வித்யா முக்தேரஜ்ஞாநநாஶத: ।
ஸுஅபிவ்யக்தி ஸாவிஶேஷா முக்திஸ்யாத்ஸர்வஸாக்ஷிக: ॥ 4

ஸதேவ தேஹமாஸ்தாய ப்ராரப்தகர்மஸம்க்ஷயே ஹ்ய ।
ப்ரதிபாஸோ நிவர்த்தேத பஞ்சஸ்ய நஸம்ஶய: ॥ 5

(ப - ம்.) யஸ்ய - எவனுக்கு, ஸ்வஸ்வரூபாத்மரூபிணீ - தானாய்ச் சித்தித்திருக்கிற ஆத்மஸ்வரூப ஜ்ஞானமாகிற முக்தி:- அநர்த்த நிவிருத்தி ரூபமான ஆநந்தரூப மோக்ஷமானது, ஸுஅபிவ்யக்தா - நன்கு விளங்குகிறதோ, தஸ்ய - அவனுடைய, ப்ராரப்தகாலாந்தா - பிராரப்த கர்மத்தின் முடிவு வரையில் (அதாவது ஆத்ம ஸாக்ஷாத்காரம் முதல் சரீர வீழ்ச்சி வரையில்) உள்ள அவனுடைய நிலை, ஜீவந்

ஸ்திதி: ப்ரோச்யதே - ஜீவன் முத்தி யென்று சொல்லப் படுகின்றது.

ஹேமகவிஷ்ணோ - ஹேமகாவிஷ்ணுவே! அஜ்ஞாநநாசத: அஞ்ஞான நாசத்தினால், ஸ்வத:ஸித்தாத்மரூபாயா - முன்னமேதானகச் சித்தித்துள்ள ஆன்மவடிவினதாய, முக்தி: - முத்தியானது, அபிவ்யக்தி: - நன்கு விளங்கும் காலத்தில், முக்தஸ்வரூபாஸ - ஜீவன்முக்த நிலையானது ஏற்படுகின்றது. (அக்காலத்தில் அவனுக்குச் சரீராதிப் பிரபஞ்சம்), தக்தவஸ்த்ரவத் - (மடித்து வைத்திருக்கப் பட்ட) எரிந்தவஸ்திரம்போல் (பார்வைக்கு மட்டும் தோன்றுவதாம். (4)

ஹரே! ஹேமகாவிஷ்ணுவே! பலபோகாத் - பலத்தை யனுபவிப்பதனால், ப்ராரப்தகர்மண: - பிராரப்த கர்மத்தினுடைய, ஸங்க்ஷய: - நாசமாம். (அதனால்), ப்ரபஞ்சஸ்ய - நாம ரூபப் பிரபஞ்சத்தினுடைய, ப்ரதிபாஸ: தோற்றமும், நிவர்த்ததே - நீவர்த்தியாகின்றது. ந ஸம்சய: - இதில் சந்தேகமில்லை.

(தா - ம்) எந்த உத்தம புருஷனுக்குக் கர்மஸாம்யம், குரு அநுக்கிரகம் முதலியவற்றால் அஞ்ஞான நிவர்த்தியினால் சரீராதிப் பிரபஞ்ச சம்பந்தம் சிறிது மில்லாத பூர்ணாத்ம ஸ்வரூபமானது தானகவே பிரகாசிக்கிறதோ, அந்த மகானுடைய பிராரப்த கர்ம முடிவுவரையில் அதாவது ஞானோதயகாலங் முதல் அவனால், ஜன்மாந்தரங்களில் செய்யப்பட்ட கர்மங்களின் பயனாய் ஏற்பட்டிருக்கும் அந்தச் சரீர வீழ்ச்சிவரையில் உள்ள நிலைஜீவன் முக்தியென்று சொல்லப்படுகின்றது.

ஹே மகாவிஷ்ணுவே! ஆவரணரூப அஞ்ஞான நாசத்தினல் எப்பொழுதும் தானகச் சித்தித்துள்ள அதிஷ்டான ஆத்மவடிவினதாய நாம ரூபப் பிரபஞ்ச சத்திய அத்தியாச நிவர்த்தியானது நன்கு விளங்குங் காலத்தே ஜீவன்முத்தி நிலை யேற்படுகின்றது. அக்காலத்தில் அவனுக்குச் சரீராதிப் பிரபஞ்சம் பாதிதானுவிர்த்தியாய்த் தோன்றுகிறது; மடிப்போடு எரிந்த வஸ்திரமானது பார்வைக்கு வஸ்திரம்போல் தோன்றினும் அது எங்ஙனம் அநுபவயோக்கிய மல்லவோ அங்ஙனமே உலகமும் அனுபவயோக்கிய மன்றிப்பார்வைக்கு மட்டும் தோன்றுவதாகும்.

ஹே ஹரியே! பலபோகத்தை யனுபவிப்பதனல் பிராரப்த கர்மத்தின் நாசம் ஆம். அதனல் நாமரூபப் பிரபஞ்சத்தினுடைய தோற்றமும் நிவர்த்தியாகின்றது. இதில் சந்தேகமில்லை. (3-5)

(வி - ரை) "யஸ்ஸர்வஸம்வ்யவஹாரேஷு வ்யவஹாரபி விஷ்ணுஹ: । யதாபெஷ்வவ ஸுணீராக்ராஸஜீவந்முக்த ஸஉச்யதே ॥ எவன், நாம ரூபப்பிரபஞ்சஸம்பந்தமான ஸகல காரியங்களிலும் விவகரிக்கிறவனயிருந்தாலும், இதரர்களுடைய விவகாரத்திற்போல இச்சையின்றியவனய்ப் பூரண ஆத்ம ஸ்வரூபமாய் விளங்குகிருனே அவன் ஜீவன் முத்தனென்று சொல்லப்படுகிறுன்." என்னும் சுருதிப் பிரமாணப்படி நாமரூபப் பிரபஞ்சத் தோற்றத்தில் சத்திய அபிமான நிவர்த்தியே ஜீவன் முத்தியின் லக்ஷணமாம். ஜீவன் முத்தியென்பதன்பொருளாவது யான் எனதென்னும் அபிமானமான ஜீவத்துவத்தின் நிவர்த்தியாம். ஜீவன்முத்த புருஷனுக்கு அவித்தையின் ஆவரணவிக்ஷேப மாய இரண்டு சக்திகளுள் ஸம்ஸார பரம்பரைக் கேதுவான ஆவரணமானது நிஷ்

பிரபஞ்ச பிரஹ்மாத்ம ஐக்கிய ரூப தத்துவஞானத்தினுல் நாசமடைந்தும், அவித்தியாலேசமாகிற விட்சேப சக்தியானது முளைத்தற்கேதுவாகாத வறுத்த விதையைப்போல் அவனுடைய சரீரபதநம் (வீழ்ச்சி) வரையில் உளதாகித் தேகாதிப் பிரபஞ்சத்தோற்றத்தைச் செய்யும். இங்ஙனந் தோற்றுவதனுல் அம்மகானுக்குத் தேகாதிப் பிரபஞ்சத்தில் சத்தியத்துவப் பிரமம் இல்லை. சத்தியத்துவப் பிரமமும், அதனுல் ஏற்படும் "யான் என்து" என்கிற அபிமானமுமே சம்ஸார பந்தத்திற்குக் காரணமா மென்பது அத்தியாத்ம சாஸ்திரங்களின் சிதையாத சித்தாந்தமாம். ஆதலின் எந்த மகானுக்குப் பூர்வ புண்ய ஸுக்ருத விசேஷத்தினுல் ஈச்வரானுக்கிரகமும் அதனுல் சற்குரு உபதேசமும்கிடைத்துப்பரிபூர்ணுத்மப் பிரகாச போதமானது ஸித்தித்திருக்கிறதோ அவனுக்குப் பிரபஞ்சத்தில் சத்தியத்துவப் பிரமமும் யான் எனதென்னும் அபிமானமும் நீங்கிச் சகல பேதப்பிரதீதியும் போய் அகண்ட சச்சிதாநந்த சிவமாகவே விளங்குகிருன். அவனிடம் சகல அத்தியாசங்களும் நாசமாய் விட்டபடியால், ஸகல கர்மங்களும் ஒழிந்து விட்டன. இதனுல் அவனுக்கு மறுபிறப்பு கிடையாது. உண்மையாய்ச் சந்தேக விபரீதங்களறத் தன் ஸ்வஸ்வரூபத்தை யறிந்தவனுக்கு கர்த்ருத்துவ போக்த்ருத்துவ தர்மங்கள் நாசமாகின்றன. நிரபிமானமாய் எத்துணைக் கருமங்கள் செய்யினும் அவை பந்தத்திற்குக் காரணமாவதில்லையாம்.

(ச) பந்த மோக்ஷங்கள் - பரமார்த்த மன்றேனல்.

(அ - கை.) இத்தகைய ஜீவன்முக்த நிலையானது, அஞ்ஞான காரிய அந்தக்கரண தாதாத்மியத்தினுல் பிரதிபாஸமான நாமரூபப் பிரபஞ்சத்தைச் சத்தியமென மயங்கி "நான் சுக

துக்கங்களை யனுபவிக்கிறே''னென்னும் விருத்தியோடுள்ள ஒருவன், பூர்ண ஜ்ஞாநாநுபவ சற்குருவைச் சரணடைந்து அவரால் உபதேசிக்கப்பட்டு, ஆத்மாவுக்கு வேறாகத் தோற்று வனவெல்லாம் மித்தையென்று அறிந்த காலத்தில், அவன், தன் பூர்வ ஸ்திதியை யபேக்ஷித்து ''யான் இப்பொழுது ஸர்வ துக்கங்களினின்றும் விடுபட்டே''னென்று விவகரிப்பதே யொழிய, பாரமார்த்திகமாகப் பந்த மோக்ஷங்கள் ஆத்மாவுக் குக் கிடையாதென்று முத்தியின் இயல்பு ஈண்டு கூறப்படு கின்றது.

ஹூதவூவெ-ூா-ந-ஸூா-நா-ூ-ஊஉ-த-ூவெூதெமயா ।
நஸ-ூெக்ஷா-ந ஸஜஸ ந-ூ-ூ-க்ஷ-ந-ூவாவாா: ॥ 6

ய வநவ ூா-தா-நா-தா-நம் ஸ-ூஜூஸம் வெஷ-கெஸவ ।
ஸவநவ வாஜ்ஞா-நீசெ-நதரொ ூயயாzzவூதா: ॥ 7

(ப - ம்.) மயா-என்னல். ஹூதவூவெ-ூா-ந-ஸூா-நாக்- முன்னர் அஞ்ஞானத்தினல் சரீராதிகளைத் தானென் றும், திரியங்களைத் தனதென்றும் பாவித்ததனல் கட்டுப்பட்டுத் துன்புற்றமை போலிருந்ததை நோக்கி, (ஞானம் வந்து மயக்கந் தெளிந்த காலத்தில்) ூ-ஊ ஊத-ூவூெதெ - (மயக்கத்தினல் மித்தையாகத் தோன் றிய அகம்புறங்கள் நாசமானதால்) விடுபட்டவனென்று சொல்லப்படுகிறது. ஸ: - அவன். ந-ூ-ஊ: - உண்மை நோக்கில் விடுபட்டவனுமல்லன்; நஸஜ: - கட்டுப் பட்டவனுமல்லன், ந-ூ-ூ-க்ஷ-: - விடுபடவேண்டு மென்கிற இச்சையுடையவனுமல்லன்; நவாவா: - ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறானவனுமல்லன்.

கெஶவ - ஹே கேசவனே! யஃ - எவன், ஊவம் - மேற் சொன்னபடி, ஶுத்தெ - ஸத்துவ பரிணும சுத்த சித்தத்திஞல்; ஶுத்தாநம் - பரிபூர்ண ஸ்வப்பிரகாச ஆத்ம ஸ்வரூபத்தை, ஸஂஶயஂ - சந்தேக விபரீதங் களற, வெத்தி - அறிகிருனே, ஸஊவ - அவனே, வரஜ்ஞாநீ - மேலான பிரஹ்ம ஞானியாவன். மாயா யாzzவூதாஃ ஜதாஃந - மாயையால் மூடப்பட்ட பாமரர்கள் அல்லர். 7

(தா - ம்.) முன்னர் அஞ்ஞானத்திஞல் சரீராதிகளைத் தானென்றும் கிரியைகளைத் தனதென்றும் பாவித்தமையால் கட்டுப்பட்டுத் துன்புற்றமை போலிருந்ததை நோக்கி ஞானத் திஞல் மயக்கந் தெளிந்த காலத்தில் மயக்கத்தாற் ருேன்றிய அகம் புறங்கள் நாசமாக, அவற்ருல் ஏற்பட்ட ஸகல அநர்த் தங்களினின்றும் விடுபட்டவனென்று சொல்லப்படுகின்றது. உண்மை நோக்கில் அவன் விடுபட்டவனுமன்று; கட்டுப்பட் டவனுமன்று; விடுபடவேண்டுமென்னும் இச்சையுடையனு மல்லன்; ஆத்ம ஸ்வரூபத்தைவிட வேருனவனுமல்லன். 6

ஹே கேசவனே! எவன், மேற் சொன்னபடி ஸத்துவ பரிணும சுத்த சித்தத்திஞல் பரிபூர்ண ஸ்வப்பிரகாச ஆத்ம ஸ்வரூபத்தைச் சந்தேக விபரீதங்களற அறிகிருனே அவனே பிரஹ்ம ஜ்ஞானியாவன்; மாயையால் மூடப்பட்ட வேற்றுமை யுடைய பாமரர்கள் அல்லர். 7

(வி - ரை.) " நநிரொயொநவொதஙிநுவஙொ நவஸாயகஃ। நமமக்ஷநுவெமஜெதேஷாவ ரயநுதா " உண்மையில் ஸ்வப்பிரகாசப் பிரஹ்மத்தை மறைத்து நிரோதஞ் செய்யக்கூடிய ஆவரணமும், அதை

வேறு வகையாய்த் தோற்றுவிக்கக்கூடிய (நாம ரூபப்பிரபஞ்ச காரணமாகிய) விக்ஷேபமும் எப்பொழுதும் இல்லை; ஆவரண, விக்ஷேப வடிவ அவித்தை யில்லையாகையால் அவித்யா காரிய பந்தமுமில்லை. பந்தமின்மையின் அதை நிவர்த்திக்கும் ஸாதனங்களுமில்லை. ஸாதனங்களின்மையின் அநர்த்த நிவர்த்தி- ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷ ரூப ஸாத்தியத்தில் இச்சையும் இல்லை. முமுக்ஷுத்தன்மை (இச்சை) இலதாகவே முத்தனுமில்லை'' என்னும் கௌட பாதரின் திருவாக்கின்படி பந்த மோக்ஷங்கள் பரமார்த்தமன்றென்பது நன்கு புலப்படுகின்றது.

மேலும், மோக்ஷமென்பது விடுதலையாம்; அதாவது ஸகல அநர்த்தங்களினின்றும் விடுபடுவதாம். ஆத்மா அஸங்கமாதலின் அதற்குப் பந்தமுண்டென்று கூறுதல் பொருந்தாது. ஆதலின் அதற்கு மோக்ஷமும் இன்றெனல் வேண்டும். பந்த முடைய ஒன்றற்கே மோக்ஷம் (பந்த நிவர்த்தி) பொருந்தும். ஆதலின் பந்த மோக்ஷங்கள் மனத்திற்கேயா மென்று கூறுதல் நலமுடையதாம். "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:" பந்தமோக்ஷங்களுக்கு மனமே காரணம் என்பது இதற்குப் பிரமாணமாம். எங்ஙனம், ஒருவன் ஸ்வப்னத்தில் சிறைச்சாலையில் இருக்க நேர்ந்து அதனால் வெகு துன்பப்பட்டு அந்த ஸ்வப்நத்திலேயே விடுதலையடைந்து சந்தோஷப்பட்டுப் பிறகு அவஸ்தாந்தரமாகிய ஜாக்கிரத்தையடைந்த காலத்தில், சிறையிலடைந்ததுன்பமும்அதனின்றும் நீங்கியபோது அடைந்த இன்பமும் பொய்யென்று அறிகிறானோ, அங்ஙனமே ஜாக்கிரகாலத்தில் அடைந்த ஸகல அநர்த்த ரூப பந்தமும் அதன் நீக்கமாகிய மோக்ஷ அனுபவமும் அஸங்க நித்தியாநந்த ஸ்வரூப ஆத்மாவிற்கு உண்மையில் இல்லவேயில்லையென்பது சிதையாத சித்தாந்தமாமென்று கூறப்பட்டதென்க. (6-7)

(ரு) அஞ்ஞானபந்த - மறுநெறியறைதல்.

“ ஜ்ஞாத்வா தே₃வம் ஸர்வபாஶாபஹாநி: க்ஷீணை: க்லேஶை: ஜந்மம்ருத்யுப்ரஹாணி: ॥ ஸ்வயம்பிரகாச அகண்டைக ரஸஸ்வரூப ஆத்மாவை யறிவதனுல் ஜனன மரண ரூப ஸம்ஸாரமும், அநர்த்த வடிவ ஸர்வக்கிலேச (துக்க)ங்களும், அவற்றிற்குக்காரணமான யான் எனதென்னும் பாசங்களும் நாசமாகின்றன” என்னும் சுருதிப்பிரமாணப்படி அஞ்ஞான காரிய பந்த மயக்கின் நீக்கத்திற்கு ஞானமே காரணம். “ஜ்ஞாநாதே₃வ து கைவல்யம்” ஞானத்தானேயே மோக்ஷம் ஆம். என்று முத்திஸாதனம் ஈண்டு கூறப்படுகின்றது.

ஶுத்₃த₄: பராபராப்தி: ஜ்ஞாநாதே₃வ ந கர்மணா ।
ஜ்ஞாநம் வேதா₃ந்தவாக்யாநாம் போ₃தா₄த்₃வயநிர்ணயாத்

உத்பந்நாயாம் போ₃தா₄ வ்ருத்தௌ போ₃த்₄யா போ₃தா₄வேக்ஷணே ।
அவித்₃யகம் ஸபே₃த₃ம் ச ப்ரபோ₃தா₄த் விசாரத: ॥ 9

ஜ்ஞாநேநைவாத்₃ய நோ'ஜ்ஞாநம் ஶுத்₃தே₄நைவ விலீயதே ।
விலீநே ஸ்வாத்மநோ'ஜ்ஞாநே தஜ்ஜம் ஸர்வம் விநஶ்யதி ॥

தஜ்ஜதவஸ்து விநாஶேந மோஹநாஶோ மோஹநாஶித: ।
க்ஷீயதே புத்₃தி₄நாஶேந ராக₃த்₃வேஷௌ விநஶ்யத: ॥ 11

தயோர்நாஶே போ₃தா₄விஷ்டௌ புண்யாபுண்யே விநஶ்யத: ।
புண்யாபுண்யக்ஷயாத்₃தே₃ஹா விஷயா இந்த்₃ரியாணி ச ॥

நஶ்யந்த்யேவ ந ஸந்தே₃ஹோ ஜ்ஞாத்வா தே₃வமிதி ஶ்ருதி: ।
தஸ்மாஜ்ஜ்ஞாநம் ஹி ஸர்வஸ்ய ஸம்ஸாரஸ்ய க்ஷயோ ப₄வேத் ॥

ஶுத்₃த₄ஸத்த்வவிஜ்ஞாநாத் தத்த்வம் ப்ரபோ₃த₄ கைவல்யம் ।

(ப - ரை.) ஆத்மந: ஸ்வாபாவிகீ முக்தி: ஆத்மாவிற்கு ஸ்வபாவரூப மேலான முத்தியானது, ஜ்ஞாநாதேவ - ஞானத்தினாலேதான் (உண்டாகிறது); நகர்மணா - கர்மத்தினாலன்று; ஜ்ஞாநம் - அந்த தத்துவஞானமானது, வேதாந்தவாக்யாநாம் மஹாதாத்பர்யநிர்ணயாத் - வேதாந்தமாகிற உபநிஷத்துக்களின் மஹா வாக்யார்த்த நிச்சயத்தினாலேயே (உண்டாகின்றது.) (அ)

ஜலஜேக்ஷண - ஹே தாமரைக்கண்ணனே! விசாரத: - தத்துவம் பதார்த்த விசாரத்தினால், ஸத்வாத்மநா - ஸத்துவபரிணாம சுத்த சித்தத்தில், உத்பந்நாயாம் ஸம்வித்யா - உண்டான அகண்டாகாரஜ்ஞானத்தினால், ஸத்பாத்ர பத்தனைத் தோற்றும் இந்த ஜீவனே, ப்ரஹ்மைவ - பிரஹ்மமேயா மென்று, ஸ்வப்ரகாசம் ஸமேதி - பிரகாசத்தையடைகிறது. (கூ)

ஆத்மாஜ்ஞாநம் - ஆத்மாவை மறைக்கும் அஜ்ஞான மானது, அநேநைவ - இதனை (அகண்டாகாரதத்துவம் பதார்த்த ஐக்கியஜ்ஞானத்தினா)லேயே, ஆத்மந்யேவ விலீயதே - ஆத்மாவிலேயே லயத்தையடைகின்றது; ஸ்வாத்மாஜ்ஞாநே விலீநே - தன் ஸ்வரூபத்தை அறியாமையாகிற அஞ்ஞான நாசத்தினால், தேஹாதம் ஸம்ஸார விநஷ்யதி - பேதமாகத் தோற்றும் நாம ரூப உலகம் நாசமாகின்றது. (கO)

தேஹாதஸம்ஸார விநாசேந - துக்கவடிவ நாம ரூபப்பிரபஞ்ச நாசத்தினால், சோகாநாசோகாநாக்ஷிம: - அநுகூலப் பிரதிகூல விருத்திகள்க்ஷயம் தி - நாசத்தை யடைகின்றன. க்ஷிநாசேந - அநுகூலப் பிரதிகூல

விருத்தி நாசத்தினால், ராகத்வேஷௌ விநஶ்யத: - விருப்பு வெறுப்புக்கள் நாசமாகின்றன. (கக)

ஹேமஹாவிஷ்ணோ - ஹே மஹாவிஷ்ணுவே! தயோர்நாஶே - அவைகளின் நாசத்தினால், தர்மாதர்மௌ விநஶ்யத: - தர்மா தர்மங்கள் நாசமாகின்றன, தர்மாதர்மக்ஷயாத் - தர்மாதர்மங்கள் நசித்ததால், தேஹோ விஷயா இந்த்ரியாணி - போகாயதனமாகிற சரீரமும், போக்கியமாகிய திரிசியங்களும் ஞானேந்திரியங்களும், ()

நஶ்யந்த்யேவ - நாசத்தையே யடைகின்றன; ந ஸம்ஶய: - இதில் சிறிதும்சந்தேகிக்க இடமில்லை. ஆத்மா தேவம் இதி ஶ்ருதி: - "ஆத்மாவை அறிந்ததினால்" என்னும் ஐதரேய உபநிஷத்தின் வாக்கியபலத்தினால். தஸ்மாத் - ஆகையினால், அஜ்ஞாநஹேதுகஸ்ய - அஞ்ஞானத்தையே காரணமாகவுடைய, ஸம்ஸாரஸ்ய - சம்ஸாரத்தினுடைய, க்ஷய: - நாசம், ஆத்மதத்த்வவிஜ்ஞாநாத் - ஆத்ம தத்துவஜ்ஞானத்தினால், ஏவ - ஏற்படுகின்றது. தத்வம் - பாரமார்த்திக உண்மையானது, கேவலம் ப்ரஹ்மைவ - நிர்விசேஷ சின்மாத்திர அதிஷ்டானப் பிரஹ்மமேயாம். 13½

(தா - ம்.) ஆத்மாவிற்கு ஸஹஜமாயுள்ள முக்தியானது அபேததரிசனமாகிய தத்துவஞானத்தினாலேயே உண்டாகின்றது. பேத விவகாரத்தோடுகூடிய கர்மத்தினாலன்று. இந்த அபேத ஞானமானது மஹாவாக்கியார்த்த நிச்சயத்தினாலேற்படுகின்றது.

ஹே தாமரைக்கண்ணனே ! ஸத்துவ பரிணும சுத்த சித்தத்தினிடத்தில் தத்பத துவம்பத லக்ஷ்யார்த்த ஐக்கிய நிச்சயத்தினுல் உண்டாய அகண்டாகார விருத்தி ஞானத்தினுல் அஞ்ஞான காலத்தில் ஸம்ஸாரியாய்த் தோற்றும் இந்த (ஜீவ) ஆத்மாவே நிர்விசேஷ நித்திய முக்த ஸச்சிதாநந்த பிரஹ்மமென்று ஏற்படுகின்றது. 9

அம்சரகிதமாய ஆத்மாவில் கற்பித விசேஷாம்சத்தை மறைத்த ஆவரணரூப அஞ்ஞானமானது இந்த விருத்தி ஞானத்தினுல் நாசமடைந்து ஆத்மாவிலேயே ஒடுங்குகின்றது. அஞ்ஞான நாசத்தினுல் அதன் காரியமாகிய நாமரூபப் பிரபஞ்ச ஸத்தியத் தோற்றம் நாசமாகின்றது. 10

பேத ரூபப் பிரபஞ்ச நாசத்தினுல் அநுகூலப் பிரதிகூலவிருத்திகள் நாசமாகின்றன. இதனுல் விருப்பு வெறுப்புக்கள் நாசமாகின்றன. 11

ஹே மஹாவிஷ்ணுவே ! விருப்பு வெறுப்புக்கள் நாசமடைவதனுல் தர்மா தர்மங்கள் நாசமாகின்றன ; தர்மாதர்மங்களின் நாசத்தினுல் போகஸாதனமாகிய சரீரமும், போக்கிய விஷயங்களும் போகப் பிரமாணங்களாகிற இந்திரியங்களும் நாசமாகின்றன. 12

இதில் சற்றும் சந்தேக மில்லை. ஆகையினுல், அஞ்ஞானத்தைக் காரணமாக வுடைய ஸம்ஸாரத் தோற்றத்தினுடைய நாசமானது ஆத்ம தத்துவ ஞானத்தினுலேயே ஏற்படுகின்றது. அத்தியாசம் நீங்கிய காலத்தில் பாதிக்கப்படாமல் தானுய் மிஞ்சியது அதிஷ்டான ரூப நிர்விசேஷப் பிரஹ்மமே யாம். 13-13½

(வி - ரை.) ஈண்டு ஸகல அநர்த்தங்களுக்குங் காரணமாகிய அஞ்ஞான நிவர்த்தியின் ஸாதனம் கூறப்படுகின்றது.

அஞ்ஞான நிவர்த்தி ஞானத்தினுலேயேயாம். மற்றென்ருலாகாது. மற்ற கர்மோபாஸனைகள், பாரமார்த்திகமான ஞானம் ஏற்படுவதற்குரிய சித்தப் பிரஸாதத்தினைச் செய்வனவாம். ஸத்துவகுணப் பிரதானமான சுத்த சித்தத்திலன்றி, ராஜஸ தாமஸ குணங்களோடு கூடிய மலின (அசுத்த) சித்தத்தில் உண்மை ஞானம் விளங்குவது இல்லவே யில்லையாம்.

மேலும் ஞானத்தைத் தவிற வேறு சாதனங்களால் மோக்ஷம் உண்டாகுமெனின், அங்ஙனமுண்டாகிய மோக்ஷம் அநித்தியமானதாகும். ஏனெனில் தத்துவ ஞானத்தைத் தவிற மற்ற கர்மோபாஸனைகளால் பந்தம் நிவர்த்தியாமாயின் அது சத்தியமாக விருத்தல்வேண்டும். பந்தம் சத்தியமாகவே அஃதுள்ளபோது மோக்ஷம் இல்லாததாய், பின்னர், சாதனங்களாலுண்டாய், தோன்றிய வெல்லாம் அழியுமென்னும் நியமப்படி நாசத்தைப் பெறும். ஆதலாற்ருன் மோக்ஷஸ்வரூபம் அடையப்படுவதன்று; மற்ருே அது நித்திய ஸித்தமேயாம். இங்ஙனம் நித்திய ஸித்தமாயுள்ள மோக்ஷவடிவ ஆத்ம ஸ்வரூபம் கற்பிதமாயையால் பத்தமாய்த் தோன்றுகின்றது. பந்தம் தோன்றல்மாத்திரமேயாம். எங்ஙனம் கயிற்றில் அரவு தோன்றுகின்றதோ அங்ஙனமே ஆத்மாவில் பந்தத்தன்மைதோற்றுகின்றது. எங்ஙனம் கயிற்றில் தோன்றிய சர்பம் தடிகொண்டு அடித்தலாகிய கிரியையால் நிவர்த்தியாகாதோ ஆனுல் அதன் அதிஷ்டானமாகிய கயிற்றின் ஞானத்தினுல் நிவர்த்தியாகின்றதோ அங்ஙனமே, (இன்ன காலத்தில் உண்டானதென்று அறியப்படாத) அநாதிகாலந்தொட்டு ஆத்மாவில் தோன்றிய பந்தமும், கருமம் உபாஸனை முதலிய ஞானேதர ஸாதனங்களால் நிவர்த்தியாகாமல் ஸகல பந்தத்திற்கும் அதிஷ்டானமாகிய ஆத்ம தத்துவ ஞானத்தினுலேயே நிவர்த்தியாகுமென்று கூறப்பட்டது.

ஞானமாவது "எப்பொருளெத்தன்மைத் தாயினுமப் பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்றுந் திருக்குறளின்படி பஞ்சாம்சிகமாய் அதாவது அஸ்தி, பாதி, பிரியம், நாமம், ரூபம் ஆகிய ஐந்து அம்சங்களோடு காணப்படும் இவ்வுலகில் திரிகால அபாத்தியமாயுள்ள அஸ்தி பாதிப் பிரிய நாட்டமேயாம். இது தான் அபேத தர்சனம். அகண்டாகாரமுமிதுவேயாம். இத்தகைய ஞானம் வேதாந்தங்களின் மஹா வாக்கிய தாற்பரிய நிர்ணயத்தினுல் ஏற்படும்.

மஹா வாக்யமாவது பிரத்தியகான்மாவுக்குப் பிரஹ்மத்தோடுள்ள அபேதத்தை அபரோக்ஷஞ் செய்விப்பதாம். இவை "ஃஹம்ப்ரஹ்மாஸ்மி, தத்வமஸி, ப்ரஜ்ஞாநம்ப்ரஹ்ம, ஃயமாத்மாப்ரஹ்ம" (நான் பிரஹ்மமாயிருக்கிறேன், அது நீயாகிருய், பிரஜ்ஞானம் பிரஹ்மம், இந்த ஆத்மா பிரஹ்மம்) என நான்காம். இவற்றின் தாற்பரிய நிர்ணயமாவது ஸகலருக்கும் உள்ள பிரசித்த அநுபவத்திற்கு முரணுய வாச்சிய அர்த்தத்தைவிட்டுப்பொருந்துமாருகிய இலக்ஷ்யார்த்தத்தைக் கொள்ளுதலாம். "அது (ஈச்வரன்) நீ (ஜீவன்) ஆகிருய்" என்னும் வாக்கியத்தின் வாச்சியார்த்தத்தில் ஸகலருக்கும் அனுபவ முரண் காணப்படுகின்றது. அற்பஜ்ஞத்வாதி குணங்களுள்ள ஜீவன் ஸர்வஜ்ஞத்வாதி குண விசிஷ்ட ஈச்வரன் எங்ஙனம் ஆவன்? ஒரு காலும் ஆகான். ஆகவே வாச்சியார்த்தத்தை விட்டு இலக்ஷ்யார்த்தத்தைக் கோடல் அவசியம்.

இலக்ஷணை ஜகத் (விட்ட) அஜகத் (விடாத) ஜகத ஜகத் (விட்டு விடாத) லக்ஷணையென மூன்று விதமாம். வாச்சியார்த்தத்தை முற்றும் விட்டு அதன் சம்பந்தியைக் கொள்ளுதல் விட்ட லக்ஷணையாம்; வாச்சி

யார்த்தத்தை விடாமலே, அர்த்த ஸமன்வயத்தின் பொருட்டு அதன் சம்பந்தியாகிய மற்ற பொருள்களைக் கொடல் விடாதலக்ஷணையாம்; வாச்சியத்தில் முரணிய பாகத்தை விட்டு முரண்படாத பாகத்தைக் கொள்ளுதல் விட்டுவிடாத லக்ஷணையாம்; இதற்கே பாகத்தியாக லக்ஷணை யென்றும் மற்றொரு பெயருண்டு. இந்த லக்ஷணையாற்றான் மஹாவாக்கியத்தின் தாற்பரிய நிர்ணயங் கூடும். “ தத்துவமஸி ” என்னும் வாக்கியத்தின்கண் தத்துவம் பதங்களுக்கு ஸாமாநாதிகரணியத்தால் (ஒரு வேற்றுமையால்) அவற்றின் அர்த்தங்களுக்கு அபேதமே சித்திக்கின்றது. எங்ஙனமெனின் தத்பத வாச்சியார்த்தத்தின்கண் மாயை (காரண உபாதி)யாகிய ஏகதேசத்தை விடுதலால் மிஞ்சிய சைதன்ய பாகத்தோடு துவம்பத வாச்சியார்த்தத்தின்கண் அவித்தை (காரிய உபாதி)யாகிய ஏகதேசத்தை விடுதலால் மிஞ்சிய சைதன்யத்திற்கு அபேதம் சித்திக்கின்றது.

இங்ஙனம், எப்பொழுது மஹாவாக்கிய தாற்பரிய நிச்சயத்தினால் ஜகஜீவ பரபேதத்தோற்றத்திற்குக் காரணமாகிய திரிகுணாத்மகமாய மாயை அவித்தைகள் யொழிகின்றனவோ அப்பொழுதே நாம ரூபப் பிரபஞ்ச ஸத்தியத் தோற்றம் நிவர்த்தியாய் அநுகூலப் பிரதிகூல விருத்திகள் ஒழிகின்றன. இதனால் ராகத்துவேஷங்களும் இதனால் நல்வினை தீவினைகளும் இதனால் ஜனனமரணங்களும் நிவர்த்தியாகின்றன.

“ தஜெவ விஜ்ஞாநஜ்ஞ ஹ்ருத்³ய॰ஜெக்³ரந்தி²: வ॰ஸா
விஷ்யெதஜயநாய-நாவஸ்து க்ஷ்ரூத³: க்ஷ்ரெதந-ஜ்ஞாநாஜெவ:
ஹி ஸ॰ஸாரவிநாஶாஜெநவ க³ஷுணா-வாக்யஸ்ய வஹ்நி
வஷ²ஜ்ஞாநம் விநா ஜெகெக்ஷாநவிஸ்த்ருக்-ஸவிரோதயா
க³ஷு நாவிஷ்யா॰ விநிவத்யெஸ விஷ்யாzவிஷ்யா॰ நிஹ॰

ஒத்யுவதெஜஸ்திரஸம்யவக” அந்தப் பிரத்தியக பின்ன பரமாத்மாவினையே யறிந்து ஜனன மரண ரூப மிருத்யுவைக் கடக்கின்றான். மோக்ஷமடைவதற்கு ஞானத்தை விட வேறு வழி கிடையாது. நித்திய ஸித்தமான மோக்ஷம் கர்மத்தாற் சித்திக்காது. ஸம்ஸாரத்தினுடைய நாசமானது ஞானத்தாலேயே உண்டாகின்றது. கர்மத்தாலன்று. சமையலுக்கு நெருப்புப் போல் முக்திக்கு ஞானம் இன்றியமையாதது. (ஞானமின்றி மோக்ஷமுண்டாகாது) பந்தத்திற்குக் கர்மம் அவிரோதியா யிருத்தலின் அஞ்ஞானத்தைப் போக்காது. பிரகாசம் இருளை நிவர்த்திப்பது போல் தத்துவ ஞானமே அஞ்ஞான காரிய ஸம்ஸாரத்தையும் அஞ்ஞானத்தையும் நாசஞ்செய்யும்” என்னும் சுருதிப் பிரமாணங்கள் ஈண்டறிதற் பாலனவாம். (S-13½)

(கூ) அதி வருணாச்ரமி யிலக்கண மறைதல்.

(அ - கை.) மேற்கூறியவாறு அஞ்ஞான நாசமானது குருவின் உபதேசத்தாலன்றி கூடாது. “ஶாஂஸ்வராநாூஹ ஊரசெஜவ வாூஂஷாஂ ஈசெஅதவாஸநா” என்னும் அவதூத கீதை யிதற்குப் பிரமாணமாம். ஞானத்தை யளிப்பவனே குருவாவன். அஞ்ஞானத்தை நிவர்த்திப்பவன் என்பது “குரு” வென்பதன் பொருளாம். இத்தகைய குரு, உத்தம, மத்திம அதமபேதங்களால் பலதிறப்படுவர், இவ்வொவ்வொரு வகையிலும் பிரஹ்மசாரி, கிரகஸ்தன், வானபிரஸ்தன், யதி, அதி வர்ணாச்ரமியென ஐவகைப்படும். இவர்களுக்குள் உத்தமோத்தம குருஅதிவர்ணாச்ரமியேயாம். இத்தகைய உத்தமோத்தம மோசகப்பிரதனை அதிவர்ணாச்சிரமியின் இலக்ஷணம் ஈண்டுகூறப்படுகின்றது.

யஸ்மின் ஶரீரே யாதி ஹ்யாத்மா விஶிஷ்டம் ஸர்வஸாக்ஷிணி ॥ 14
பாரமார்த்திகவிஜ்ஞானம் ஸம்பாதனம் ஸ்வயம் ப்ரபோ ।
பரதத்த்வம் விஜாநாதி ஸோதிவர்ணாஶ்ரமீ பவேத் ॥ 15

யோவஸ்தாத்ரயநிர்முக்தம் அவஸ்தாஸாக்ஷிணம் ஸதா ।
மஹாதேவம் விஜாநாதி ஸோதி வர்ணாஶ்ரமீ பவேத் ॥ 16

யோ வேதாந்தமஹாவாக்யஶ்ரவணேநைவ கேவலம் ।
ஆத்மாநமீஶ்வரம் வேத ஸோதி வர்ணாஶ்ரமீ பவேத் ॥ 17

வர்ணாஶ்ரமாதயோ தேஹே மாயயா பரிகல்பிதா: ।
நாத்மநோ போதரூபஸ்ய மம தே ஸந்தி ஸர்வதா ॥ 18

இதி யோ வேத வேதாந்தை: ஸோதிவர்ணாஶ்ரமீ பவேத் ।
ஆதித்யஸந்நிதௌ லோகஶ்சேஷ்டதே ஸ்வயமேவ ஹி ॥ 19

ததா மத்ஸந்நிதாவேவ சேஷ்டதே ஸ்வயமேவ து ।
இதி யோ வேத வேதாந்தைஸ்ஸோதிவர்ணாஶ்ரமீ பவேத் ॥

ஸுவர்ணே ஹாரகேயூரகடகஸ்வஸ்திகாதய: ।
கல்பிதா மாயயா தத்வஜ்ஜகந்மய்யேவ ஸர்வதா ॥ 21

இதி யோ வேத வேதாந்தை: ஸோதிவர்ணாஶ்ரமீ பவேத் ।
ஶுக்திகாயாம் யதா தாரம் கல்பிதம் மாயயா ததா ॥ 22

மஹதாதி ஜகந்மாயாமயம் மய்யேவ கல்பிதம் ।
இதி யோ வேத வேதாந்தைஸ்ஸோதிவர்ணாஶ்ரமீ பவேத் ॥

சண்டாலதேஹே பஶ்வாதி ஶரீரே ப்ரஹ்மவிக்ரஹே ।

சைதந்யஸ்ய தாரதம்யேந ஸ்திதஸ்ய புருஷோத்தமே ||
வ்யோமவத் ஸர்வதா வ்யாப்த: ஸர்வஸம்பந்தவர்ஜித: |
ஸுகரூபோ மஹாதேவ: ஸ்தித: ஸோऽஹம் பராத்பர: ||
இதி யோ வேத வேதாந்தை: ஸோऽதிவர்ணாஶ்ரமீ பவேத் |
ஸ்படிகஸ்யேவ யதா வர்ணோபாதிக: || 26

ததா விஜ்ஞாநவிஸ்தாரம் ஜகத்பேதாதி ஸாக்ஷிணம் |
இதி யோ வேத வேதாந்தை: ஸோऽதிவர்ணாஶ்ரமீ பவேத் ||

யதா ஸ்வப்ந ப்ரபஞ்சோऽயம் மயி மாயா விஜ்ரும்பித: |
ததா ஜாக்ரத் ப்ரபஞ்சோऽபி பரமாயா விஜ்ரும்பித: ||

இதி யோ வேத வேதாந்தை: ஸோऽதிவர்ணாஶ்ரமீ பவேத் |
யஸ்ய வர்ணாஶ்ரமாசார: கலித: ஸ்வாத்மதர்ஶநாத் ||

ஸ வர்ணாநாஶ்ரமாந் ஸர்வாநதீத்ய ஸ்வாத்மநி ஸ்தித: |
யோऽதீத்ய ஸ்வாஶ்ரமாந் வர்ணாநாத்மந்யேவ ஸ்தித: புமாந் ||

ஸோऽதிவர்ணாஶ்ரமீ ப்ரோக்த: ஸர்வவேதார்தவேதிபி: |

(ப - ரை.) ய: - எந்த உத்தமபுருஷன், ஶரீரேந்த்ரியாதிப்யோ விலக்ஷணம் - அஞ்ஞானகாரியங்களான சரீரம், மெய் வாய்கண்செவிமூக்கு முதலிய இந்திரியங்கள், முதலியவைகளினின்றும் பிறிவுபட்டதாகவும், ஸர்வஸாக்ஷிணம் - எல்லா நாமரூபங்களுக்கும் (அவைகளுடன் ஸம்பந்தப் படாத) பிரகாசகமான ஸாக்ஷியாகவும், பாரமார்திக விஜ்ஞாநம் - மாயை அவத்தைகளாகிற உபாதிகளின்

ஸம்பந்தமற்ற யதார்த்த அறிவாகவும், ஸுகாத்மாநம் - ஆநந்தகனவியாபக ஆத்மாவாகவும், ஸ்வயம் ப்ரபம் - தானாகவே பிரகாசித்துக்கொண்டிருப்பதாகவும் இருக்கிற, பரதத்வம் - வாஸ்தவமாகவுள்ள மேலான ஆத்மாவை, விஜாநாதி - நன்றாய்த் தெரிந்து கொண்டவனோ, ஸோऽதிவர்ணாஶ்ரமீ பவேத் - அந்த மகா புருஷன் சரீரஸம்பந்தமான வர்ணாச்சிரம தர்மங்களைக் கடந்தவனாக ஆகிறான். (15)

யஃ - எந்த மகாபுருஷன், அவஸ்தாத்ரயநிர்முக்தம் - ஜாக்கிர ஸ்வபநஸுஷுப்திகளாகிற அவஸ்தைகளினின்றும் விடுபட்டதாயும், அவஸ்தாஸாக்ஷிணம் ஸதா - எப்பொழுதும் ஜாக்கிராதி அவஸ்தைகளில் ஸம்பந்தப்படாமல் அவைகளை விளக்குவதாயும் உள்ள, மஹாதேவம் விஜாநாதி - மகா பிரகாச ஆத்மஸ்வரூபத்தை அனுபவமாகத் தெரிந்துகொண்டிருக்கிறானோ, ஸோऽதிவர்ணாஶ்ரமீ பவேத் - அந்த உத்தமன் வர்ணாச்சிரமதர்மங்களற்றவனாகிறான். (16)

ஹேகேஶவ - ஹேகேசியென்ற அசுரனை வதம் செய்தவனே! யஃ - எந்த மகாபுருஷன், வேதாந்தமஹாவாக்யஶ்ரவணேநைவ - உபநிஷத்துக்களிலுள்ள, மகா வாக்கியங்களினுடைய அர்த்த நிச்சயமாகிற ஜீவப் பிரஹ்ம ஐக்கியமாகிற ஏகத்துவத்தைக் குருமுகமாகக்கேட்டுத் தெரிந்துகொள்வதினாலே, ஸூத்ராநீஶ்வரம் வேத - தன்னை ஸர்வப்பிராணிகளின் இருதயத்திலிருந்து நியமிக்கிற ஈசுவரனாகத் தெரிந்துகொண்டவனோ, ஸோऽதிவர்ணாஶ்ரமீ பவேத் - அந்த உத்தமன் வர்ணாச்சிரமங்களைத் தாண்டினவனாகிறான். (17)

ஜ - எனக்கு, தெஹெ - சரீரத்தில், வணூ்ரமூ ஜாதயஃ. பிராஹ்மணன்முதலானவர்ணங்களும்பிரம்மசாரியம்முதலான ஆசிரமங்களுமான தர்ம்மங்களும் ஸவடிா ஜாயயா வரிகஜ்பிதாஃ - எப்பொழுதும் அஞ்ஞானத்தினுல் கற்பிக்கப்பட்டிருக்கின்றன, வொயாஉவஸ்ய ஞக்ஷ நொஜ - பூர்ணனந்த கனமாயிருக்கிற ஆத்மாவான எனக்கு, ஸவடிாநஸஙி - எப்பொழுது மில்லேவேயில்லே. ஐதியொவெடவெடாவெஃ - என்று எந்த உத்தமஞானி உபநிஷத்து முதலிய சாஸ்திரங்களினுல் தெரிந்துகொண்டவனே. ஸொஅிவணாமூ ஜீஹவெஸ - அந்த மகா புருஷன் வர்ணுசிரமங்களேக் கடந்தவனுகிறுன். (18½)

ஜொகஃ - பார்க்கப்படுவதான நாம்ரூபப் பிரபஞ்சமானது, ஞூிதஸஙியஎ - ஸூர்யனுடைய முன்னுல், ஸ்வய ஜேவ வெஷதெ ஹி - தானுகவே காரியங்களேச்செய்கிறதில்லேயா? தயா - அவ்விதமே, ஜஜ்ஞியாவெவ - வியாபகப் பிரகாச ஆத்மாவாகிற என் முன்னுலேயே, ஸ்வயஜேவவெஷதெ - அவித்தியாகாரிய நாம ரூபப் பிரபஞ்சங்கள் தானுகவே காரியாகாரியங்களேச் செய்கின்றன. தூ - நிச்சயம். ஐதியொவெடவெடாவெஃ - என்று எந்த மகான் வேதாந்த சாஸ்திரங்களினுல் தெரிந்துகொண்டானே, ஸொஅிவணாமூ ஜீஹ ஒவஸ - அந்த மகா புருஷன் வர்ணுச்ரமங்களேக் கடந்தவனுக ஆகிறுன். (20)

[illegible] - எப்படி தங்கத்தில் மாலை, தோள்வளை, காப்பு, கங்கணம், ஒட்டியாணம் முதலான ஆபரணங்கள், [illegible] ஸ்வர்ணத்தின் விகாரத்தினால் கற்பிக்கப்பட்டவைகளோ; [illegible] - அப்படியே, தோன்றுவதான நாம ரூபப் பிரபஞ்சமும், [illegible] - எப்பொழுதும் அஞ்ஞான ரூப மனோவிருத்தியினாலே பிரகாச ஆத்மாவாகிற என்னிடத்திலேயே கற்பிக்கப்பட்டவைகள். [illegible] - என்று எந்த மகா புருஷன் வேதாந்த சாஸ்திரங்களினால் நிச்சயமாகத் தெரிந்துகொண்டானோ, [illegible] - அந்த மகா ஸித்த புருஷனே வர்ணாசிரம தர்மங்களைத் தாண்டினவனாக யிருக்கிறான்.

[illegible] - இப்பியில் எவ்விதம் வெள்ளியானது, [illegible] - அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்டதோ, [illegible] - அவ்விதமே, [illegible] - அஞ்ஞான காரியமாகிய நாமரூபப் பிரபஞ்சமும், வியாபக ஆத்மாவாயிருக்கிற என்னிடத்திலேயே கற்பிக்கப்பட்டவைகள். [illegible] என்று எந்த மகாதீர புருஷன் வேதாந்த சாஸ்திரங்களினால் அநுபவ ரூபமாகத் தெரிந்துகொண்டானோ, [illegible] - அந்த மகா தீர புருஷனே வர்ணாசிரம தர்மங்களைத் தாண்டினவனாகிறான்.

[illegible] புருஷர்களுக்குள் உத்தமனே. [illegible] - நிக்ருஷ்ட சரீரத்திலும், [illegible]

ஶரீரே - ஓரறிவுடைய நாற்கால் ஜந்துக்கள் முதல் பக்ஷி, புழுக்கள், வரையிலுள்ள சரீரங்களிலும், ஸமுஹ விப்ரதேஹ - உயர்ந்த குலத்தோனென்று சொல்லப் படும் பிராம்மணன் முதலிய சரீரத்திலும், அல்லது பிரம்மதேவன் முதலிய தேவ சரீரங்களிலும், ஊடேந்த்ரு ஷு - இவைகளன்றி ஸ்தாவரங்களாயுள்ள மரம் செடி கல் மண் முதலிய சரீரங்களிலும், தாரதம்யேநவஸ்தி தேஷு - தாரதம பாவங்களாக (மேலானவைகளாக வும் கீழானவைகளாக)வுமிருக்கிறவைகளில், வ்யோமவ த்ஸர்வவ்யாபீ - ஆகாசத்தைப்போல் எங்கும் வியா பித்திருப்பதாயும், ஸர்வஸம்பந்தவர்ஜிதஃ - எல்லா நாம ரூப உபாதிகளோடு ஸம்பந்தமில்லாததாயும், பரா ம்ருதஃ - உத்பத்தி நாசங்களற்ற மேலான அமிர்தமாயும், ஸகலாபேதஃ - நாமரூபங்களால் ஏற்பட்டுள்ள பிரிவுத வில்லாத பூர்ணரூபமாயும், ஸ்வப்ரகாசஃ - மகாப்பிரகாச மாயும், ஸ்திதஸோஹம் இதி - இருக்கிறவன் நான் தான் என்று, யோவேத வேதாந்தைஃ - எந்த பரிபூர்ணபாவ த்தை அடைந்த புருஷன் வேதாந்த சாஸ்திரங்களினுல் அனுபவரூபமாகத் தெரிந்துகொண்டவனே, ஸோதி வர்ணாஶ்ரமாதிகஃ - அந்த மகாபுருஷன் வர்ணுசிரம தர்மங்களைத் தாண்டினவனுக இருக்கிறுன்.

விநஷ்டதிக்ப்ரமஸ்யாபி - திசைகள் தெரியாதவிடத்தில் தெரிந்தவனுல், திசைகள் அதாவது கிழக்கு முதலிய திக்குகளைக் காண்பிக்கப்பட்டமையால் தெரியாமை யானது நிவர்த்தியடைந்தாலும், யதாபூர்வம்விநாதி

ஷிக - முன்போலவே வேறொரு ஸமயத்தில் அந்த விடத்தில் வரும்போது முன்னிருந்த பிரமம் (மயக்கம்) வாஸனா ரூபமாய் எங்ஙனம் தோன்றுகிறதோ, தயா - அவ் விதமே, விஜ்ஞானவிஷ்வஸ்தம் ஜகத் - பரிபூர்ணாத்ம ஞானத்தினால் நாசத்தை அடைந்த நாமரூபங்களாகிற ஜகத்தானது, பாஸதே - எனக்குப் பூர்வவாஸனையினால் தோன்றுகிறது. தத்வதஹ - அப்படிப்பட்ட நாம ரூபமுடைய ஜகத்தென்று ஒன்று உண்மையில் இல்லை. இதிவேதவேதாந்தைஹ - என்று எந்த மகான் வேதாந்தங்களினால் நிச்சய ஞானத்தை அடைந்திருக்கிறானோ, ஸாதிவர்ணாச்ரமீஹவேத் - அந்த மகாத்மாவே வர்ணாச்சிரமங்களைக் கடந்தவனாக இருக்கிறான்.

யதா - எவ்விதம், ஸ்வப்னஸ்வப்னஜனஹ - மனத்தினால் கற்பிக்கப்பட்ட ஸ்வப்னத்தில் தோற்றுவதான இந்த நாம ரூபப் பிரபஞ்சங்கள், மயி மாயா விஜ்ரும்பிதஹ - என்னிடத்தில் அஞ்ஞானத்தினால் இருக்கிறவைகள்போல் விகாஸத்தை அடைகின்றனவோ, தயா - அவ்விதமே, ஜாக்ரஜ்ஜ ப்ரபஞ்சோ(அ)பி - விவகாரத்திற்கு யோக்யம் போல் காணப்படுகிற நாம ரூபப் பிரபஞ்சமும், மமமாயாவிஜ்ரும்பிதஹ - உபாதியில்லாத சுத்தப் பிரஹ்மத்தில் மாயையினால் கற்பிதமாகத் தோற்றப்படுகின்றது. இதி வேதவேதாந்தைஹ - என்று எந்த உத்தம ஞானி வேதாந்த சாஸ்திரங்களினால் நிச்சய ஞானத்தை அடைந்திருக்கிறானோ, ஸாதிவர்ணாச்ரமீஹவேத் - அந்த

மகாதீர புருஷனே வர்ணுசிரம தர்மங்களைத் தாண்டி-
னவனாக இருக்கிறான்.

யஸ்ய - பரிபூர்ணுத்ம ஞான ஸித்தியை யடைந்த மகானுக்கு, ஸ்வாத்மரூபாநுஸந்தாநாத் - நிருபாதிகப் பிரகாச ஆத்மாவாகத் தன்னை அறிந்துகொண்டதனால், வர்ணாஶ்ரமாசாரா: தேஹமாத்ரத: - சரீர ஸம்பந்தங்களான், பிராம்மணன் முதலான வர்ணங்களுடையவும், பிரம்மசரியம் முதலான ஆசிரமங்களுடையவுமான தர்மங்கள் தானுகவே நழுவி விடுகின்றனவோ, ஸ: - அந்த மகான், ஸர்வாஶ்ரமாந் ஸர்வாநதீத்ய ஸ்வாத்மநிஷ்டித: - ஸ்தூல சரீர ஸம்பந்தங்களான வர்ணுச்சிரம தர்மங்களைக் கடந்து அவைகளில் சம்பந்தப்படாத பூர்ணப் பிரகாச ஆத்மாவினிடத்தில் இருக்கிறவனுவன். ய: புமாந் - எந்த மகாபுருஷன், ஸ்வாஶ்ரமாந் வர்ணாந் அதீத்ய ஸ்வாத்மந்யேவ ஸ்தித: - அஞ்ஞானத்தினுல் தோன்றிய சரீர ஸம்பந்தமாயுள்ள வர்ணுச்சிரம தர்மங்களைக் கடந்து ஸ்வப்பிரகாச பூர்ணுத்மாவிலேயே தானுகயிருக்கிருனே, ஸ: - அந்த மகா உத்தம ஞான புருஷனே, ஸர்வவேதாந்தவேதிபி: - ஸகல வேத சாஸ்திரங்களினுடைய ரகசியார்த்தங்களைத் தெரிந்த மகா புருஷர்களால் அதி வர்ணாஶ்ரமீ ப்ரோக்த: - வர்ணுச்சிரம தர்மங்களைக் கடந்திருக்கிறவனென்று சொல்லப்படுகிறுன். (14-30)

(தா - ம்.) எந்த உத்தம புருஷன் அஞ்ஞான காரியங்களான சரீரம், மெய், வாய், கண், செவி, மூக்கு முதலிய இந்திரியங்களாகிற இவைகளினின்றும் பிரிவுபட்டதாகவும், எல்லர்

நாமரூபங்களுக்கும் ஸம்பந்தப்படாத பிரகாசகமான ஸாக்ஷியாகவும், மாயை அவித்தைகளாகிற உபாதிகளின் ஸம்பந்தமற்ற யதார்த்த அறிவாகவும், ஆனந்தகனவியாபக ஆத்மாவாகவும், தானகவே பிரகாசித்துக்கொண் டிருப்பதாகவுமிருக்கிற வாஸ்தவமாகவுள்ள (யதார்த்த) ஆத்மாவை நன்றாகத் தெரிந்துகொண்டவனே அந்த மகாபுருஷன் சரீர ஸம்பந்தமான வர்ணுச்சிரம தர்மங்களைக் கடந்தவனக ஆகிறான்.

எந்த மகாபுருஷன் ஜாக்கிர ஸ்வப்ந ஸுஷுப்திகளாகிற அவஸ்தைகளினின்று விடுபட்டதாகவும் அவைகளை விளக்குவதாயும் உள்ள மகாப் பிரகாச ஆத்மஸ்வரூபத்தை அனுபவமாகத் தெரிந்திருக்கிறானே அந்த உத்தமன், வர்ணுச்சிரம தர்மங்களில்லா தவனுகிறான்.

ஹே ! கேசவனே ! எந்த மகாபுருஷன் உபநிஷத்துக்களிலுள்ள மகாவாக்யங்களின் அர்த்த நிச்சயமாகிற ஜீவப் பிரஹ்ம ஐக்கியமாகிய ஏகத்துவத்தை குருமுகமாகக் கேட்டுத் தெரிந்துகொள்வதனலே, தன்னை ஸர்வப் பிராணிகளின் ஹிருதயத்திலிருந்து நியமிக்கிற ஈசுவரனுகத் தெரிந்துகொண்டவனே அந்த உத்தமன் வர்ணுச்சிரம தர்மங்களைத் தாண்டினவனுகிறான்.

எனக்குப் பிராம்மணன் முதலான வர்ணங்களும், பிரம்மசரிய முதலான ஆசிரமங்களுமான தர்மங்களும் எப்பொழுதும் அஞ்ஞானத்தினுல் சரீரத்தில் இருக்கின்றன; பூர்ணனந்த கனமாக விருக்கிற ஆத்மாவாகிற என்னிடத்தில் அவைகள் என்றும் இல்லவேயில்லை. என்று எந்த உத்தமஞானி உபநிஷத்து முதலான சாஸ்திரங்களினுல் தெரிந்துகொண்டவனே

அந்த மகாபுருஷனே வர்ணாச்சிரம தர்மங்களைக் கடந்தவனாகிறான்.

நாம ரூபப் பிரபஞ்சமாகப் பார்க்கப்படும் இவ்வுலகம் ஸூரியன் முன்னால், தானாகவே எங்ஙனம் காரியங்களைச் செய்கிறதோ அவ்விதமே வியாபகப் பிரகாச ஆத்மாவாகிற என் முன்னால் அவித்தியாகாரிய நாமரூபப் பிரபஞ்சங்கள் தானாகக் காரியங்களைச் செய்கின்றனவென்று எவன் வேதாந்த சாஸ்திரங்களினால் தெரிந்துகொண்டானோ அந்த மகா புருஷனே வர்ணாச்சிரம தர்மங்களைக் கடந்தவனாக ஆகிறான்.

தங்கத்தில் மாலை தோள்வளை காப்பு கங்கணம் ஒட்டியாணம் முதலான ஆபரணங்கள் மனத்தின் விகாரத்தினால் எங்ஙனம் கற்பிக்கப்பட்டவைகளோ அங்ஙனமே, தோன்றுவதான நாமரூபப் பிரபஞ்சமானது, எப்பொழுதும் அஞ்ஞான ரூப மனோவிருத்தியினால் பிரகாச ஆத்மாவாகிற என்னிடத்தில் கற்பிக்கப்பட்டவைகள். என்று எந்த மகாபுருஷன் வேதாந்த சாஸ்திரங்களினால் நிச்சயமாகத் தெரிந்துகொண்டானோ அந்த மகா ஸித்த புருஷனே வர்ணாச்சிரம தர்மங்களைத் தாண்டினவனாக இருக்கிறான்.

இப்பியில் வெள்ளியானது எவ்விதம் அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்டதோ அவ்விதமே அஞ்ஞானகாரிய நாமரூபப் பிரபஞ்சங்களும் வியாபக ஆத்மாவாயிருக்கிற என்னிடத்திலேயே கற்பிக்கப்பட்டவைகள் என்று எந்த மகா தீர புருஷன் வேதாந்த சாஸ்திரங்களினால் அனுபவரூபமாகத் தெரிந்து கொண்டானோ அவனே வர்ணாச்சிரமதர்மங்களைத் தாண்டினவனாக ஆகிறான்.

ஹே புருஷ சிரேஷ்டனே! நிக்ருஷ்ட சரீரத்திலும் ஓரறிவுடைய நாலுகால் ஜந்துக்கள் முதல் பக்ஷி புழுக்கள்

வரையிலுள்ள சரீரங்களிலும், உயர்ந்த குலத்தோனென்று சொல்லப்பட்டவர்களான பிராம்மணன் முதலிய சரீரத்திலும் அல்லது பிரம்மதேவன் முதலிய தேவசரீரங்களிலும் இவைகள் தவிர ஸ்தாவரங்களாயுள்ள மரங்கொடி செடி கல் மண் முதலிய சரீரங்களிலும், தரதமபாவங்களாக (மேலானவைகளாகவும் கீழானவைகளாக)வு மிருக்கிறவைகளில் ஆகாசத்தைப் போல் எங்கும் வியாபித்திருப்பதாயும் எல்லா நாமரூப உபாதிகளின் ஸம்பந்தமில்லாததாயும், உத்பத்தி நாசங்களற்ற மேலான அமிர்தமாயும், நாமரூபங்களாலேற்பட்டுள்ள பிரிவுதலில்லாத பூர்ணரூபமாயும்,மகாப்பிரகாசமாயுமிருக்கிற அந்த பூர்ணாத்மாவாக இருக்கிறவன் நான் என்று எந்த புருஷன் வேதாந்தசாஸ்திரங்களினால் அனுபவரூபமாகத் தெரிந்து கொண்டவனோ அந்த மகாபுருஷன் வர்ணாச்சிரம தர்மங்களைத் தாண்டினவனாக இருக்கிறான்.

திசைகள் தெரியாதவிடத்தில் தெரிந்தவனால் காண்பிக்கப்பட்டதனால் தெரியாமையானது நிவர்த்தி யடைந்தாலுங்கூட முன்போல், வேறொரு ஸமயத்தில் அந்த விடத்தில் வரும்போது முன் பிரமம் உண்டான இடமென்று தோன்றுகிறதோ, அங்ஙனமே பரிபூர்ண ஆத்மஞானத்தினால் நாசமடைந்த நாமரூப ஜகத்தானது எனக்குப் பூர்வவாஸனையினால் தோன்றுகிறது; அப்படிப்பட்ட நாமரூபமுடைய ஜகத்தென்பது இல்லை யென்று எந்த மகானுக்கு வேதாந்தங்களினால் நிச்சயஞான மேற்பட்டிருக்கிறதோ அந்த மகாத்மாவே வர்ணாசிரமங்களைக் கடந்தவனா யிருக்கிறான்.

எவ்விதம் இந்த மனத்தினால் கற்பித்த ஸ்வப்னத்தில் தோன்றுவதான நாமரூபப் பிரபஞ்சங்கள் என்னிடத்தில்

அஞ்ஞானத்தினுல் இருக்கிறவைகள் போல் விகாஸத்தையடைகின்றனவோ, அவ்விதமே வியவகாரத்திற்கு யோக்கியம்போல் காணப்படுவதான நாமரூபப் பிரபஞ்சமும் உபாதியில்லாத சுத்தப் பிரஹ்மத்தில் மாயையினுல் கற்பனையாகத் தோன்றுகின்றது. என்று எந்த உத்தமன் வேதாந்த சாஸ்திரங்களினுல் நிச்சயஞானத்தை அடைந்திருக்கிருனே அந்த மகாதீர புருஷனே வர்ணுசிரம தர்மங்களைத் தாண்டியவனுயிருக்கிருன்.

பரிபூர்ண ஆத்மஞான ஸித்தியடைந்த எந்த மகானுக்கு, நிருபாதிகப் பிரகாச ஆத்மாவாகத் தன்னை அறிந்துகொண்டதனுல், சரீர ஸம்பந்தங்களான பிராஹ்மணன் முதலான வர்ணங்களுடையவும், பிரம்மசரியமுதலான ஆசிரமங்களினுடையவுமான தர்மங்கள் யாவும், தானுகவே நழுவுகின்றனவோ, எந்த மகாபுருஷன் அஞ்ஞானத்தினுல் தோன்றிய சரீரஸம்பந்தமாயுள்ள வர்ணுசிரம தர்மங்களைக்கடந்து ஸ்வப்பிரகாச பரிபூர்ண ஆத்மாவில் தானுகவேயிருக்கிருனே, அம்மகானை ஸகல வேதசாஸ்திர ரகசியார்த்தங்களைத் தெரிந்த மகா புருஷர்கள் வர்ணுசிரம தர்மங்களைக் கடந்திருப்பவனென்று சொல்லுகிருர்கள். (14 - 30)

(ஸி - ம்.) "ப்ராஹ்மண்யம் க்ஷாத்ரமாதிஸ்ச வர்ணாஸ்ரமா ரூப்யஜாதய: ஸ்தூலதேஹகதா ஹ்யேதே ஸ்தூலாத்³ ஹ்யஸ்ய நைவ ஹி। பிராம்மணன் க்ஷத்திரியன் முதலிய வர்ணங்களும் பிரம்மசரியம் முதலான ஆசிரமங்களும் அவைகளால் ஏற்பட்டுள்ள பெயர் ஜாதி அழகு முதலானவைகளும் அஞ்ஞான காரியமான ஸ்தூல சரீரத்தின் தர்மங்களாகும். அவைகளைக்காட்டிலும் வேறுபட்டவனும் நித்திய சுத்த

புத்த முத்த வியாபக ஸ்வரூபமாயுமிருக்கிற எனக்கு அவை களின் ஸம்பந்தங்க ளொன்றுமில்லை" யென்றபடி பூர்ணப் பிரகாச ஆத்மஞான ஸித்தியையடைந்த மகானுபாவனுக்கு அவித்தியாகார்ய சரீராதிகளின் ஸ்தூல தர்மங்களான வர்ணு சிரம தர்மங்கள் காலத்திரயத்திலும் கிடையாதென்பது சித்தாந்தமாம். வெகு ஜன்மங்களில் செய்த உத்தம புண்ணியவிசேஷங்களாலும், பூர்ண போதமுள்ள மகானுபாவ னுடைய கிருபா விசேஷத்தாலும், யாருக்கு ஸந்தேக விபரீத பாவங்களில்லாமல் பரிபூர்ண ஆத்ம ஸாக்ஷாத்கார ஞானம் உண்டாகிறதோ அந்த மகாபுருஷனுக்கு அந்த ஸமயத்தி லேயே, அஞ்ஞானம், அதன் காரியங்களான நாமரூப சரீரா திப் பிரபஞ்சங்கள் அவைகளிலுள்ளடங்கிய வர்ணுசிரம தர் மங்கள் முதலான யாவும் தானகவே நழுவி விடுகின்றன. அந்த மகாத்மஞான புருஷனைத்தான் அதிவர்ணுசிரமியென்று ஸாதுக்கள் சொல்லுகிறார்கள். (14 - 30)

(எ) அதிவருணுச்ரமி - யநுபவமினைத்தேனல்.

(அ - கை) "ஜலஸ்ய சலநாதேவ சஞ்சலத்வம் யதா ரவே: ந நிஜம் நிஜவத்பாதி அஹங்காரண ஜ்ரும்பணாத்|

தடாகம்முதலியவைகளிலுள்ளஜலத்தினுடைய சலனத்தினல் அதில் பிரதிபலித்த சூரியப் பிரதிபிம்பத்திற்கும் அசைவு தோன்றுகிறது. ஆனல் பிம்பமாயுள்ள சூரியன் அலைகிற தில்லை. அவ்விதமே அந்தக்கரண ரூப மனேவிருத்தியின் விக்ஷேபவாஸனையினல் தோற்றல் மாத்திரமாகவுள்ள சரீரா திப் பிரபஞ்சங்கள் ஸத்தியம்போல் தோற்றுகின்றன. இவ் விதம் தோற்றுவது அஞ்ஞானத்தினலே யன்றி ஸத்தியமாக யில்லை யென்று அனுபவரூபமாகத் தெரிந்துகொண்டவனே

உத்தமஞான நிஷ்டையுடைய அதிவர்ணாச்ரமி யென்று கூறப்படுகின்றது.”

தஸ்மாத³ஜ்ஞானஜாதாஸ்து வர்ணாச்ரமாஸ்ததா ப⁴வ ।
ஆத்மன்யாரோபிதா ஸர்வே ஸ்வாத்மவேதி³னா ॥
ந ஸந்தி நிஷ்கலே ஸத்யே ஸ்வப்ரகாசே ஸுகா²த்மனி ।
ஆத்மவிஜ்ஞானினோ மோக்ஷஸ் ததா²ஜ்ஞானினாம் ந ॥ 32
ஆத்மவிஜ்ஞானினாம் நிஷ்டா²ஸ்வ்ரூபேண ஸம்ஸ்தி²தா ।
ஸர்வே ச தத்ரைவ ஜானந்தி ஸதா ॥
ந ஸம்ஸாரம் வக்ஷ்யாமி நிஷ்டா²ஸ்வரூபம் ஆத்மவிஜ்ஞானினாம் ஸதா ।
ஸ்ருஷ்டம் ஸர்வம் ஸ்வஸ்வவிஷயம் ஏவ கேசவ ॥
ஸர்வோபாதி³ம் ஸதா நிராகாரம் ஞானம் ।
நித்யம் ஸர்வம் நிராதா⁴ரம் ஸம்வித்³ரூபம் ஸர்வாத்மகம் ॥
யோ விஜானாதி வேதா³ந்தை: ஸாக்ஷாத் ஸம்வித்தமாத்மனா ।
ஸோ(அ)திவர்ணாச்ரமீ ஞானீ ஸர்வபா⁴வாத்மகோ: ॥ 36

(ப - ரை.) ஹே கேசவ - கேசவனே! தஸ்மாத் - ஆகையி ஞலே, அஜ்ஞானஜாதா வர்ணாச்ரமா:-அஞ்ஞானத்தினல் வந்ததான பௌதிக சரீரங்களின் பிராம்மணன் முதலிய வர்ணங்களும் ஆசிரமங்களும், ஆத்மன்யாரோபிதா ஸர்வே - ஆத்மா அனாத்மாக்களின் லக்ஷணந் தெரியாமையாகிற மயக்கத்தினல் பூர்ணப்பிரகாச ஆத்மாவில் கற்பிக்கப்பட்டவைகளே. ஸ்வாத்மவேதி³னா - வாஸ்தவமாயுள்ள பிரகாச ஆத்மாவை யதார்த்தமாகத் தெரிந்துகொண்டவனலே அந்த கற்பனை (நாமரூப வர்ணாசிரமங்)கள் இல்லை. ஹே ஜனார்த்தன - உண்டாகிற அஞ்ஞான காரியங்களை நாசஞ்செய்பவனே!

சுத்தவிஜ்ஞாநிநாம் - யதார்த்த ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட ஞானிகளுக்கு, நவிதிநநிஷேதயஸ்ய - விதி விலக்குகளும், ஸஜ்யாஜ்யகல்பநா - இது தள்ளவேண்டியது இது தள்ளவேண்டாதது என்ற கற்பனையுமில்லை, ததா ஸம்ஸ்ருதிரேவ - அவ்விதமேதோன்றி மறைவதான் எதுவுமில்லை. ஹே ஸம்வர்ஜேக்ஷண - ஓ. தாமரைக்கண்ணனே! ஈத்ருஶீம் சுத்தவிஜ்ஞாநிநாம் நிஷ்டாம். இப்படிப்பட்ட பூர்ண போதாநந்த ஞானிகளுடைய அநுபவரூப இருப்பை, மாயயா மோஹிதா மர்த்யா-அஜ்ஞானத்தினால் பிரமத்தை யடைந்த மனிதர்கள், ஸர்வதாநைவ ஜாநந்தி - எப்பொழுதும் தெரிந்துகொள்ளவே யில்லை.

ஹேகேஶவ - ஓ கேசவனே! பஹுவிஜ்ஞாநிநாம் விஶேஷாம் ஐயம் ஸத்வஸிஜாநிஷ்டா - அஞ்ஞான காரியபுத்தி விருத்தியினால் உண்டாகாததாயும், தானாகவே ஸித்தித்திருப்பதாயு மிருக்கிற நிருபாதிக பூர்ணப் பிரஹ்ம ஞானத்தை அடைந்த ஆத்மஞானியினுடைய இந்தஞான நிஷ்டையானது, நமாம்ஸ சக்ஷுஷாம் த்ரஷ்டும் நஶக்யாஸவ - மாம்ஸக் கண்ணின் பார்வையை உடையவர்களுக்குத் தெரிந்துகொள்ளுவதற்குச்சாமர்த்தியம் இல்லவேஇல்லை. கூடஸ்தம் -சீதோஷ்ணம், உத்பத்தி நாசம், பசி தாகம் முதலான இருமைகளற்றதாயும், நிராகாரம் - சரீராதி அவயவங்களில்லாததாயும், நிரஞ்ஜநம் - தமோ குணத்தினுலுள்ள மறைவில்லாததாயம், நித்யம் - நாசமற்றதாயும், ஶாஸ்வதம் - அவித்தையினால் தோன்றி மறைகிறதாயுள்ள அசுத்த நாம ரூபங்களில்லாததாயும், நிரா

ஸாஸம்-வேறுவிதமாய்க்காட்டும்மயக்கத்தோற்றமில்லாத தாயும், ஸம்வித்ரூபம்-ஸ்வபாவப் பிரகாசமுள்ளதாயும், பராநந்தம் - அஞ்ஞான விஷய ஸம்பந்தமில்லாத மேலான ஆனந்தமாயும், ஸர்வகதம்-வியாபகமாயுமிருக் கிற தன்னை, யோவேதாந்தேஷு - எந்த மகா புருஷன் வேதாந்த சாஸ்திரங்களினால், ஏவம் விஜாநாதி - இந்தப் பிரகாரம் ஸந்தேக விபரீதங்களறத் தெரிந்து கொண்டு, ஸாக்ஷாதநுபவ நிஷ்டிதம் - தன்னுடைய அனுபவத்தினாலேயும் நிச்சயத்தை யடைந்தானோ, ஸோதிவர்ணாச்ரமீ - அந்த திவ்ய ஞான ஸித்த புருஷனே வர்ணாசிரம தர்மங்களைக் கடந்திருப்பவன். ஸஏவ குருருத்தம: - அந்த மகா புருஷன் தான் உத்தமர்களாயுள்ள குருக்களுக்குள் உத்தமமான குரு நாதன். நாந்ய: - அஞ்ஞான காரிய நாம ரூபப் பிர பஞ்சங்களை ஸத்தியமாகப் பார்க்கப்பட்டவர்களன்று.

(தா - ம்) ஹே கேசவனே! ஆகையினாலே அஞ்ஞானத் தினால் வந்த பிராம்மணன்முதலிய வர்ணங்களும் அவற்றிற் குட்பட்ட பிரம்மசரியம் முதலான ஆசிரமங்களும் ஆத்மா அனாத்மாக்களின் லக்ஷணந் தெரியாததான மயக்கத்தினால் பூர்ணப்பிரகாச ஆத்மாவில் கற்பிக்கப்பட்டவை; வாஸ்தவ மாகவுள்ள பிரகாச ஆத்மாவை யதார்த்தமாகத் தெரிந்து கொண்டவனாலே அந்த கற்பனா நாம ரூப வர்ணாசிரமங்கள் இல்லை.

உண்டாகிற அஞ்ஞான காரியங்களை நாசஞ் செய்கிற வனே! யதார்த்த ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட ஞானிகளுக்கு இன்னது செய்யவேண்டுமென்ற விதியும் இன்

னது செய்யக்கூடாதென்ற விலக்குமில்லை. அவ்விதமே தோன்றி மறைவதான எதுவுமில்லை. ஹே தாமரைக் கண்ணனே! உபாதிகளோடுள்ள நாம ரூபங்களின் ஸம்பந்தமில்லாத பூர்ண போதாநந்த ஞானிகளினுடைய அனுபவ ரூப இருப்பை (மயக்கத்தை உத்பத்தி செய்கிற அஞ்ஞானத்தினால்) பிரமத்தை யடைந்த (ஜனன மரணமே சுவதர்மமாகவுடைய) மனுஷ்யர்கள் எப்பொதும் தெரிந்துகொள்ளவேயில்லை. ஹே கேசவனே! அஞ்ஞான காரிய புத்தி விருத்தியினால் உண்டாகாததாயும் தானாகவே ஸித்தித்திருப்பதாயுமிருக்கிற நிருபாதிக பூர்ணப் பிரஹ்ம ஞானத்தையடைந்த ஆத்ம ஞானியினுடைய இந்த ஞான நிஷ்டையானது, மாம்ஸக் கண்ணின் பார்வை யுடையவர்க்குத் தெரிந்துகொள்ளச் சாமர்த்தியம் இல்லவே இல்லை. சீதோஷ்ணம், சுகதுக்கம், உத்பத்தி நாசம் முதலான இருமைகளில்லாததாயும் சரீராதி அவயவங்களற்றதாயும் தமோ குணத்தினாலுள்ள மறைவுதலில்லாததாயும், நாசமற்றதாயும், அவித்தையினால் தோன்றி மறைகிறதாயுள்ள அசுத்த நாம ரூபங்களில்லாததாயும், வேறுவிதமாகக் காட்டும் மயக்கத் தோற்றமில்லாததாயும், ஸ்வபாவப் பிரகாசமுள்ளதாயும், அஞ்ஞான விஷய ஸம்பந்தமில்லாத மேலான ஆநந்தமாயும் வியாபகமாயுமிருக்கிற தன் ஸ்வரூபத்தை எந்த மகா உத்தம புருஷன் வேதாந்த சாஸ்திரங்களினால் ஸந்தேக விபரீதங்களறத் தெரிந்துகொண்டு தன்னுடைய அனுபவத்தினாலேயும் நிச்சயத்தை அடைந்தவனோ, அந்த திவ்விய ஞான ஸித்த புருஷனே வர்ணாசிரம தர்மங்களைக் கடந்திருப்பவன். அந்த மகா புருஷன் தான் உத்தமர்களாயுள்ள குருக்களுக்குள் உத்தமமான குருநாதன்; அஞ்ஞான காரிய நாம ரூபப் பிரபஞ்சங்களை ஸத்தியமாகப் பார்ப்பவர்களன்று. (31-36)

(வி - ரை.) "கதிவண-ூாமுூ8ං ரூ-லிவං ஸஹிஉ-நாநு ஒகூணං। யொ:நஜா-நா-தி ஸொாzவிஆாநு கஉா8-லெகா ஹவிஷ்ூ-தி - ஸ்தூல சரீராதிகளில் தோற்றுவதான வர்ணு சிரம தர்மங்களில்லாததாயும் ஸச்சிதாநந்த லக்ஷணமுள்ளதாயும் இருக்கிற பூர்ணப் பிரகாச ஆத்மஸ்வரூபத்தை யறியாமல் அஞ்ஞான காரிய நாம ரூபப் பிரபஞ்சங்களை ஸத்தியமாகவும் பஞ்சகோசங்களைத் தானென்றும் சப்தாதிவிஷயங்களைத் தன்னுடையதென்றும் பார்க்கிற அவித்தியாவசக புருஷன் எப்பொழுது (இந்த துக்க ரூப ஸம்ஸாரப் பிரபஞ்சத்தினின்றும் வேறுபட்டதான ஆத்ம ஸ்வரூபத்தை யடைகிற) முக்தியை அடையப் போகிறான்?" என்றபடி எவன் சரீரத்தைஅடைந்த தன் பரம்ப்பிரயோஜனமான நித்தியசுத்த புத்த முக்த ஸ்வரூபமாயும், அவித்தியா காம கர்மாதிகளற்றதாயும், இருக்கும் ஆத்மாவை ஸத்வ குணப்பிரதான அந்தக்கரண விருத்தியினால் தானகச் சந்தேக விபரீதங்களில்லாமல் நிச்சயமாகத் தெரிந்துகொண்டானே அந்த மகா ஞான ஸித்த புருஷன் தான் வர்ணுசிரம தர்மங்களைத் தாண்டி நிற்பவன். அந்த மகா புருஷன் தான் உத்தமர்களாயுள்ள குரவர்களுக்குள் உத்தம குருநாதன். மற்றவர்களன்று. (31-36)

(அ) ஈசற்கும்அதி வர்ணுசிரமிக்கும்
எத்துணைப் பேதமும் இலையென விளம்பல்.

(அ - கை.) யமாஉ-ரூ-ஹஸ்தெயெவெஸொயதெயெவெ ஸொாதயாஉ-ரூ-ஃ। வ-ூஜ-நீயொா8ஷாஹக்ஷ்ூா-நஹெஷொ விஉ்ூ-தெzநயொஃ - எவ்விதம் குருநாதன் மேலானவரோ அவ்விதமே ஈசுவரனும் மேலானவர்; எவ்விதம் பக்தனுடைய இஷ்டங்களை நிறைவேற்றுவதில் ஈசுவரன் ஸமர்த்தனே அவ்

விதமே ஸத் சிஷ்யனுடைய மனேபீஷ்டங்களைப் பூர்த்தி செய்வதில் ஞான குருவும் ஸமர்த்தனே. ஆகையால் இருவரும் மேலான பக்தியினல் பூஜை செய்வதற்குரியவர்களே; ஈசுவரனுக்கும் குருவுக்கும் சொற்பமும் வித்தியாசம் கிடையாது. ''நாவமந்யேத தத்வவித்'' யதார்த்த ஆத்ம தத்துவத்தை அறிந்த மகா ஞானியை அவமானம் செய்யக்கூடாது. என்றபடி, எவ்விதத்திலும் ஆத்ம ஞான குருவானவன் ஈசுவரனே ஆகையால் அவனுக்குச் செய்யக்கூடிய, பூஜை, தன்னுடைய உடைமை முதலியவைகளைக் கொடுத்துத் திருப்தி செய்வித்தல், முதலான மேலான தர்மத்தில் நடந்துகொள்ளுபவர்களுக்குச் சகல மனேபீஷ்டங்களும் ஸித்திக்கிறதென்றும் எந்த அஞ்ஞான புருஷன் அகங்காரத்தினல் அந்த ஞானிக்குக் கெடுதலான காரியங்களைச் செய்கிருனே அவனுக்கு அதனல் ஏற்படக் கூடிய துக்கத்தை நிவர்த்தி செய்ய ஈசுவரனுக்கும் கூட ஸாமர்த்தியமில்லையென்றும் சொல்லுகிருர்.

யத்ர நித்யம் வஸேஜ்ஞாநீ தத்ராஹம் ஸபுத்ராஶ்ரித꞉।
நிமேஷம் வா தத³ர்த⁴ம் வா யத்ர ஜ்ஞாநீ ஸமாஶ்ரித꞉॥ 37
தத்ர தீர்தா²நி ஸர்வாணி திஷ்ட²ந்த்யேவ ந ஸம்ஶய꞉।
யோऽர்தி²ஷ்டம் ஸஹஸ்ராதி²ஷ்டஸ்ய கரோத்யஜ்ஞாநதோऽதவா॥
விப்ரஸ்ய ஸோऽர்தி²ஷ்டம் கரோத்யேவ ந ஸம்ஶய꞉।
க்ருத்ஸ்நஸ்ய ஸம் விஷ்ணோ விஷஹம் ப்ரவக்ஷ்யதே॥ 39
தே ஶ்ரியா ஸஹ ஸந்ஜாநாத்ர காயபாவிசாரணா।
தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந ஸம்பூஜநீயா விஶேஷத꞉॥ 40

(ப - ம்.) ஹே ஹரே - ஸகல பாபங்களை நாசஞ் செய்கிற ஓ ஹரியே! யத்ர நித்யம் வஸேஜ்ஞாநீ - எந்தவிடத்

தில் பூர்ண ஞானியானவன் வாஸஞ் செய்கிருனே, தத்ர அஹம் ஸர்வதா ஸ்தித: - அந்தவிடத்தில் நான் (ஈசுவரன்) எப்பொழுதுமிருக்கிறேன். நிமேஷம் வா ததர்த்தம் வா - ஒரு நிமிஷமாவது அரை நிமிஷமாவது யத்ர ஜ்ஞாநீ ஸ்தித: - எந்த இடத்தில் ஞானியிருக்கிருனே, தத்ர - அங்கே, ஸர்வாணி தீர்த்தானி - ஸகல தீர்த்தங்களும், திஷ்டந்த்யேவ ந ஸம்ஶய: - ஸாக்ஷாத்தாகவே யிருக்கின்றன; இதில் கொஞ்சங்கூடச் சந்தேகமில்லை. (37)

ய: - எந்த மனிதன், அஜ்ஞாநதோ மதாத்வாபி வா - அறிவில்லாமலும் சரீர மதத்தினலும், ப்ரஹ்மநிஷ்டஸ்ய - பிரம்ம நிஷ்டையுடைய பூர்ண ஞானிக்கு, அநிஷ்டம் கரோதி - (தன் மனம் வருத்தப்படக்கூடிய) அநிஷ்ட காரியத்தைச் செய்கிருனே, ஸவிமூட: - அந்த அதமனை மூடன், மமாநிஷ்டம் கரோத்யேவ - எனக்கு (ஈசுவரனுக்கு)ங் கெடுதியைச் செய்தவனுகவே ஆகிருன், ந ஸம்ஶய: - ஸந்தேகமேயில்லை. (38)

ஹே விஷ்ணோ - ஓ வியாபன சீலமுள்ளவனே! க்ருதார்த்தம் - பூர்ணப் பிரகாச ஆத்ம ஞானியையும், மாம் - என்னையும் (ஈசுவரனையும்), யே - எந்த அதம புருஷர்கள், விபின்னம் வ்யவதந்தி - பேதப்படுத்திச் சொல்லுகிறார்களோ, தே ஜ்ஞாநமூடா ஏவ - அந்த (கெட்ட) மனிதர்கள் அறிவற்ற மூடர்களே; நாத்ர கார்யா விசாரணா - அந்த விஷயத்தில் ஒன்றும் விசாரிக்க வேண்டியதேயில்லை. (39)

தஸ்மாத்-ஆத்மவித: - ஆகையினால் பூர்ணாத்ம ஞான நிஷ்டையுடையவர்கள். ஸர்வேப்ய: - யாவரினும், விசேஷத: - விசேஷமாக, பூஜநீய: - பூசித்தற்கு உரியவர்களேயாம். (40)

(தா - ம்.) ஸ க ல பாபங்களையும் நாசம் செய்கிறவனே! எந்தவிடத்தில் பூர்ண ஞானியானவன் வாஸம் செய்கிறானோ அந்த இடத்தில் நான் (ஈசுவரன்) ஸதா இருக்கிறேன். ஒரு நிமிஷமாவது அரை நிமிஷமாவது எந்தவிடத்தில் ஞானியிருக்கிறானோ அந்தவிடத்தில் ஸகல தீர்த்தங்களும் ஸாக்ஷாத்தாகவே இருக்கின்றன; இதில் கொஞ்சங்கூடச் சந்தேகமில்லை. எந்த மனுஷ்யன் அறிவில்லாமல் சரீர மதத்தினால் பிரஹ்ம நிஷ்டையுடைய பூர்ண ஞானிக்குத் (தன் மனம் வருத்தப் படக்கூடியதாகத் தான் நினைக்கும்) கெடுதியான காரியத்தைச் செய்கிறானோ அந்த அதமனான மூடன் எனக்கு (ஈசுவரனுக்கு)க் கெடுதியைச் செய்தவனாகவே ஆகிறான். ஸந்தேகமேயில்லை. ஹே வியாபன சீலமுள்ளவனே! பூர்ணப் பிரகாச ஆத்ம ஞானியையும் என்னையும் எந்த அதமர்கள் விசேஷமாகப் பிரிவு படுத்திச் சொல்லுகிறார்களோ அந்த கெட்ட மனிதர்கள் அறிவில்லாத மூடர்களே; அந்த விஷயத்தில் விசாரிக்கவே வேண்டியதில்லை. ஆகையினாலே பூர்ணாத்மஞான நிஷ்டையை யுடைய அவர்களே எல்லா மனுஷ்யர்களாலேயும் மிகவும் சிரத்தா பக்தியுடன் பூஜை செய்தற்கு உரியவர்களாவார். (37-40)

வி - ரை. ஈண்டு ஈசனுக்கும் அத்தியாத்ம நிஷ்ட அதிவர்ணாசிரமிக்கும் அவிநாபாவ சம்பந்தமும், ஐக்கியமும் கூறப்

படுகின்றன. சுத்தஸத்துவ மாயோபாதிகனான காரணேச்வரனுக்கு ஆவரணமில்லையென்பது சாஸ்திரங்களில் மிகப் பிரசித்தமாம். அங்ஙனமே ஜீவன் முக்தனுக்கும் ஆம். ஆகவே இருவர்க்கும் தங்கள் ஸ்வரூபத்தில் மறைப்பின்மையின் அபேதங்கூடும். அத்தியாத்ம நிஷ்டர்கள், ஸதா, அஸ்தி பாதி பிரிய வடிவசிவஸ்வரூபத்தையே அநுஸந்தானஞ் செய்துகொண்டிருப்பதனால், அநந்ய சிந்தனையுடையவர்கள். அவர்களின் யோக க்ஷேமத்தின் பொருட்டு ஈச்வரன் அவர்கள் வசிக்கும் இடங்களில் எல்லாம் அவிநாபாவமாய் வசித்துக்கொண்டிருப்பன். அவிநாபாவமென்பது புகையுள்ள விடத்திலெல்லாம் நெருப்பு இருத்தல் போலவாம் ஈச்வரன் ஞானியின் ஹிருதயாகாசத்தில் விளங்குவதால் ஞானியின் அநிஷ்டம் ஈச்வரனது அநிஷ்டமேயாம். ஆதலின் ஈசனுக்கும் அதிவர்ணாச்ரமிக்கும் யாதொரு பேதமும் இல்லை - இங்ஙனம் அபேதமும் அவிநாபாவ சம்பந்தமும் கூறப்பட்டதென்க.

(கூ) சாஸ்திராதிகளின் சாரமினைத்தேனல்.

(அ - கை) ''ஶாஸ்த்ராண்யதீத்ய மேதாவீ ஜ்ஞாநவிஜ்ஞாநதத்பரः । பலாலமிவ தான்யார்த்தீ த்யஜேத் ஸர்வமஶேஷதः ॥ - எங்ஙனம் நெல் முதலிய தான்யாதிகளை யிச்சித்தவன் அவற்றோடு கலந்துள்ள குப்பை கூளங்களைத்தள்ளி தான்னிய மணிகளைமாத்திரம் கொள்வானோ அங்ஙனமே, வேத சாஸ்திராதிகளில் உபாதி சம்பந்தமாயும் விவாதத்திற்கு விஷயமாயுமுள்ள நிஸ்ஸாரங்களைத்தள்ளி நித்திய நிருபாதிக ஸாரரூபமாயுள்ள ஆத்மஸ்வரூபத்தையடைய வேண்டுமென்று இங்குக் கூறப்படுகின்றது.

𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌮𑌯𑌾𑌰𑍍𑌥𑌃 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌸𑍍𑌤𑍇 ।
𑌕𑌥𑌿𑌤𑌸𑍍𑌸𑌾𑌰𑌭𑍂𑌤𑍋𑌽𑌯𑌂 𑌶𑍇𑌷𑍋𑌽𑌨𑍍𑌯𑍋 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌃
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌧𑍀𑌤𑍍𑌯 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 𑌗𑍁𑌰𑍋𑌰𑌭𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑌾𑌨𑌿 𑌵𑍈 ।
𑌪𑌲𑌾𑌲𑌮𑌿𑌵 𑌧𑌾𑌨𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑍀 𑌤𑍍𑌯𑌜𑍇𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌶𑍇𑌷𑌤𑌃 ॥

(ப - ம்) 𑌮𑌯𑌾 - என்னால் (ஈச்வரனால்) 𑌤𑍇 - விஷ்ணுவாகிய உனக்கு, 𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 - வேதவேதாந்த வாக்கியங்களுக்கு, 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌤𑌃 - சுருக்கமான அர்த்த மா (ஆத்ம நிஷ்டையா)னது, 𑌕𑌥𑌿𑌤𑌃 - சொல்லப்பட்டது. 𑌅𑌯𑌂 - இது (ஆத்மநிஷ்டை) 𑌸𑌾𑌰𑌭𑍂𑌤𑌃 - மிகவும் ஸாரமான விஷயமாகும். 𑌶𑍇𑌷𑍋𑌽𑌨𑍍𑌯𑌃 - இதனினும் வேறானவை, 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌃 - சாஸ்திரத்தைப் பெருக்குகின்றவைகளேயாம். (41)

ஆதலின், 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 - புத்திசாலியானவன், 𑌧𑌾𑌨𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑍀 𑌪𑌲𑌾𑌲𑌮𑌿𑌵 - அரிசியை யிச்சித்தவன் எங்ஙனம் உமியை நீக்கிவிடுவானோ அங்ஙனமே 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌧𑍀𑌤𑍍𑌯 - சாஸ்திரங்களை அத்தியயனஞ் செய்து, 𑌤𑌾𑌨𑌿 - அவைகளை 𑌗𑍁𑌰𑍋𑌃 - குருவினிடத்தில் 𑌅𑌭𑍍𑌯𑌸𑍍𑌯 - அப்பியாஸமுஞ் செய்து அதாவது ஸாரபூதமான ஆத்மஞானத்தைப்பெற்றுப்பின்னர், 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍 - எல்லா சாஸ்திரங்களையும் விட்டு விடவேண்டும். 42

(நாம்) இவ்விதமாக ஸாரபூதமாயுள்ள வேதவேதாந்தங்களின் அர்த்தமானது (ஈச்வரனாகிய) என்னால் (விஷ்ணுவாகிய) உனக்குச் சுருக்கமாய் சொல்லப்பட்டது மற்ற விஷயங்கள் சாஸ்திர விஸ்தாரமேயாகும். 41

ஆதலின் மேதாவியானவன் சாஸ்திரங்களைப்படித்து அவைகளைச் சற்குருவினிடம் அப்பியஸித்து எப்படி தான்யத்தில் இச்சையுள்ளவன் உமியை விலக்கி அரிசியைக் கொள்ளுகிறானோ அப்படியே சப்த ஜாலங்களான எல்லா சாஸ்திரங்களையும் விட்டு லக்ஷணையால் குறிப்பிக்கப்படும் ஆத்ம ஸ்வரூபத்தைக் கொள்ளவேண்டும். 42

(வி - ரை.) "யாவாநர்த்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே। தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:॥" பூமண்டலம் முழுமையும் ஜலம் நிறைந்திருக்கும்பொழுது (தாக முள்ளவனுக்கு) ஒரு தடாகம் அல்லது கிணறு எவ்வளவு பிரயோஜனப் படுமோ அவ்வளவே தத்துவஞானிக்கு வேத வேதாந்தங்கள் முதலிய சாஸ்திரங்களால் பிரயோஜனமாம்; அதாவது அத்தியாத்ம சாஸ்திரங்களால் அவனுக்கு யாதொரு பிரயோஜனமும் இல்லை யென்பது கருத்து - ஸ்வரூபமாயுள்ள ஆத்ம தத்துவத்தை யறிந்த பின்னர் சாஸ்திர ஜாலங்களால் யாதொரு பயனுமில்லை யென்பது இதன் திரண்ட பொருளாம்.

(ய) பிறப்பின் பெரும்பயன் - பேரின்பமென்னலோ
பதேச வாக்கியத் - துயர்ச்சியை யுரைத்தல்.

(அ - கை.) "ஜந்தூநாம் நரஜந்ம துர்லபம்" எப்பிறப்பிலும் மானிடப் பிறப்பு அரிது. அதிலும் அங்க ஈனமற்றபுருஷ ஜன்மமுமெடுத்துப் பரமபுருஷார்த்தமாகிய ஆத்மலாபத்தில் பிரவிர்த்தி செய்யாமல், சப்தாதி விஷயங்களில் பிரவிர்த்திப்பவன் எங்ஙனம் கடைத்தேறுவான்? ஆதலின் மனிதப் பிறவியை யெடுத்தவன் சற்குருபாற்சென்று தன்னுடைய நிஜவடிவத்தைத் தெரிந்து கொண்டு, அபரோக்ஷ

மாய் அறிந்து, ஸர்வ அநர்த்தங்களினின்றும் விடுபடுதல் வேண்டுமென்று இங்கே கூறப்படுகின்றது.

துர்லபம் ப்ராப்ய மாநுஷ்யம் தத்ராபி விப்ரதேஹகம் ।
வ்யாபகம் ச மஹாவிஷ்ணோ வேதாந்தஶ்ரவணாதிநா ॥
அதிவர்ணாஶ்ரமம் ரூபம் ஸச்சிதாநந்தலக்ஷணம் ।
யோ ந ஜாநாதி ஸோऽவித்வாந் கதா முக்தோ பவிஷ்யதி ॥

(ப - ரை.) மஹாவிஷ்ணோ - ஹே மஹா விஷ்ணுவே! துர்லபம் - பெறுதற்கரிய, மாநுஷ்யம் - மனிதப்பிறவியை, ப்ராப்ய - அடைந்தும், தத்ராபி விப்ரதேஹகம் - அதிலும் உத்தமமான பிராம்மண சரீரத்தைப் பெற்றும், வேதாந்தஶ்ரவணாதிநா - வேதாந்த மஹாவாக்கிய உபதேசம் பெற்று அவற்றின் அர்த்த விசாரத்தினால், வ்யாபகம் - வியாபகத்தன்மை யுள்ளதாயும், அத்வயம் - இரண்டாவதற்றதாயும், ஸச்சிதாநந்தம் - நித்தியஸ்வயம் பிரகாச ஆநந்த கனமாயுமிருக்கிற, அதிவர்ணாஶ்ரமம் ரூபம் - வர்ணாச்சிரமாதி கற்பனைகளைக் கடந்த அதிஷ்டான ஸ்வரூபத்தை, யோ ந ஜாநாதி - எவன் அறிந்து கொள்ளவில்லையோ, ஸ: - அந்த, அவித்வாந் - அஞ்ஞபுருஷன், கதா முக்தோ பவிஷ்யதி - எங்ஙனம் ஸகல அநர்த்தங்களினின்றும் விடுபடப் போகிறான்? என்றால் அவனுக்கு முக்தியேயில்லை யென்பது கருத்து.

(தா - ம்.) ஹே மஹா விஷ்ணுவே! பெறுதற்கரிய மனித சரீரத்தினைப் பெற்றும் அதிலும் உத்தமமான பிராம்மண சரீரத்தைப் பெற்றும், எவன், வியாபகமாயும், இரண்டாவதற்றதாயும், நித்திய சிதாநந்த கனமாயுமுள்ள தன்

ஆத்ம ஸ்வரூபத்தை, விவேகாதி ஸாதனங்களுடன் கூடிய வனைச் சற்குருபாற் சென்று வேதாந்த மஹா வாக்கிய உபதேசம் பெற்று அபரோக்ஷமாய் அறியவில்லையோ அந்த அஞ்ஞன் எங்ஙனம் ஜனன மரணவடிவ சமுஸாரபந்தத்தி னின்றும் விடுதலை அடையப் போகின்றான்? அவனுக்கு விடுதலையே கிடையாது என்பது கருத்து. 43-44

(வி - ரை.) "𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑍀𑌵𑌿𑌨𑌃। 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑍍𑌸𑍁 𑌨𑌰𑌾𑌃 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾𑌃। 𑌨𑌰𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑌯𑌃" ஸகல பூதங்களிலும் பிராணிகள் மேலானவை - எல்லாப் பிராணிகளிலும் மனத்தோடு கூடியவைசிரேஷ்டமானவை. மனத்தோடுகூடிய பிராணிகளில் மனிதர்கள் மேலானவர்-அவர்களிலும் பிராஹ்மணன் சிரேஷ்டனுவன்" என்ற பிராமணப்படி மனிதப்பிறவியும், அதிலும் ஸகல இந்திரிய வன்மையோடுகூடிய சரீரமும், அதிலும் தீரத்தன்மை வாய்ந்த மனத்தையும் பெறுதல் அரிதினும் அரிதாம்.

ஈண்டு, பிராஹ்மண சரீரமென்பது பிரஹ்மத்தை அபரோக்ஷமாய் அறிதற்குரிய வன்மையோடு கூடியபுத்தி விருத்தியையுடைய சரீரமென்பது பொருளாம்.

ஜனன மரண வடிவ ஸம்ஸாரபந்த நீக்கத்திற்கு வேதாந்த மஹாவாக்ய அர்த்த நிச்சயமே நேர் சாதனமாம். அதாவது "தத் - துவம் - பதங்களின் ஐக்கியார்த்த ஞானமின்றி பந்த நீக்கமின்று" என்பது கருத்தாம். ஜீவப் பிரஹ்ம ஐக்கிய அபேத தரிசனமாகிய ஞானம் சற்குரு உபதேசமின்றிச் சித்திப்பதில்லை.

யதார்த்தமாய் உயர் குலத்திற் பிறந்திருந்தும் தாழ்ந்த குலத்திற் பிறந்தேன் என்று மயங்கிய கர்ணனுடைய துன்பமானது ஆப்தையாகிய குந்தியின் (உபதேச) மொழியினால் ஒழிந்ததேயன்றி மற்றொன்றாலன்று என்பது இங்கே அறியத்தக்கது. இதனால் மானிடப் பிறவியின் மாண்பும் குரு உபதேச உயர்ச்சியும் கூறப்பட்டன வென்க.

(௰க) ஞானிகட்குலகத் தோற்றமுளதெனல்

ஞானபரம்பரை - நண்ணுதற்கேயெனல்.

(அ - கை.) ஸகல அநர்த்த வடிவ ஸம்ஸார பந்தத்தை நிவர்த்திக்கும் மஹாமகிமை பொருந்திய மஹாவாக்கிய உபதேசஞ் செய்தற்கு அஞ்ஞ புருஷர்கள் ஆற்றலுடையவரல்லர். முத்தர்கட்கோ உலக நாட்டமேயில்லை. யாதலின் எங்ஙனம் சிஷ்யர்கள் உபதேசம் பெறுவது? எங்ஙனம் வித்தியா ஸம்பிரதாயப் பிரவிருத்தி எற்படுவது? என்றுசங்கையுறின், அங்ஙனமன்று. ஞானிகட்கு உலகத்தோற்ற முளதாகலாம். உலகத் தோற்றத்தினால் அவர்கட்கு யாதொரு துன்பமுமில்லை. இத்தகைய ஞானிகள் ஜீவன் முத்தர்களெனப்படுவர். இவர்களால்தான் ஞான பரம்பரையின் அபிவிர்த்தியாதல் கூடும். எந்த தேகத்தின்கண் எந்த காலத்தில் ஆத்ம அபரோக்ஷஜ்ஞானம் உண்டாயதோ, அதுமுதல் அந்த தேகத்தின் வீழ்ச்சி வரையுந்தான் உலகத் தோற்றம் உண்டு. என்பது கூறப்படுகின்றது.

யஸ்மிந் தேஹே ஹ்யஸம் ஜ்ஞாநம் அபரோக்ஷம் விஜாயதே ।
[illegible] ॥

(ப - ம்) யஸ்மிந்தேஹே புண்ணிய விசேஷத்தோடு கூடிய எந்த சரீரத்தின்கண், அபரோக்ஷஜ்ஞாநம் - தானே

ஸச்சிதாநந்த அகண்ட சிவஸ்வரூப மென்னும் அறிவு, ஊஹம் - சந்தேக விபரீதங்களற, விஜாயதே - உண்டாகிறதோ, தத்தேஹநாசபர்யந்தமேவ - அந்த தேகத்தின் வீழ்ச்சி வரையுந்தான், ஸம்ஸாரஸம்பந்தம் உலகத்தோற்றம் (உண்டு.) 45

(தா - ம்) உத்தம புண்ணிய விசேஷத்தோடு கூடிய எந்த சரீரத்தில், தானே நித்திய சுத்த புத்த முக்த ஸ்வரூப சிவமென்னும்(சந்தேக விபரீதங்களற்ற) ஞானம் உண்டாகின்றதோ அந்த தேகத்தின் நாசபரியந்தந்தான் அவனுக்கு உலகத் தோற்றம் உண்டு.

(வி - ரை) அபரோக்ஷ ஞானத்தினால் ஆவரண நீக்கமும் உலகத் தோற்றத்தில் சத்தியத்துவப் பிரமமும் நீங்குகின்றன. உபாதியாகிய காரியகரண ஸங்காத (கூட்ட) மாகிய சரீரமுள்ள வரைக்கும் நாமரூபப் பிரபஞ்சத்தோற்றமிருக்கலாம். இதனால் (உலகத் தோற்றத்தினால்) முத்தர்களுக்கு யாதொரு துன்பமுமில்லை. இங்கே ஞானிகளுக்குச் சரீர நாசபரியந்தந்தான் உலகத்தோற்ற முண்டென்று கூறியது எற்றிற்கோவெனின், முகத்தாலும், அகத்தாலும், ஒழுக்கத்தாலும் ஜீவன் முத்த அதிவர்ணாச்சிரமிகள் இன்னாரென அறிந்து அவர்களை யணுகி அவருக்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தஞ்செய்து அவரிடத்தில் உபதேசம் பெற்று மனிதப் பிறவியின் பெரும்பயனைப் பெறுதற்கேயாம்.

(டீஉ) விதேகமுத்தியின் - மேன்மையைக்கூறல்.

(அ - கை) ஜீவன் முத்தர்க்குப் பிராரப்த உபாதியாகிய காரிய கரண ஸங்காதரூப சரீர நாசத்திற்குப்பின் உலகத்

தோற்றமேயில்லை. இதுதான் விதேக மோக்ஷமென்று கூறப் படுகின்றது.

ப்ராகபி நாஸ்தி ஸம்ஸாரஃ பரமார்த்தத: ।
கதம் தஸ்யாஸ்தி தேஹவிநாஶாதூர்த்வமச்யுத ॥ (46)

(ப , ம்) பரமார்த்தத: - உண்மையாக, ப்ராகபி - ஞான சித்திக்கு முன்னேயும், ஸம்ஸாரஃ - (கற்பித) நாமரூபப் பிரபஞ்சத்தோற்றம், நாஸ்தி - இல்லவே யில்லை - இங்ஙனமாக, அச்யுத - ஹே அச்சுதனே! தேஹவிநாஶாதூர்த்வம் - காரிய கரண ஸங்காதமான சரீர உபாதியின் நாசத்தின் பின்னரும் தஸ்யாஸ்தி - அந்த கற்பனு ஸம்ஸாரத்தோற்றம், கதம் - எங்ஙனம் கூடும் ?

(தா - ம்) ஹே அச்சுதனே! உண்மையில் இந்த ஸம் ஸாரத் தோற்றம் இல்லவேயில்லை - உபாதியாகிய சரீரத்தால் தோற்றுகின்றது. இத்தோற்றம் சரீர உபாதியின் நாசத் திற்குப் பின்னரும் எங்ஙனம் உண்டென்று கூறலாம் ? முற்று மில்லை யென்பது கருத்து. 46

(வி - ரை.) மயக்கத்தோற்றம் இரண்டு வகை - கான லில் ஜலந்தோன்றுவது ஒன்று - கயிற்றில் அரவு தோன்று வது மற்றொன்று - இவற்றில் முதலது ஸோபாதிக பிராந்தி யாம்; இரண்டாவது நிருபாதிகப் பிராந்தியாம் - நாமரூபப் பிரபஞ்ச ஸம்ஸாரத்தோற்றம் ஸோபாதிகமா (உபாதியோடு கூடியதா)ம். உபாதி நீங்கினுல் மயக்கத்தோற்றமில்லை - சூரிய கிரணமாகிய உபாதியின்றேல் ஜலத்தோற்றமு மில்லை- காரியகரணக் கூட்டமாகிய சரீரமின்றேல் நாமரூபப்பிரபஞ்

சத்தோற்றமும் இல்லை-இங்ஙனம், ‘விமுக்தஶ்ச விமுச்யதே’ முத்தன் மறுபடியும் முத்தியடைகிறான்” என்றபடி ஜீவன் முத்தர்கள் நிர்விசேஷ சின்மாத்திர பிரஹ்ம ஸ்வரூபத்தில் ஸகல உபாதிகளுமற்று இரும்புண்ட நீர்போல் அபேதமாய் இருப்பர். இந்நிலையே விதேக மோக்ஷ ஸ்வரூபமாம். 46

சிவம்

முத்திகண்டம் முற்றிற்று.

---